# ஸ்ரீ வைஷ்ணவ ரத்னமாலா

23



" பார்த்தன் தேர்முன் நின்றானைத் திருவல்லிக்கேணி கண்டேனே "

ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு வேங்கடாசார்யர் ஸ்வாமி மணிவிழா வெளியீடு

கிடைக்குமிடம்: 10, தியாகராஜபுரம் காலனி, மயிலாப்பூர், சென்னை-4

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# விசிஷ்டாத்வைதம் அனுதி

பண்டிதராஜ திருவரங்கம் திருமலை தாதாசாரியர் ஸ்வாமி

கண் காது முதலிய ஜ்ஞானேந்த்ரியங்களால் பல பொருள்களை நாம் அறிகின்றோம். இந்த அறிவு ப்ரத்யக்ஷம் எனப்படுகின்றது. நதியில் புது வெள்ளம் வந்தால், அதன் உத்பத்தி ஸ்தானத்தில் மழை பெய்திருக்கின்றது என்று அறிகின்றோம். வீட்டிற்குள்ளே நாம் இருக்கும்போது, இடி சப்தம் கேட்டால் ஆகாயத்தில் மேகம் இருக்கின்றது என்று அறிகின்றோம். இவ்வித அறிவு அநுமானம் எனப்படுகின்றது. சில ஸமயம் பழுதைப் பாம்பெனக் கொள்கின்றோம். இது ப்ரத்யக்ஷமேயாகிலும் மெய்யறிவு அன்று. போதிய வெளிச்சமில்லாமை என்கிற குற்றத்தினால் இந்த ப்ரத்யக்ஷம் பொய்யறிவாகிவிடுகின்றது. இப்படியே பலவித குற்றங்களால் அநுமானமும் பொய்யறிவாகிவிடுகின்றது. இப்படியன்றி எவ்விதக் குற்றமுமில்லாதபோது உண்டாகும் ப்ரத்யக்ஷமும் அநுமானமும் மெய்யறிவாகும். இவற்றால் அறியப்படுகின்ற பொருள் எல்லாம் மெய்ப் பொருள் ஆகும். பழுதையில் தோன்றிய பாம்பு குற்றத்தினால் தோன்றியது. அருகே சென்று பார்க்கும்போது இது பாம்பன்று, பழுதை என்று உண்மை விளங்குகின்றது. ஆகையால் முன் தோன்றிய பாம்பு பொய்யாகின்றது. முன் இதை க்ரஹித்த அறிவும் பொய்யறிவாகின்றது. இப்படி மேல் எக்காலத்திலும் மறுக்கப்படாததும் எவ்விதக் குற்றமும் இல்லாததுமான அறிவு மெய்யறிவு. இதனால் க்ரஹிக்கப்படும் பொருள் மெய்ப்பொருள். ஸூர்யன் இருக்கின்றான் என்பதை ப்ரத்யக்ஷத்தினாலும் பூமி அவனைச் சுற்றி வருவதனால் இரவும் பகலும் ஏற்படுகின்றன என்பதை அநுமானத்தினாலும் அறிகின்றோம். இப்ரத்யக்ஷத்திலும் அநுமானத்திலும் எவ்விதக் குற்றமும் காணப்படாமையாலும் மறுப்பு இல்லாமையாலும் இவை மெய்யறிவென்றும் ஸூர்யன் முதலியவை மெய்ப்பொருளென்றும் நிச்சயம் உண்டாகின்றது. ஆகவே உலகத்திலுள்ள உண்மைப் பொருள்களை உணர்த்துவதற்கு ப்ரத்யக்ஷம், அநுமானம் என்ற இரண்டு ப்ரமாணங்கள் உள்ளன என்பது ஸித்தம்.

இனி மூன்றாவது ப்ரமாணம் ஒன்று உண்டு. அது வேதம். வேதம் என்ற சொல்லுக்கு "அறிவைத் தரும் அது" என்பது பொருள். இங்கு 'அறிவு' என்று பொதுவாகக் கூறப்பட்ட போதிலும் ப்ரத்யக்ஷம் அநுமானம் என்று முன் கூறிய இரண்டு ப்ரமாணங்களாலும் அறியப்படாத பொருள்களைப் பற்றிய அறிவே கருதப்படுகின்றது. அவற்றால் அறியப்பட்ட பொருளையே இது கூறுமாகில் இது வெறும் அநுவாதமாகுமேயன்றி ப்ரமாணமாகமாட்டாது. மற்றொரு ப்ரமாணத்தினால் அறியப்பட்ட பொருளைக் கூறும் சொல் அநுவாதமெனப்படுகின்றது. ஆகவே ப்ரமாணம் என்ற நிலை நீங்கி அப்ரமாணம் என்ற நிலை வாராமைக்காக மற்ற ப்ரமாணங்களால் அறியப்படாத பொருளை அறிவிப்பதிலேயே வேதத்தின் நோக்கு என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

இப்படியே ப்ரத்யக்ஷத்தினாலும் அநுமானத்தினாலும் நிச்சயிக்கப் பெற்ற உறுதிப் பொருளுக்கு விருத்தமான, அதாவது அதோடு முரண்பாடுள்ள, ஒரு பொருளை வேதம் அறிவிக்குமேயானால், இது ப்ரமாணமன்றி அப்ரமாணமாகிவிடும். ஆகையால் மற்ற ப்ரமாணங்களால் அறியப்படாதவையும் அறியப்பட்டவையோடு முரண்படாதவையுமான பொருள்களையே அறிவித்து ப்ரமாணமாகின்றது வேதம் என்பது ஸித்தாந்தம். இப்படி ப்ரமாணமான வேதத்தின் வாக்யங்களிலிருந்து அவற்றின் அர்த்தத்தை க்ரஹிக்க நாம் ப்ரவர்த்திக்கும் போது நமக்குப் பல சந்தேகங்கள்

உண்டாவது இயற்கை. இப்படி உண்டாகும் ஸந்தேஹங்கள் நீங்கி, "இந்த வாக்யத்திற்கு இப்படித்தான் அர்த்தம் கொள்ள வேண்டும். இப்படிக் கொள்ளக் கூடாது" என்று நிச்சயிப்பதற்கேற்ற வாக்ய ந்யாயங்கள் பல பல இருக்கின்றன. இவற்றை எல்லாம் தொகுத்து 'மீமாம்ஸை' என்கிற ஓர் அரும் பெரும் சாஸ்திரத்தை இயற்றி இருக்கின்றார் ஜைமினி என்னும் மஹர்ஷி. ப்ரத்யக்ஷ அனுமானங்களால் அறியப்படாதவையும் அவற்றால் அறியப்பட்டவற்றுக்கு முரண்படாதவையுமான பொருள்களைத்தான் வேதம் கூறுமென்று கீழே கூறப்பட்ட ஸித்தாந்தம், இம்மஹர்ஷியால் இவர் இயற்றிய மீமாம்ஸா சாஸ்த்ரத்தில் செய்யப்பட்டு, வைதிகர்கள் யாவராலும் அங்கீகரிக்கப்பட்ட ஸித்தாந்தமே.

இம்மஹர்ஷி இம் மீமாம்ஸா சாஸ்த்ரத்தில் வேதத்தின் முதல் பாகத்தில் விதிக்கப்பட்ட கர்ம என்கிற தர்மத்தை ப்ரதான விஷயமாக வைத்து வாக்ய ந்யாயங்களை விளக்கியிருக்கிறார். இவருக்கு ஆசார்யராய், வ்யாஸர் என்றும் பாதராயணர் என்றும் ப்ரஸித்தரான மஹர்ஷியோவெனில் வேதத்தின் கடைசி பாகமாய், அதனாலேயே வேதாந்தமெனப்படுகிறதான உபநிஷத்து உபதேசிக்கின்ற பர ப்ரஹ்மத்தை (பரம புருஷனை)ப்ரதான விஷயமாகக் கொண்டு உபநிஷத்து வாக்யங்களிலிருந்து இப் பர தத்வத்தையும் இதைப் பற்றிய மற்ற விஷயங்களையும் ஸந்தேஹமின்றி நிச்சயிப்பதற்கேற்ற விசேஷ ந்யாயங்களைத் தொகுத்து ப்ரஹ்மமீமாம்ஸை என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்தை இயற்றினாராயினும் ஜைமினி நிரூபித்த வேதப்ராமாண்யத்தின் ப்ரகாரத்தையும், ப்ரமாண வாக்யங்களிலிருந்து அவற்றின் அர்த்தத்தை நிச்சயிப்பதற்கேற்ற ந்யாயங்களையும் அப்படியே அங்கீகரித்திருக்கிறார்.

இப்படி இவ்விரண்டு மஹர்ஷிகளும் நிர்ணயம் செய்திருக்கும் ந்யாயங்களைக் கொண்டே, நாம் வேதத்தின் அர்த்தத்தை நிர்த்தாரணம் செய்ய வேண்டும். வேதாந்தம் என்கிற உபநிஷத்தும் வேதத்தின் ஒரு பாகமாகையால் மற்ற பாகம் போலவே ஒருவராலும் இயற்றப்படாமல் அநாதியாக இருக்கின்றபடியால் மனிதர் இயற்றிய நூல்களுக்குப் போல் இதற்கு எவ்விதக்குற்றமும் கூற முடியாது. ஆகையால் ஜைமினி மஹர்ஷி நிருபித்திருக்கிறபடி, அது முற்றிலும் ப்ரமாணம். ஆகிலும் அதிலுள்ள வாக்யங்களுக்கு மஹர்ஷிகள் காட்டியுள்ள நியாயங்களின்படி அர்த்தம் கொள்ளாமல் அவற்றுக்கு விருத்தமாக நாம் ஒரு பொருளைக் கூறினால் அது உபநிஷத்தின் பொருள் ஆகாது. ஆகவே அவைகளுக்கு முரண்படாமல் அவைகளை அநுஸரித்தே உபநிஷத்து வாக்யங்களுக்குப் பெரியோர்கள் வ்யாக்யானம் செய்திருக்கின்றார்கள். உபநிஷத்து மனிதரால் இயற்றப்படாமல் அநாதியாயிருப்பதால் அதன் உண்மைப் பொருளாக எந்த ஸித்தாந்தம் இருக்கிறதோ அந்த ஸித்தாந்தம் அநாதி என்பது தானே கிடைக்கின்றது.

ப்ரத்யக்ஷமாகப் பல பல உருவங்களையும் அவற்றுக்குக் காரணமான ப்ருதிவீ முதலிய பூதங்களையும் நாம் காண்கின்றோம். கண்ணுக்குப் புலப்படாமல் அவற்றில் அடங்கியிருக்கும் சக்திகளை அநுமானத்தினால் அறிகின்றோம். இவையெல்லாம் ஜடப் பொருள்கள். அதாவது அறிவில்லாப் பொருள்கள்,

நம் உடல் ஐந்து பூதங்களால் ஆகியது. இதற்குள் இதைக் காட்டிலும் வேறுபட்டதாய் ஆத்மா என்ற அறிவுள்ள வஸ்து ஒன்று இருக்கிறது என்பதை தெளிவில்லாத 'நான்' என்கிற ப்ரத்யக்ஷத்தினாலும் அனுமானத்தினாலும் அறிகின்றோம். ஒரு உடலில் உள்ள ஆத்மா மற்றொரு உடலில் அநுபவிக்கப்படும், இன்ப துன்பங்களை அனுபவிக்காமையால் ஒவ்வொரு உடலிலும் வெவ்வேறு ஆத்மா இருக்கிறதென்றும் ஆகவே உடல்கள் போலவே இவ்வாத்மாக்கள் பல பல என்றும் அறிகின்றோம். இவை ஜீவாத்மாக்கள் எனப்படுகின்றன. இவை இவ்வுடல்களில் இருந்து கொண்டு விரும்பிய பொருள்களை இழந்தும் விரும்பாமல் வரும் கஷ்டங்களை

அடைந்தும் வருந்துகின்றன. அல்ப அறிவும் சக்தியும் உள்ளவை. பிறந்து இறந்து அல்லல்படுமவை.

இவ்வித ஆத்மாக்களும் இவற்றுக்கு உடல், இந்த்ரியங்கள், ப்ராணன், வஸிக்கும் இடம், அனுபவிக்கும் வஸ்துக்கள், என்றிவ்விதங்களான ஜடப் பொருள்களும் சேர்ந்தே இவ்வுலகமாகின்றன. ஒருவன் படைக்காமல் இவ்வுலகம் இருக்க முடியாதாகையால் இதைப் படைத்தவன் ஒருவன் இருந்தே தீர வேண்டும். அவன்தான் ஈச்வரன் என்று அநுமானத்தினுல் ஈச்வரனை அறிகிரேம் என்பர் சிலர். இப்படி அறிய முடியாது என்பர் மற்றும் சிலர். இது எப்படியானுலும் ஈச்வரனைப் பற்றிய எல்லா விஷயங்களையும் அறிவிப்பதையே முக்கிய நோக்கமாகக் கொண்டது உபநிஷத்தாகையால் இதுவே இவ்விஷயங்களில் ப்ரமாணம் என்பர் பெரியோர்.

ஈச்வரனை ப்ரஹ்மம் என்றும் பர ப்ரஹ்மம் என்றும் உபநிஷத்துக் கூறுகின்றது பர ப்ரஹ்மம் எது என்ருல் "இவ்வுலகத்தை எல்லாம் படைத்துக் காத்து அழிப்பது எதுவோ அதுவே" என்கிறது. இப்படி உலகம் முழுவதற்கும் காரணமான பரப்ரஹ்மம் ஸர்வஜ்ஞுமென்றும் எல்லா வல்லமையும் உடையதென்றும் தானே கிடைக்கின்றது. ஆயினும் ஸ்பஷ்டமாகவே ஈச்வரன் ஸர்வஜ்ஞனென்றும் ஸர்வ சக்தனென்றும் எவ்விதக் குற்றமும் குறையும் இல்லாதவனென்றும் எல்லா மங்கள குணங்களையும் உடையவனென்றும் உபநிஷத்து சிறப்பித்துக் கூறுகின்றது. ஜீவாத்மாக்கள் தம் ஸ்வரூபத்தில் நித்யர்கள். அது போலவே ஈச்வரனும் நித்யன். அவர்கள் அறிவுள்ளவர்கள். அது போலவே அவனும் அறிவுள்ளவன். இப்படி இவ்விஷயங்களில் ஒற்றுமை இருந்த போதிலும் "ஜீவாத்மாக்கள் தாங்கள் விரும்பியவற்றைப் பெறுவது அவனிடமிருந்தே. இவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுப்பவன் அவனே. இவர்கள் பலர்; அவன் ஒருவனே" என்று இவ்வாறு வேற்றுமையைச் சுட்டிக் காட்டுகின்றது உபநிஷத்து. இப்படியே அவனுக்கு ஸமமானவனே உயர்ந்தவனே மற்ருெருவனில்லை என்கிறது. ஆகையால் ஈச்வரன் ஒருவனே என்பது அறுதியிடப்பட்டிருக்கிறது. ஆகவே ஈச்வரனைப் பற்றிய வரையில் உபநிஷத்து போதிக்கும் ஸித்தாந்தம் அத்வைதமே. அதாவது இரண்டாவது ஈச்வரன் இல்லை, என்பதில் விவாதமில்லை. ஆனுல் "அவன் ஜகத் காரணமாய் ஸர்வஜ்ஞனுய், ஸர்வ சக்தனுய், ஸர்வ கல்யாண குணங்கள் நிறைந்தவனுய் இருப்பதெல்லாம் மாயா ஸம்பந்தத்தினுல். ஸ்வயமாக அவன், எவ்விதக் குணமுமற்ற கேவல சைதந்யமே" என்பது உபநிஷத்தின் ஸித்தாந்தமாகமாட்டாது. ஈச்வரனுடைய பல பல குணங்களை வெகு விரிவாக உபதேசிக்கின்ற உபநிஷத்திற்கு இவ்விதப் பொருள்கொள்வது பொருந்தாது; நேர் முரணுனது; அதை வஞ்சிப்பதற்கு ஒப்பாகும். நிர்குணமென்றும் உபநிஷத்து சொல்லுகிறதே எனில், மீமாம்ஸாந்யாயங்களைக் கொண்டு, இதற்கு என்ன பொருள் என்று நிச்சயிக்க வேண்டும். அப்படிப் பார்க்கும்போது, ஜீவாத்மாக்களைக் கட்டி ஸம்ஸாரத்தில் துன்புறச் செய்கின்ற ஸத்த்வம் ரஜஸ் தமஸ் என்கின்ற முக்குணங்கள் இருக்கின்றனவே அவை இல்லாதவன் ஈச்வரன், என்று இப்பதம் கூறுகின்றது, என்பது விளங்குகின்றது. ஆகவே குண விசிஷ்டனுன ஈச்வரனுடைய அத்வைதமே உபநிஷத்தின் கருத்தில் உள்ளது.

இனி "முதலில் ஸத் என்கிற ப்ரஹ்மம்தான் இருந்தது. ஒன்றே இருந்தது. இரண்டாவதாக எதுவும் இல்லாமல் இருந்தது" என்று ப்ரஹ்மம் தவிர மற்ருென்று எதுவும் இல்லையென்று உபநிஷத்து முழு அத்வைதத்தை ஸ்பஷ்டமாக உபதேசித்திருக்கிறதே, இதனுல் சுத்த ப்ரஹ்மம் தவிர மற்றதெல்லாம் பொய் என்று விளங்கவில்லையோ? எனில் இங்கும் இப்பொருள் உண்மைப் பொருள் அன்று; மேல் "அது பார்த்தது" என்று அதன் ஸங்கல்பம் கூறப்பட்டிருப்பதால் இங்கு ஸத் என்று நிர்குண ப்ரஹ்மம் கருதப்படவில்லை என்பது ஸ்பஷ்டம். "ஸத் என்கிற ப்ரஹ்மம்தான் இருந்தது" என்றவிதனுல் இவ்

வுபநிஷத்தே மேலே விளக்கிக் காட்டு கின்றபடி 'அஸத் இல்லை' என்று நிஷேதம் செய்யப்பட்டதாகிறதேயன்றி ஸத் எனக் கூடிய எந்த வஸ்துவும் நிஷேதிக்கப்பட்டதாகாது.

''ஒன்றே இருந்தது'' என்பதும் மேல் ''நான் பலவாக ஆவேன், பலவாக உண்டாவேன்'' என்று ஸங்கல்பித்து ''அப்படியே ஆயிற்று'' என்று கூறப்படு கிறதாகையால், படைப்புக்குப் பிறகு அது எப்படிப் பலவுருவங்களைக் கொண்டிருந்ததோ அப்படியன்றி படைப்புக்கு முன் ஒரே உருவத்தில் இருந்தது என்ற கருத்துடையது என்பது புலனு கின்றது.

'அது முதலில் ஒன்ருகவே இருந்தது. பிறகு பலவாக மாறிற்று, என்ருல் இது 'மண் முதலில் ஒன்ருகவே இருந்தது; பிறகு சட்டி பானை என்றிப்படிப் பல வாக மாறிற்று' என்பது போலாகின் றது. இங்கு ஒன்ருக இருந்த மண் பல வாக மாறுவதற்குக் காரணமாகக் குய வன் ஒருவன் இருப்பது போல் ஸத்துப் பலவாக மாறுவதற்குக் காரணமாய் அதைக் காட்டிலும் வேறுபட்டவனை ஒருவன் இருக்கின்ருனே என்ற ஐய மெழுகின்றது. அதை நீக்க 'இரண்டா வதாக மற்ருென்று எதுவுமில்லாமல் இருந்தது' எனப்படுகின்றது. ஆகை யால் இங்கு ப்ரமாணங்களால் அறியப் பட்ட எந்த வஸ்துவுக்கும் நிஷேத மில்லை. ப்ரத்யக்ஷத்தினுலும் அநுமானத் தினுலும் அறியப்பட்ட விஷயங்களை விட்டு, அவற்ருல் அறியப்படாத விஷ யங்களில்தான் வேதம் ப்ரமாணமென்று ஸ்தாபிக்கப்பட்டிருப்பதால் நாம் காணும் இவ்வுலகத்தைப் பொய் என்று கூறு வதில் உபநிஷத்துக்குக் கருத்து இருக்க முடியாது. இதைப் பொய்யாக்க அதற்கு வல்லமையும் கிடையாது. இவ்வுலகத் தை அப்படியே உண்மையாகக் கொண்டு இவ்வுலகத்திற்கும் ஈச்வரனுக் கும் உள்ளதாய் நாம் அறியாததான ஸம்பந்தத்தை உபதேசிப்பதிலேயே உபநிஷத்துக்கு நோக்கு.

அறிவற்றது உலகத்திலுள்ள எல்லா உருவங்களாகவும் மாறுகின்ற ப்ரக்ருதி என்னும் ஜடப் பொருள். அறிவு உள்ள தாகையால் இதைக் காட்டிலும் வேறு பட்டதான ஜீவாத்மா அணுவாயும் ஈச் வரனுக்குப் பரதந்த்ரமாயும் இருக்கின் றது. எங்கும் நிறைந்து ஸ்வதந்த்ரனுய் ஸர்வஜ்ஞனுயிருக்கையாலே அவ் விரண்டு தத்த்வங்களைக் காட்டிலும் முற்றிலும் வேறுபட்டது ஈச்வர தத்த் வம். இப்படி இம்மூன்று தத்த்வங்களும் பரஸ்பரம் பேதமுள்ளவைகளாயிருக்க, இவ்வுலகமெல்லாம் முன்பு ப்ரஹ்ம மாகவே இருந்தது என்று அபேதமாகக் கூறுவது எப்படி என்ற ஒரு பெருங் கேள்வி இங்கு எழுகின்றது. இதற்கு உபநிஷத்து வாக்யங்களைக் கொண்டே ஸமாதானம் கூறியிருக்கின்றனர் பெரி யோர். 'நான் பலவாக ஆவேன். அதற் காகப் பிறப்பேன்' என்று கூறிய உப நிஷத்து அதற்கு மேல் ''அது அக்னியா யிற்று. அக்நியாகப் பிறந்தது'' என்று கூருமல் ''அது அக்நியை ஸ்ருஷ்டித் தது'' என்று கூறுகின்றது. இங்கு ஸ்ருஷ்டிகர்த்தாவான ப்ரஹ்மம் வேறு. ஸ்ருஷ்டிக்கப்பட்டதான அக்னி வேறு என்பது வெளிப்படை. இப்படி பேதத் தை, ஸ்பஷ்டமாக வெளியிட்ட அதே உபநிஷத்து அதற்கு மேல் ''அந்த அக்னியிலிருந்து ஜலத்தை ஸ்ருஷ்டிப் பேன் என்று ஸங்கல்பித்தது. அப்படியே ஜலத்தை ஸ்ருஷ்டித்தது'' என்று கூரு மல் ''அந்த அக்னி பார்த்தது; பலவாக ஆவேன். அதற்காகப் பிறப்பேன் என்று, அது ஜலத்தை ஸ்ருஷ்டித்தது'' என்று கூறுகின்றது. இதனுல் அக்னியை உணர்த்தும் சொல்லே ப்ரஹ்மத்தை யும் உணர்த்தும் என்று காட்டுகின்றது உபநிஷத்து. 'பார்த்தது' என்று ஸங் கல்பம் கூறப்பட்டிருப்பதால், ஜலத்தை ஸ்ருஷ்டித்த அக்நி வெறும் ஜடப் பொருளான அக்னியன்றி ப்ரஹ்ம மாகவே அன்ருே இருக்க வேண்டும். இதனுல் ஜடப் பொருளாகையாலும் ப்ரஹ்மத்தினுல் படைக்கப்பட்டதாகை யாலும் அக்னி அதைக் காட்டிலும் வேறு பட்டதாகிலும் ப்ரஹ்மத்தை அக்னி யாகவே சொல்லலாம் என்று விளக்கப் பட்டதாகிறது. இதிலிருந்து மற்ற ப்ர மாணங்களால் அறியப்பட்ட பேதத்தை அப்படியே ஒப்புக் கொண்டு அபேத

மாகப் பேசுகின்றது சாஸ்த்ரம் என்ற அருமையான ஒரு விஷயம் புலப்படுகின்றது. இனி இது எப்படிப் பொருந்தும் என்று பார்க்க வேண்டும். இதை இந்த உபநிடத்தே விளங்க வைக்கின்றது.

மேல் ப்ரகரணங்களில் "இம்மக்கள் எல்லோரும் ப்ரஹ்மத்தினிடத்திலிருந்தே வந்தவர்கள். ப்ரஹ்மத்திலேயே நிலை நிற்கின்றவர்கள். முடிவில் ப்ரஹ்மத்திலேயே ஐக்யமாகின்றவர்கள்' என்கிறது. உண்டாகும் ஒவ்வொரு த்ரவ்யத்திற்கும் காரணாவஸ்தை,காரியாவஸ்தை நாசம் என்ற மூன்று அவஸ்தைகள் உண்டு. பகவானால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட சேதந அசேதந ஸர்வ வஸ்துக்களும் மூன்று அவஸ்தைகளிலும் அவனிடத்திலேயே இருக்கின்றவை. அவனை விட்டு எக்காலத்திலும் பிரியமாட்டா. எந்த நிலையிலும் தன்னை விட்டுப் பிரியாத இந்த வஸ்துக்களையெல்லாம் தன் விருப்பப்படி அந்த அந்த நிலையில் வைக்கின்றான் பகவான். இப்படித் தன்னை விட்டுப் பிரியாத த்ரவ்யங்களைத் தன் இஷ்டப்படி நியமனம் செய்கின்ற அறிவுள்ள வஸ்துவுக்குத் தனிப் பெயர் ஒன்று உண்டு. அதைக் கூறிக் கொண்டு மேலே சொல்லுகின்றது உபநிஷத்து, உத்தாலகர் தன் புத்ரனை ச்வேதகேது வுக்கு உபதேசம் செய்கின்றார் என்ற முறையில்: — "இது வரையில் நான் உபதேசம் செய்த ஸத் என்கிற பரம் பொருளை ஆத்மாவாகக் கொண்டது நாம் காணும் இவ்வுலகமெல்லாம். அது ஸத்யம். அது ஆத்மா" என்று உலகத்தில் அடங்கிய ஒவ்வொரு வஸ்துவுக்கும் பகவான் ஆத்மா. ஒவ்வொரு த்ரவ்யமும் அவனது உடல் என்றதாயிற்று.

இப்படி பகவானுக்கும் உலகத்திற்குமுள்ளது சரீராத்ம பாவ ஸம்பந்தம் என்றதற்குக் கருத்து சரீரத்தைக் குறிக்கும் சொல் எல்லாம் ஆத்மாவையும் குறிக்கும் என்று குறிப்பாகக் காட்டுவதே. "இந்த ப்ராஹ்மணன் வித்வான்" என்கிறோம். இதில் குற்றம் ஒன்றுமில்லை. ஆகிலும் இதில் ஓர் ஆக்ஷேபம் உண்டு. ஆத்மாவில் ப்ராஹ்மணத்வ ஜாதி யில்லை. சரீரத்திலேயே உள்ளது. ஆகையால் ப்ராஹ்மண சப்தம் உடலையே குறிக்கும். ஆனால் வித்வான் என்ற சொல் அறிவாளியைக் குறிக்கின்றதாகையால் அதனுடன் சேராது. உடல் அறிவாளியல்லவே. ஆகையால் இப்படிப் பேசுவது தவறு எனலாம். ஆகிலும் ப்ராஹ்மணன் என்ற சொல் ப்ராஹ்மண சரீரமுடையவன் என்ற பொருளிலேயே உபயோகிக்கப்பட்டிருப்பதால் அவ்வித சரீரமுடையதான ஆத்மா அறிவாளியேயாதலால் தவறு ஒன்றுமில்லை என்பது ஸமாதானம். இந்த ந்யாயத்தை இங்கு காட்டியிருப்பதால் முன்பு உடலான அக்னியைக் குறிக்கும் சப்தத்தையே அதன் ஆத்மாவான பர ப்ரஹ்மம் என்ற பொருளில் உபயோகப்படுத்தினது சரியே என்பது நிரூபிக்கப்பட்டதாகிறது. இந்த நிரூபணத்தை ஊர்ஜிதமாக்குவதற்காகவே முடிவில் 'தத் த்வம் அஸி' (அது நீ) எனப்பட்டிருக்கிறது. நீ உடலாக இருக்க, உனக்கு ஆத்மாவாயிருப்பது இதுவே. உலகத்திற்கெல்லாம் ஆத்மாவாயிருக்கும் இந்த பர ப்ரஹ்மம் உனக்கும் ஆத்மா என்பது கருத்து. இப்படி உலகத்திற்கும் பகவானுக்கும் கார்ய காரண பாவத்தை உபதேசிக்கின்ற சாஸ்த்ரம் சரீராத்ம பாவத்தையும் உபதேசிக்கின்றது. ஆகவே பகவான் ஸகல கல்யாண குண விசிஷ்டன் ஆவது போலவே எந்த அவஸ்தையிலும் சேதநா சேதந சகல வஸ்து விசிஷ்டனுமாகிறான் என்பது ஸித்திக்கிறது. இந்த நிர்ணயத்தில், உலகத்தைப் பொய் என்றும், ப்ரத்யக்ஷ அனுமானங்களையும் பல பல பேத ச்ருதிகளையும் அப்ரமாணங்கள் என்றும் கூறுவது, அபேத ச்ருதிக்கும் லக்ஷணையைக் கொண்டும், ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் பேதத்தை அறிவிக்கும் ப்ரத்யக்ஷாதி ஸகல ப்ரமாணங்களுக்கு விரோதம் வரும்படியும் பொருள் கூறுவது, என்றிவ்விதமாகவுள்ள குற்றங்களில் எதுவுமின்றி ஸர்வ ப்ரமாணங்களும் ஸர்வ ச்ருதி வாக்யங்களும் மிகவும் அனுகூலமாயிருப்பதால்ஸகலகல்யாண குண, சகல சேதநா சேதந விசிஷ்ட ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே தத்துவம் என்கிற விசிஷ்டாத்வைத ஸித்தாந்தமே உபநிஷத் ஸித்தாந்தம் என்பதும், ஆகவே இதுவே அநாதி ஸித்

தாந்தம் என்பதும் யாவரும் இசைந்து அங்கீகரிக்க வேண்டிய விஷயம்.

பகவத் போதாயனர் முதலான மஹான்கள் ஆதரித்த ஸித்தாந்தமும் இதுவேயாகையால் இதுவே அநாதி என்பது மறுக்க முடியாத விஷயம். வேதத்தில் கர்ம காண்டம் என்கிற முதல் பாகத்தை ஊன்றிப் பார்த்தால் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தம் அதிலும் அடங்கியிருக்கிறதென்பது விளங்கும்.

---

"திடவிசும் பெரிவளி நீர்நிலம் இவைமிசை
படர்பொருள் முழுவதுமாய் அவையவை தொறும்
உடல்மிசை உயிரெனக்கரந்து எங்கும் பரந்துளள்
சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே"

—திருவாய்மொழி

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# வால்மீகியும் விசிஷ்டாத்வைதமும்

ம. ர. ஸம்பத்குமாரன், எம்.ஏ.

ராமன் வழிபட்ட ரங்கநாதன் திருவரங்கத்தில் வீற்றிருந்து அதை விசிஷ்டாத்வைதப் பேரரசின் தலைநகராக விளங்கச்செய்வதே ராமாயணத்திற்கும் விசிஷ்டாத்வைதத்திற்குமுள்ள நெருங்கியதொடர்பை ஒருவகையாகக்காட்டும். மேலும் எம்பெருமானார் பதினெண்முறை ராமாயணத்தின் விசேஷார்த்தங்களைப் பெரிய திருமலை நம்பிகளிடம் கேட்டுத் தெரிந்தார் என்னும் வரலாறு ராமாயணத்திலிருந்து அவர் தரிசனத்துக்குக் கிடைக்கும் ஆதரவைக் காட்டுகின்றது.

### குணவான்

வால்மீகி முனிவர் கேட்கும் ஒரு கேள்வியினால் ராமாயணம் அவதரிக்கின்றது. "இப்பொழுது இவ்வுலகில் குணவான் யார்?" என்று நாரதரை வால்மீகி வினவுகிறார். இக்கேள்வி விசிஷ்டாத்வைதத்தின் உயிர்நாடியைத் தொடுகிறது. பரம்பொருள் எல்லாக் கல்யாண குணங்களாலும் நிறைவு பெற்றவன், மாசிற்கு எதிர் நிலையில் நிற்பவன் என்பது எம்பெருமானார் தரிசனத்தின் அடிப்படையான தத்துவம். மேலும், அநேக குணங்களை விவரித்து, அவைகளோடு கூடிய நரன் யார் என்று வால்மீகி கேட்க, இக்ஷ்வாகு குலத்தில் தோன்றிய ராமனே அந்நரன் என்று நாரதர் பதிலளிக்கிறார்.

### தாரை கண்ட தத்துவம்

நாராயணனே இங்கு நரனாகிறான் என ஆதிகாவ்யம் பரக்கக்காட்டுகிறது. ராமனின் குணங்கள் நாராயணனின் குணங்களே ஆனமையின், அவை அவனைப் பற்றவும், பேறாகப் பெற்றனுபவிக்கவும் தக்கவையாயிருக்கின்றன. குணானுபவம் விரிவாகச் செய்யும் நிலையில் இது நன்றாக விளங்கும்.

அவதார காலத்தில் பரத்துவம் மறைந்து நின்றாலும் அடிக்கடி வெள்ளமிட்டு மேலெழும்புவதை ராமசரிதத்தில் அநேக இடங்களில் காணலாம். பரசுராமர் ராமனிடம் தோற்றவுடன், "நீ மாறுதலற்றவன், மதுவென்னும் அஸுரனை வென்றவன்" என்று ராமனைப் போற்றி, அவன் உலகை உய்விக்க மானிடனாய்த் தோன்றிய பரம்பொருள் என்று விளக்கிக் காட்டுகிறார். கணவனையிழந்த தாரை அவனைக் கொன்ற ராமன் மீது வசைமாரி பொழிய சீற்றமும் சோகமும் ஒருங்கே உருவெடுத்தாற்போல் வந்தவள், ராமனை யணுகினதும், மனமயக்கம் நீங்கி அவன் உண்மையை அறிகிறாள். அவள் புகழுரை அத்தெளிவினால் வருவதென்பதைக் காட்ட அவளை 'விசுத்தஸத்வா' என்கிறார் வால்மீகி முனிவர். தாரை காணும் ராமன் அப்ரமேயன், அறிவின் அளவை மீறியவன்: துராஸதன், நெருங்குவதைத் தடைசெய்யும் தேஜஸ்ஸையுடையவன். அவதார நிலையிலும் ராமனின் பரத்துவம் தாரையின் தூய அறிவுக்குப் புலப்படுகிறது.

### மண்டோதரி அறுதியிட்டது

தாரையைப் போன்ற அவநிலையையடைந்த மண்டோதரி, போர்க்களத்தில் இறந்த கணவனைக்கண்டு புலம்பும் போது ஐயம் திரிபற ராமன் தான் நாராயணன் என்று அறுதியிட்டும் பேசுகிறாள். "உன்னைக் கொன்றவன் (உலகைக்காக்கும்) பெரும் போகத்தில் அமர்ந்தவன், பரமாத்மா, எப்பொழுது மிருப்பவன், முதலும் நடுவும் முடிவுமற்றவன், பெரியோர்க்கும் பெரியவன், இயற்கை யுலகிற்கு மேம்பட்டவன், திருவாழியையும் சங்கையும், கதையையும் ஏந்தி ஆயுதபாணியாய் நிற்பவன், ஸ்ரீவத்ஸமென்னும் மருவை மார்பில் உடையவன்" என்றெல்லாம் ராமனின் பெருமையை விவரிக்கிறாள்.

விடுநல்கும் வீரன்

சரபங்கர், ஜடாயு, சபரி இவர்களின் சரிதங்களில் பரமனுக்கே உரிய ஒரு தொழிலை ராமனிடம் காண்கிறோம். இம் மூவரும் ராமனின் அருளால் வீடு பெற்றனர். ஸ்ரீ பாஷ்யத்தின் மங்களச்லோகத்தில் படைத்தல் காத்தல், அழித்தல், வீடு பெறும்படி உய்வித்தல் என்னும் நான்கு தொழில்கள் பரமனுக்கே உரியன எனச் சுட்டிக்காட்டப்பட்டிருக்கின்றன. பலாதிகரணத்தில் பரமனிடமிருந்து தான் வீடு கிட்டுகிறது என்று நிருபிக்கப்பட்டிருக்கிறது. கடைசி ஸூத்திரத்தின் விரிவுரையில் ஸ்ரீ பாஷ்யம் இவ்வுலகில் கர்மத்தினால் கட்டுண்டு உழல் வோரைப்பரமன் எவ்வாறு உய்வித்து வீடு பெறும்படி செய்ய முயல்கிறான் என்பதை விவரித்திருக்கிறது.

வினை நீக்கும் நாயகன்

ராமன் இம்மூவரையும் தேடிச் சென்றே அருள் பாலிக்கிறான். அயோத்தியிலிருந்து முடிசூடிக்கொள்ள வேண்டியவன், முடியையும் நகரையும், தாயையும் தந்தையையும் துறந்து வனமேகி முனிவர்களைத் தேடியடைந்து, அவர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் நன்மைபேணுகிறான். சரபங்கர் ராமனைக்கண்டு, அவனுக்குத் தன் நல்வினையையெல்லாம் ஈந்து, அவன் அருள்நோக்கால் வீடு பெறுகிறார். ஜடாயு ராமனுக்காகவும், ஸீதைக்காகவும் போர் செய்து மாண்டதால் ராமனால் ஈமக்ரியைகள் செய்யப்பெற்று, பெறும் பேறாகிய வீடு அடைகிறான். சபரிக்கு ராமன் நோக்கால் வினைகள் அகன்று தூய்மை தோன்றுகிறது; அவனுக்கு விருந்தோம்பி வீடு பெற்று உய்கிறாள்.

இவ்வாறே ராமன், தன்னுடைச் சோதிக்குத் திரும்பும் போது, அயோத்தியிலுள்ளளோரைத்தன்னுடன்அழைத்துச்சென்றான் என்னும் வரலாறு உண்டு. உத்தரகாண்டத்தில் அவர்கள் யாவரும் நற்கதியடைந்தது கூறப்பட்டுள்ளது ஈண்டு.

''அன்று சராசரங்களை வைகுத்தத் தேற்றி'' என்னும் பெருமாள் திருமொழியும்,

கற்பார் இராம பிரானையல்லால் மற்றும் கற்பரோ,
புற்பாமுதலாப் புல்லெறும் பாதி யொன்றின்றியே
நற்பால் யோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
நற் பாலுக்குய்த்தனன் நான்முகனார் பெற்ற நாட்டுளே

என்னும் திருவாய் மொழியும் காணற்பாலது.

ஸ்ரீபாஷ்யத்தில்

ஸ்ரீபாஷ்யத்தில் இரண்டு ராமாயண ச்லோகங்களைத்தான் காணமுடியுமென்று தோன்றுகிறது. அவ்விரண்டும் விசிஷ்டாத்வைத தத்துவங்களை விளக்கப்பேருதவி புரிகின்றன. முதற்சருக்கத்தில் 'தேவமாயேவ நிர்மிதா'என்று வால்மீகி முனிவர் ஸீதையை வர்ணிக்கிறார். இது ஸந்த்யாதிகரணத்தில் 'மாயாமாத்ரம் து கார்த்ஸ்ந்யேன அநபிவ்யக்த ஸ்வரூபத்வாத்'என்னும் ஸூத்திரத்னடியில் உதாஹரிக்கப்பட்டுள்ளது. கனவில் காண்பதெல்லாம் மெய்யே. பொய்யல்ல என்னும் தத்துவத்திற்கேற்றாற் போல் ஸூத்திரத்திலுள்ள 'மாயா' வென்னும் சொல்லிற்குப் பொருள் கூற, வால்மீகி அச் சொல்லை யுபயோகித்தது உதவுகிறது. கனவில் காண்பவை பரமனால் ஆச்சரியப்படும் வகையில்படைக்கப் படுகின்றன: அவை கனவு காண்பவனுக்கு மட்டுமே அவன் கனவு காணும் பொழுது மட்டும் புலனாகின்றன. வால்மீகி கூறும் வகையில் ஸீதை பரமனின் ஆச்சரியகரமான சக்தி அவதரித்தது போல் தோன்றினாள்.

ஜகத்சரீரி

விலக்ஷணத்வாதி கரணத்தில் சரீரத்தின் இலக்கணத்தைக் கூறும் தருணத்தில் 'நது த்ருஷ்டாந்தா பாவத்' என்னும் ஸூத்திரத்தினடியில் யாவையும் பரமனுக்கு உடலாயுள்ளன வென்பதற்கு ச்ருதி ஸ்மருதிகளிலிருந்து மேற்கோள்கள் எடுத்துக்காட்டுகையில், 'ஜகத்ஸர்வம் சரீரம் தே' என்னும் வால்மீகி ராமா

யண வசனம் உதாஹரிக்கப்படுகிறது. இது யுத்த காண்டத்தில் வருகிறது. ராவணன் மாண்டபின், ஸீதையை ஏற்க மறுக்க, அவள் தீக்குளித்ததும், ப்ரம்மா சிவன் முதலாக எல்லா தேவர்களும் தோன்றித் துதிசெய்ய, ராமன் தன்னை மனிதனுகவே நினைத்திருப்பதாகக் கூறுகிருன். அப்பொழுது ப்ரம்மா, நாராயணனை ராமனை வழிபட்டுப் போற்றும் பொழுது, உலகிற்கும் ஜீவர்களுக்கும் பரமனுக்குமுள்ள உறவை விளக்குகிருர். 'பவான் நாராயணோ தேவ:' என்று தொடங்கி, பிறகு தான் விவரித்ததைச் சுருங்கக் கூறுவதற்காக 'ந ததஸ்தி த்வயா வினு, ஜகத் ஸர்வம் சரீரம் தே' என்கிருர் "உன்னையன்றி ஒன்றும் கிடையாது உலகெல்லாம் உன் உடல்" என்று இதற்குப் பொருள். யாவையும் உள்ளும் புறம்பும் பரமனுல் ஆளப்படுகின்றன. அவன் அந்தர்யாமி. அவன் உயிர்; அவை அவனுக்கு உடலாயுள்ளன.

### சரீரலக்ஷணம்

இவ்வுறவை ஸ்ரீபாஷ்யத்தில் படித்த சரீரலக்ஷணத்தின்படி அறிந்துகொள்ள வேண்டும். யஸ்ய சேதநஸ்ய யத்த்ரவ்யம் ஸர்வாத்மனு ஸ்வார்த்தே நியந்தும் தாரயிதும் ச சக்யம், தச்சேஷதைகஸ்வரூபம் ச, தத் தஸ்ய சரீரம்'' என்பது ஸ்ரீபாஷ்ய ஸ்ரீஸூக்தி. எந்த த்ரவ்யமானது, அதனுல் நிறைவேற்றக் கூடிய யாவையும் பற்றி, எந்த சேதனனுல் ஆளப்படவும், காக்கப்படவும் நிலையில் உள்ளதோ, அவனுக்கு சேஷப் பொருளாயுள்ளதோ, அது அவன் உடல் என்பது இதன் கருத்து. இவ்வகையில் ஜீவர்களும், உலகமும் பரமனுக்கு உடல் என்னும் தத்துவம் விசிஷ்டாத்வைதத்திற்கு அடிப்படையானது. ராமனின் உண்மை நிலையைக் கூறுமிடத்தில் ப்ரம்மதேவன் இத்தத்துவத்தை நிலைநாட்டுவது நோக்கற்பாலது.

### சரணுகதி சாஸ்திரம்

ராமாயணத்தைச் சரணுகதி சாஸ்திரம் எனக் கூறுவதுண்டு. பரமனிடம் தஞ்சம் புகுதலை விசிஷ்டாத்வைத மதம் விசேஷமாக உபதேசிக்கிறது. விபீஷணன் தன்னைச் சரண் அடையும் பொழுது, ராமன் தஞ்சம் புகுவோரைக் கைவிடாதிருப்பதே தன் வ்ரதம் என்று சபதமிடுகிருன். "ஒரே ஒரு முறை தஞ்சம் புகுந்து, 'உன்னுடையவன் நான்' என்று வேண்டுபவனுக்கு, எல்லாப் பொருள்களினிடத் திருந்தும் அபயம் கொடுக்கிறேன்" என்கிருன் ராமன். அவனிடம் குற்றமிருந்தாலும், அவன் அன்பு நடிப்பாயிருந்தாலும், தஞ்சம் புகுந்தவன் கைவிடத் தகான் என்பது ராமன் கொள்கை. ராமன் கொடுப்பதாக வாக்களித்த அபயத்திற்கு மோக்ஷம் வரையில் பொருள் கொள்ளலாம். ஆகவே கடற்கரையில் ராமன் அளித்த வாக்கு ஸம்ஸாரத்தில் உழல்வார் யாவர்க்கும் அருமருந்தாகும். ஆகவேதான் ஆளவந்தார் ஸ்தோத்திர ரத்தினத்தில் "மதேகவர்ஜம் கிமிதம் வ்ரதம் தே'' என்று ராமனைப் பார்த்துக் கேள்வி கேட்கிருர். 'தன் ஒருவனை விட்டு ஏனையோர்க்கு மட்டும்தானு ராமனின் அபயப்ரதானம்?'' என்பது அவ்வினு. காகாஸுரனைப் பிழைத்துப் போக விட்டதும் சரணுகதியின் பெருமைதான். பிராட்டியிடம் கொடிய பிழை செய்தவன், மூவுலகும் திரிந்து, எங்கும் போக்கிடமின்றி ராமனைச் சரணமடைய, அங்கு உய்வு பெற்ருன்.

### தருமத்தின் படிகள்

ராம லக்ஷ்மண பரத சத்ருக்னர் நால்வரும் முறையே ஸாமான்ய தர்மம், பகவத் சேஷத்வம், பகவத் பாரதந்த்ர்யம், பாகவத சேஷத்வம் இவைகளைப் பின்பற்ற வழிகாட்டிகளாயமைந்தனர் என்னும் வகையிலும் ராமாயணம் விசிஷ்டாத்வைத உபதேசம் செய்கிறது. ராமன் தாய் தந்தையரிடமும், உடன் பிறந்தோர், மனைவி, பகைவர், முதலியோரிடமும், அறமுறையைக் கைவிடாமல் நடப்பதெப்படி என்பதையும், அரசன் மக்களை ஆள்வது எப்படி என்பதையும் தன் வாழ்வில் காட்டினுன். 'பரமனுக்கே அடியவர் நாம்' என்பதைப் படிப்பினையாக நமக்கு லக்ஷ்மணன் உணர்த்துகிருன். ராமனிடமிருந்து என்

றும் எப்பொழுதும் பிரியாமல், அவனுக்குப் பணிவிடை செய்வதையே குறிக்கோளாகக் கொண்டவன். அதற்காக ராமன் ஆணையையும் மீறியதுண்டு. வனமேகும் பொழுது, ராமன் சொற்படி அயோத்தியிலிருக்க மறுத்தான்; ராமன் அரியணையில் ஏறியதும் இளவரசு பட்டம் கொடுக்க முன்வர, அதையும் மறுத்தான். பரதன் இவ்வாறன்றிக்கே ராமன் ஆணையை மீருமல் பகவத் பாரதந்த்ரியத்தை வெளிப்படுத்தினுன். "வைத்த இடத்தில் இருந்தேனே பரதாழ்வானைப் போல?" என்று நாம் யாவரும் நம் குறைவுகளைப் பேசுமாறு அமைந்தது பரதன் நிலை. சத்ருக்னன் ப்ரதனிடம் ஈடுபட்டது பாகவத சேஷத்வத்தைக் காட்டுகிறது. ராமனிடம் பக்தி செய்யும் மஹா பாகவதனை பரதனே சத்ருக்னனின் வழிபடு தெய்வம்.

சிறையிருந்தவள் ஏற்றம்

இன்னும் பல வகையில் ராமாயணம் விசிஷ்டாத்வைத தத்துவங்களை விவரிக்கிறதைப் பற்றி எழுதலாம். உதாரணமாக, இலக்குமியின் பெருமையை யறிந்ததனுலேயே ஸ்ரீவைஷ்ணவர்கள் என்னும் பெயரைப் பெற்றுள்ள விசிஷ்டாத்வைதிகள் ராமாயணத்தை 'ஸீதாயா: சரிதம் மஹத்' என்றும் அது 'சிறையிருந்தவளேற்றத்தை வெளியிடுகிறது' என்றும் கண்டறிந்துள்ளனர். அவள் அருள் முக்திக்கு இன்றியமையாதது என்பதை காகாஸுரன் சரிதம் போன்றவை நமக்கு ருஸுப்பிக்கின்றன. பரதன் சித்திரகூடத்தில் ப்ரபத்தி செய்தும் ராமன் இணங்காதது, பரமனின் ஸ்வதந்திரம் எதற்கும் கட்டுப்படாததென்பதை ஊணர்த்துகிறதென்பர்.

விரிவுக்கஞ்சி இச்சிற்றுரையை மேலும் வளர்த்தவில்லை. ஈண்டு விண்ணப்பித்ததிலிருந்து ராமாயணத்துக்கும் விசிஷ்டாத்வைதத்திற்குமுள்ள நெருங்கிய தொடர்பின் ஓரம்சமாவது புலப்படலாம். புலப்படாமலிருப்பின், அது தத்துவ நிலையின் குறையல்ல; எழுதப் புகுந்தவன் குறையே.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பராசரர் கண்ட விஷ்ணுதத்வம்

மேல்மா நரஸிம்ம தாதாசார்யர் ஸ்வாமி

## பராசரர் பெருமை :

பராசரர் சக்தியின் குமாரர், வஸிஷ்டருடைய பௌத்திரர், வேதவ்யாஸருடைய தகப்பனுர், சுகருக்குப் பாட்டனுர். ப்ரஹ்மா, ஸ்ரீமந் நாராயணனுடைய பெருமைகளைப் பரக்கப் பேசப் பிறந்த வம்சம் இது. ப்ரஹ்மா, நாரதர், வால்மீகி என்ற பரம்பரையில் வந்த ஸ்ரீவைஷ்ணவ வம்சம் மற்ருென்று. இப்படி இரண்டு வம்சங்களால் உயர்ந்தாகப் பேசப்பட்டிருக்கும் விஷ்ணுதத்வம்தான் உண்மையானதாக விருக்கும். விஷ்ணு தத்வத்தை சேதனு சேதன விசிஷ்டாத்விதீயமாகக் கண்ட இந்த இரண்டு வம்சமும் வைதிக விசிஷ்டாத்வைதிகளான ஸ்ரீவைஷ்ணவர்கள் எல்லோராலும் மிகவும் போற்றத்தக்கது. மேலே கூறிய எட்டு மஹா ஸ்ரீவைஷ்ணவர்களில் பராசரர் பல காரணங்களால் நமக்கு, பரதத்வத்தை உபதேசம் செய்திருக்கிறபடியால் மிகவும் ஆப்தர் என்பதை ஸ்ரீ ஆளவந்தாரே ஸ்தோத்திர ரத்னம் நான்காவது ச்லோகத்தில் எடுத்துக்காட்டியிருக்கிருர். வஸிஷ்டர், புலஸ்த்யர், என்ற இரண்டு மஹர்ஷிகளும் இப்பராசரருக்கு 'பரதேவதையான விஷ்ணுவின் உண்மை உமக்கு நன்ருக மனதில் விளங்கட்டும்' என்று வரம் கொடுத்திருக்கிருர்கள். இரண்டு மஹர்ஷிகளின் வரத்தைப் பெற்றவரும் ஸ்ரீவைஷ்ணவ வம்சத்தில் அவதரித்தவரும் உலகத்திற்கு க்ஷேமம் உண்டாக வேண்டுமென்று கருணை பொங்கியவருமான பராசரர், மைத்ரேயர் என்கிற ரஹஸ்யோபதேச யோக்யரான ஸச்சிஷ்யருக்கு உபதேசம் செய்யும் வ்யாஜமாக விஷ்ணு புராணத்தைச் செய்தருளி, அந்தப் புராணத்தில், தான் கண்ட விசிஷ்டாத்வீதியனை விஷ்ணுவின் தத்வத்தை விளக்கித் தெரிவித்திருக்கிருர்.

## விஷ்ணு புராண மகிமை :

பராசரர் அருளிச் செய்த புராணம் விஷ்ணு புராணம். இது ஆறு அம்சங்கள் கொண்டது. 126 அத்தியாயங்கள் உள்ளன. ஒரு லக்ஷத்து தொண்ணூற்று இரண்டாயிரம் எழுத்துக்கள் கொண்டதென்று பெரியோர்கள் சொல்லிவருகிருர்கள். "ஒரு தெய்வத்தைக் குறிப்பிட்டு, அதன் மகிமையைச் சொல்லும்" என்று ஒருவர் கேட்க, "அப்படியே சொல்லுகிறேன்" என்று தொடங்கும் நூல்கள், கேட்பவருடைய பக்ஷபாதத்தையும் சொல்லுகிறவருடைய பற்றுதலையும் நன்ருகத் தெரிவிக்கும். ஆதலால் பக்ஷபாதத்தால் பிறந்தது அந்நூல் என்று எல்லோரும் சொல்லுவர்கள். பக்ஷபாதமில்லாமலே கேள்வியும் பதிலும் கொண்ட நூல்கள் "மத்யஸ்த நூல்கள்" என்று யாவரும் கொண்டாடுவார்கள். இப்படிக் கொண்டாடத் தகுந்தவைகள் விஷ்ணு புராணம், விஷ்ணு ஸஹஸ்ரநாமாத்யாயம், ஸ்ரீராமாயணம் என்பவைகள். எப்படி எனில், விஷ்ணு புராணத்தில், "ஜகத்காரணதத்வம் எது" என்ற கேள்விக்கு "விஷ்ணு" என்று பதில் சொன்னுர். விஷ்ணு ஸஹஸ்ரநாமாத்யாயத்தில் "ஒப்புயர்வற்ற கடவுள் யார்" என்று பொதுவாகக் கேள்வி பிறக்க, "பிரஹ்மாதி தெய்வங்களுக்கெல்லாம் தெய்வமான விஷ்ணுதான்" என்றெல்லாம் பதில்கள் பிறந்தன.

ஸ்ரீராமாயணத் துவக்கத்தில் "கல்யாண குணசாலி யார்?" என்ற கேள்விக்கு ராமனுன ஸ்ரீமந்நாராயணனே எல்லாக் கல்யாண குணங்களுக்கும் இருப்பிடம் என்ற பதிலும் பிறந்தது. இப்படி கேள்வியும்—பதிலும் பக்ஷபாதமில்லாமல் அமைந்தபடியால் ஸ்ரீவைஷ்ணவ ரிஷிகளின் பக்ஷபாதமின்மையைத் தெளிவாகக் காட்டுகின்றதல்லவா?

ஸ்ரீவிஷ்ணு புராண ஆரம்பத்தில் சுருக்கமாக "ஜகத் காரணம் விஷ்ணு" என்று சொல்லிவிட்டு, இக்காரணமான விஷ்ணு தத்வம் விசிஷ்டாத்விதீயம், ச்ரிய:பதி, ஸமஸ்த கல்யாண குண விசிஷ்டன், ஹேயகுணம், கலசாதவன் என்றெல்லாம் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கே சேரும் பல தத்வங்கள் விளக்கிச் சொல்லப்படுகின்றன. விஷ்ணு புராணத்திற்கு, "புராண ரத்னம்" என்று பெயரிட்டார் ஆளவந்தார். த்வயத்திற்கு மந்த்ர ரத்னம் என்று பெயருண்டு. அதை வ்யாக்யானம் செய்யப் பிறந்த ஆளவந்தார் ஸ்தோத்திரத்திற்கு ஸ்தோத்திர ரத்னம் என்று பெயர். மந்த்ர ரத்னத்திற்கு வ்யாக்யானமான ஸ்தோத்ர ரத்னத்தில் விஷ்ணு புராணத்திற்கு, புராண ரத்னமென்று பெயரிட்டது மிகவும் பொருத்தமானதென்று பெரியோர்கள் ரஸிப்பர்கள். ஆகவே மந்த்ர ரத்னம், ஸ்தோத்திர ரத்னம், புராண ரத்னம், இம்மூன்று ரத்னங்களே ஸ்ரீவைஷ்ணவர்களுக்குச் செல்வமென்பதில் ஐயமில்லை. புராண ரத்னமென்று பெயர் கொடுக்கும் ஆளவந்தாருடைய ச்லோக ரத்னத்திற்கு வ்யாக்யானம் செய்தருளிய பெரிய வாச்சான்பிள்ளையும் ஸ்ரீதேசிகனும் விஷ்ணுபுராண ரத்னத்தினுடைய கருத்துக்களை ச்லோகத்திற்கு ஏற்ப கொஞ்சம் விவரித்தார்கள். விஷ்ணு சித்தர் என்ற எங்களாழ்வான் விஷ்ணு புராணத்திற்குப் பெரிய வ்யாக்யானம் செய்தருளி, அதற்கு விஷ்ணு சித்தீயம் என்று பெயரிட்டார். இவைகளெல்லாவற்றையும் நன்றாக உணர்ந்த பெரியோர்கள் உபந்யாஸ கோஷ்டியில் கேட்பவர்களுடைய செவிக்கும் உள்ளத்திற்கும் சுவை சுரக்கும்படி சொல்லமுதைப் பொழிகிறார்கள். "ஜகத் காரணம் எது" என்ற கேள்விக்கு "ஜகத் காரணம் விஷ்ணு" என்று உடனே பதிலளித்து, அதை விவரிக்கிறபடியால் விஷ்ணு புராணம் என்று பெயர் வந்தது என்றும் விஷ்ணு தத்வத்தின் பெருமைகளைப் பேச வந்தபடியால் விஷ்ணு புராணம் என்றாயிற்றென்றும் சொல்லுகிறார்கள். இப் புராணரத்னம் தைத்திரிய உபநிஷத்தில் அடங்கிய ப்ருகுவல்லியைப்போல் ஜகத்காரண தத்துவத்தைப் பற்றிப் பேசுகிறபடியால், ப்ருகுவல்லியின் வ்யாக்யானமென்று பெரியோர்கள் பணிக்கிறார்கள்; மற்றைய உபநிஷத்துக்களின் நுட்ப விஷயங்களையும் விவரணம் செய்கிறது. இந்த புராண ரத்னத்திற்கும் நிர்குணமான அத்விதீய ப்ரஹ்மத்தில் நோக்கு உண்டு என்று சங்கராசாரியர் தாம் செய்திருக்கும் ஸநத்ஸுஜாதீயாத்யாய வ்யாக்யானத்தில் சொல்லியிருக்கிறார். "விஷ்ணு புராணத்திற்கு கொஞ்சமேனும் நிர்குண ப்ரஹ்மத்தைக் கூறுவதில் கருத்தில்லை. கல்யாண குண விசிஷ்டனும் விசிஷ்டாத்விதீயனுமான விஷ்ணு தத்வத்தை விளக்குவதில் தான் தாத்பர்யம்" என்று எம்பெருமானார், ஸ்ரீபாஷ்யத்திலும் வேதார்த்த ஸங்கிரஹத்திலும் சங்கராசாரியார் சொல்லும் வ்யாக்யானம் விஷ்ணு புராண ச்லோகங்களுக்குக் கொஞ்சமேனும் சேராது என்பதை தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிறார். அதை ஸ்ரீபாஷ்யாதிகாரிகளான ஸ்வாமிகளிடத்தில் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்

ஜகத்காரணம் விஷ்ணு:

விஷ்ணோ: ஸகாசாதுத்பூதம்
ஜகத்தத்ரைவ ச ஸ்திதம் |
ஸ்திதிஸம்யமகர்தாஸௌ ஜகதோஅஸ்ய
ஜகத்ச ஸ ||

(ஸங்கல்ப ரூபமான ஞானத்துடன் கூடியிருக்கும் விஷ்ணுவினிடமிருந்து இந்த உலகம் உண்டாயிற்று. அவனிடத்திலேயே இருக்கிறது. விஷ்ணுவே இந்த உலகத்தின் இருப்பிற்கும் நியமனத்திற்கும் காரணம். உலகத்திற்கு அந்தர்யாமியாகவும் இருக்கிறான்.) இந்த ச்லோகத்தில் ஜகத்காரணம் விஷ்ணு என்பது மாத்திரம் சொல்லப்படவில்லை. அவன் உலகம் உண்டாவதற்கு அவசியமான ஸங்கல்ப ஞானத்தோடு கூடியவன்; அவன் அந்தர்யாமியாகவும் இருக்கிறான் என்றும் சொல்லப்படுகிறது. இதனால், பகவான் உலகத்திற்கு நிமித்த காரணமாகவும், உபாதான காரணமாகவும் இருக்கிறான் என்று ஏற்படுகிறது.

குயவன், சட்டியைச் செய்ய வேண்டும் என்கிற ஸங்கல்பத்தோடு ஆரம்பிக்கிருன். குயவன் நிமித்த காரணம். அவனே சட்டியாக ஆவதில்லை. மண் சட்டியாக ஆகிறது. ஆனுல் அது தான் சட்டியாக ஆகவேணும் என்று நினைப்பதில்லை. ஆகவே சட்டி உபாதான காரணமாக மாத்திரம் ஆகிறது. குயவன் நிமித்த காரணமாக மாத்திரம் ஆகிருன். பகவானுேவெனில் ப்ரகிருதி என்ற தத்வ விசிஷ்டனுகவிருந்து உலகமாகிருன். தானே உலகமாக ஆகவேண்டும் என்று ஸங்கல்பிக்கிருன். ஆகையால் உலகத்திலுள்ள காரணப்பொருள்களைக் காட்டிலும் விலக்ஷணன் பகவான் என்று சொல்லுகிருேம். தானே ஸங்கல்பத்துடன் கூடி நிமித்த காரணமாகவும் அந்தர்யாமியாகவிருந்து உபாதான காரணமாகவும் ஆகிறபடியால், "ஜகத்காரணம் பகவான்" என்று உபநிஷத்துகளும் இதிஹாஸ புராணங்களும் நமக்கு பகவானுடைய விலக்ஷண காரணத்வத்தை தெரிவிக்க வேண்டியிருக்கிறது. இத்தகைய விலக்ஷண காரணத்வத்தை உலக முறையில் தெரிந்துகொள்ள முடியாது.

ஜகத்சரீரி விஷ்ணு:

அதாவது சேதனப் பொருளான ஜீவாத்மாக்களும் ஜடப் பொருளான ப்ருகிருதி என்று சொல்லப்படும் அசேதனப் பொருளும் கலந்தது உலகம். இந்த உலகமெல்லாம் பகவானுக்கு சரீரம். இந்த சரீர சரீரி பாவ ஸம்பந்தத்தை மற்ற ஸித்தாந்திகள் மறந்தார்கள். அதனுல் அவர்களுக்கு சரணுகதி என்ற சிறந்த உபாயத்தையும் கைவிட வேண்டியதாயிற்று. ப்ரஹ்மத்திற்கு தோஷம் தட்டாதபடி, ஜகத்காரணத்வத்தை நிர்வாஹம் செய்யவும் இயலாமல்போயிற்று. எப்படியென்ருல் உலகம், ஜடமாயும் ஆசை, த்வேஷம், முதலிய குற்றங்களுடையதாகவும் காணப்படுகிறது. காரணப்ரஹ்மமோ கெட்ட குணங்களற்றதாக கூறப்படுகிறது. வஸ்திரம், செம்மை, கருமை முதலியவைகளோடு கூடியிருப்பதற்குக் காரணம் துணிக்குக் காரணமான நூலைப் பற்றியிருக்கிறது. அதுபோல உலகத்தில் காணும் குறைகள் யாவும் காரணமான ப்ரஹ்மத்திலும் இருக்கவேண்டி வருமே, காரணப்ரஹ்மமோ கல்யாண குண விசிஷ்டமே என்பது பொருந்தவில்லையே என்று ஆராயப் புகுந்து, சரீர சரீரி பாவ ஸம்பந்தத்தைச் சொல்லும், உபநிஷத்வாக்யங்களையும், இதிஹாஸ புராண வாக்கியங்களையும் கைவிட்டார்கள். ஒன்றும் புலப்படவில்லை. என்ன செய்வார்கள்!

ப்ரஹ்மம் நிர்குணம், உலகம் பொய் என்றெல்லாம் சொல்லி, நிர்குண வாதத்தையும், உலகம் பொய் என்று நிரூபிக்க மாயா வாதத்தையும் கிளப்பி விட்டார்கள். நம்பூர்வாசாரியங்களும் ரிஷிகளும் இந்த வாதங்களுக்கு இடமே கொடுக்கவில்லை. பராசரர் "உலகமெல்லாம் பகவானுக்கு சரீரம். சரீர விசிஷ்டனுகவே தானே நம்முடைய உடலில் நான் என்கிற ஜீவாத்மா இருக்கிருன். நான் என்கிற ஜீவாத்மா இந்த உடலுக்கு சேஷியாயும் ஆதாரமாயும் நியந்தாவுமாகவிருக்கிருன். அவனை சரீரி என்று தனித் தனியாக, குறிப்பிட்டுச் சொல்லுகிருேம். அது போல உலகமெல்லாம் பகவானுக்கு சேஷமாயும் ஆதேயமாகவும் நியாம்யமாகவும் இருக்கின்றன. அதனுல் பகவான் ஸர்வ சேஷியாயும் ஸர்வாதாரமாயும் ஸர்வ நியந்தாவுமாகி, ஸர்வ சரீரியாக விளங்குகிருன். சரீரத்திற்கே இயற்கையான இளமை முதுமை பிணி பசி முதலியன சரீரியான ஜீவாத்மாவினிடத்தில் பற்றுகிறதில்லை. ஜீவாத்மா ஞானுநந்தஸ்வரூபனுகவே விளங்கவில்லையா? அது போல ஜகத்காரணமான விஷ்ணுவும், தன்னுடைய சரீரமான சேதனு சேதனங்களுடைய தான தோஷங்கள் ஸர்வ சரீரியான தன்னிடம் தட்டாமல் பிரகாசித்துக் கொண்டிருக்கிருன். ஆகவேதான் ஜகத்காரணத்தை விசிஷ்டமான பொருள் என்று சொல்லுகிருேம். அதாவது சேதன விசிஷ்டம். இது தனக்கு ஒப்புயர்வு இல்லாததாக விருக்கிறபடியால் விசிஷ்டாத் விதீயம் என்று சொல்லி, இப்படி ஒப்புயர்வற்றதாயும் சேதனு சேதன விசிஷ்டமாயும் உள்ள தத்வத்தை ஜகத்காரணமாக ஏற்றுக்கொள்

ளும் மதம் விசிஷ்டாத்வைதம்; இந்த மதத்தைப் பின்பற்றியவர்கள் விசிஷ்டாத் வைதிகள்,'' என்ற கருத்தை உள்ளே கொண்டு,

''ஜகத்ஸர்வம் சரீரம்தே ஸ்தைர்யம் தே வஸுதாதலம்''

(ஜகத் முழுவதும் உன்னுடைய சரீரம், பூமியின் ஸ்திரத் தன்மை உன்னுடைய அதீனம்)

யத்கிஞ்சித் ஸ்ருஜ்யதே யேன
ஸத்வஜாதேன வை த்வஜ ।
தஸ்ய ஸ்ருஜ்யஸ்ய ஸம்பூதௌ
தத்ஸர்வம் வை ஹரேஸ்தனு: ।।

(எந்தெந்த வஸ்து ஸ்ருஷ்டிக்கப்படுகின்றதோ, அந்தந்த வஸ்துவுக்கெல்லாம் பகவானே காரணம். அப்படி ஸ்ருஷ்டிக்கப்படும் வஸ்துவெல்லாம் பகவானுடைய சரீரம்) என்று சொல்லி ''நான் கண்ட ஜகத் காரணமான விஷ்ணு ஜகத் சரீரி'' என்கிருர். இப்படி உண்மை தேறுகிறபடியால், ''சிறிய உபாயமான ப்ரபத்திக்கும் பகவான் எல்லா பலத்தையும் கொடுக்கிருன். உடலைக் காப்பது உயிருக்குக் கடமை போல உலகத்துக்கெல்லாம் உயிரான பகவான் உடலான ஜீவ வர்க்கத்தைக் காக்க முற்படுகிருன்'' என்று நம் பூர்வாசாரியர்கள் திருமந்திரார்த்தங்களிலே இந்த சரீராத்ம பாவத்தையும் அனுஸந்திக்க வேணுமென்று உபதேசித்திருக்கிருர்கள்.

ச்ரிய:பதி:

ஜகத்காரணமான விஷ்ணு பிராட்டிக்கு நாயகனுகவிருக்கிருன் என்பதை விரிவாக விவரிக்கிருர். லக்ஷ்மியினுடைய அவதாரம், லக்ஷ்மீகல்யாணம், லக்ஷ்மியினுடைய பெருமைகளெல்லாம் ஓர் அத்யாயத்தால் சொல்லப்படுகிறது. பிராட்டியினுடைய காருண்யத்தையும் அதனுடைய கார்யமான புருஷகாரத்தையும் ஸ்ரீராமாயணம் ப்ரகாசப்படுத்துகிறது. புராணரத்னம் பரத்வத்தைக் கூட தெளிவாகச் சொல்லுகிறது. ''உயிரளிப்பான் எந்நின்ற யோநியுமாய்ப் பிறந்தாய்''; ''நிலைவரம்பில பல பிறப்பாய்'', ''மீனுயாமையுமாய் நரசிங்கமுமாய்க் குறளாய் கானுரேனமுமாய்க் கற்கியாம்,'' என்றெல்லாம் பகவானுடைய அவதார மகிமையையும், அவதார ப்ரயோஜனத்தையும் ஆழ்வார் அருளிச் செய்தார். கீதாசாரியனும் ''பஹூனி மே வ்யதீதாநி' என்று தொடங்கி அவதார ரஹஸ்யத்தை வெளியிட்டான். ஸ்ரீய:பதியின் அவதாரம்போல, ஸ்ரீயினுடைய அவதாரமும் அந்தந்த அவதார தசையில் புருஷகாரத்தையும், கைங்கர்யாபிவிருத்தியையும் பலமாகக் கொண்டு ஜீவாத்மாக்களின் உஜ்ஜீவனத்திற்காக பிராட்டியும், பற்பல அவதாரங்களைச் செய்கிருள் என்பதை பின்வரும் ச்லோகங்களினுல் சொல்லுகிருர்.

''நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ:
ஸ்ரீரனபாயினீ ।
தேவத்வே தேவதேஹேயம் மனுஷ்யத்வேச மானுஷீ
விஷ்ணோரேவானுரூபாம் வை கரோத்
யேஷாத்மன: தநும் ।।
ராகவத்வே அபவத்ஸீதா ருக்மிணீ ।
க்ருஷ்ணஜன்மனி ।। ''

(உலகத்திற்கெல்லாம் தாயான, நித்யையான, இந்த லக்ஷ்மி அந்த விஷ்ணுவை விட்டு ஒரு பொழுதும் விலகாதவள். விஷ்ணு தேவனுக அவதரித்தால் இவளும் தேவ சரீரத்தை எடுத்துக் கொள்ளுகிருள். மனுஷ்யாவதாரம் செய்யும்போது மனுஷ்ய தேஹத்தை எடுத்துக் கொள்ளுகிருள். விஷ்ணு எடுத்துக் கொள்ளும் ரூபங்களுக்கு அநுரூபமான ரூபத்தையே இவள் எப்பொழுதும் தனது ரூபமாகச் செய்து கொள்ளுகிருள். விஷ்ணு ராமாவதாரம் செய்தால் இவள் ஸீதையாகவும், க்ருஷ்ணவதாரம் செய்தால் ருக்மிணியாகவும் பிறக்கிருள்).

கல்யாணகுண விசிஷ்டன் :

''ஜ்ஞான சக்தி பலைச்வர்ய வீர்ய
தேஜாம்ஸ்ய சேஷத :
பகவச்சப்தவாச்யானி விநா ஹேயை
குணுதிபி :
''ஸமஸ்த கல்யாணகுணுத் மகோஸௌ''

''தேஜோ பலைச்வர்ய மஹாவபோத ஸுவீர்ய சக்த்யாதிகுணைகராசி:''

(கெட்ட குணங்கலசாமல், ஞானம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ், இந்த ஆறு குணங்கள் நிறைந்தவன் பகவான். ஸமஸ்த கல்யாண குணமுடையவன்; குணங்களுக்கு இருப்பிடம்) குணவிசிஷ்டனே ஜகத் காரணம்; நிர்குணனல்ல என்கிறார்.

பரமன் :

''பர : பராணும்''

(ப்ரஹ்மா முதலானவர்களுக்கும் உயர்ந்தவன்.)

''ஹிரண்யகர்போ பகவான் வாஸவோஅத ப்ரஜாபதி:''

(பகவானான பிரஹ்மா, இந்திரன், நவப்ரஜாபதிகள்) என்று தொடங்கி

''அசுத்தாஸ்தே ஸமஸ்தாஸ்து தேவாத்யா: கர்மயோனய:''

(அந்த எல்லாதேவதைகளும் கர்மத்தை காரணமாகக் கொண்டு பதம் பெற்றவர்களாகையால் கர்ம ஸம்பந்தமாகிய அசுத்தியுடையவர்கள்) என்று சொல்லி கர்ம ஸம்பந்தமில்லாமையால் தேவதேவர்களுக்கும் தேவனான விஷ்ணுவே உயர்ந்தவன் என்கிறார்.

வைகுண்ட நிலயன் :

நித்யவிபூதி என்றும் ஸ்ரீ வைகுண்டமென்றும் சொல்லப்படும் இடத்தில் பரவாஸுதேவனாக வீற்றிருந்து, நித்யஸூரிகளோடும் முக்தாத்மாக்களோடும் வானிளவரசாய், திருமாமணி மண்டபத்தில் அந்தமில்லாத பேரின்பத்தைத் தானும் அனுபவித்துக் கொண்டு, மற்றவர்களுக்கும் கொடுத்துக் கொண்டிருக்கிறான். அர்ச்சிராதி மார்க்கத்தால் சென்று, ''சூழ்விசும் பணி முகில்'' என்ற திருவாய்மொழியில் ஆழ்வார் அனுபவித்தபடி, முமுக்ஷுக்களான நாமும் சரீராவஸாநத்தில் அனுபவித்துக் கொண்டே செல்லக்கூடிய இடம். வைகுண்டகத்யத்தில், வைகுந்தத்தின் மகிமையையும் வைகுண்ட நாதனுடைய நிலைமையையும், அனுஸந்தித்துக் காணலாம். ''விஷ்ணுவுக்கு உயர்ந்ததான ஸ்தானமொன்று உண்டு. எப்பொழுதும் ப்ரஹ்மத்தையே த்யானம் செய்துகொண்டு ஏகாந்திகளாயும் யோகிகளாயும் இருப்பவர்கள் அந்த பரமமான ஸ்தானத்தில் இருக்கிறார்கள். அந்த ஸ்தானத்தை ஸூரிகளென்னும் நித்யர்கள் எப்பொழுதும் பார்த்துக் கொண்டே இருக்கிறார்கள். அந்த ஸ்தானம் நித்யமானது. கலை, முஹூர்த்தம், முதலிய காலப் பிரிவுகள் அந்தவிபூதிக்கு எவ்வித மாறுதல்களையும் செய்யச் சக்தியற்றவை'' என்பதை அடியில் கண்ட வசநங்களால் பராசரர் உபதேசிக்கிறார்.

''ஏகாந்தினஸ்ஸதா ப்ரஹ்மத்யாயினோ யோகினோ ஹி யே |
தேஷாம் தத்பரமம் ஸ்தானம் யத்வை பச்யந்தி ஸூரய:
கலாமுஹூர்த்தா திமயச்ச காலோ ந யத்வி பூதே: பரிணாமஹேது:''

பக்திலப்யன் :

பக்தியினால் அடையத் தகுந்தவன். பக்தி எட்டு அங்கங்களை உடையது. இதையே அஷ்டாங்கபக்தி என்று சொல்லுவார்கள். இந்த பக்தி ஆறாவது அம்சம் ஏழாவது அத்யாயத்தில் சொல்லப்படுகிறது. இந்த அத்யாயத்தைப் பெரியோர் வாயிலாகக் கேட்டு அறிந்து கொள்ளலாம்.

சரண்யன் :

சரணமடைந்தவர்களை ரக்ஷிப்பவன். ஐச்வர்யம், கைவல்யம், மோக்ஷம், என்பவைகளை விரும்பி சரணாகதி செய்யலாம் என்று,

''தாபதார்த்திஸ்ததா வாஞ்சா தாவந்மோஹஸ்ததாஅஸுகம் |
யாவந்ந சரணம் யாதி த்வாமசேஷாத்யனாசனம்''

(பகவானான உம்மை சரணாகதி செய்யாத வரையில்தான், ஐச்வர்யம் கிடைக்கவில்லையே என்றோ, கைவல்யம் கிடைக்கவில்லையே என்றோ, பரமாத்மானுபவம் கிடைக்கவில்லையே என்றோ

துக்கம் இருக்கும். சரணமடைந்து விட்டால், எல்லா புருஷார்த்தங்களும் கிடைத்துவிடும்) என்ற கருத்துடைய ச்லோகத்தினுல் உபதேசம் செய்தார்.

இத்தகைய பற்பல விஷயங்களை யெல்லாம் பராசரர், புராணரத்னத்தில் உபதேசம் செய்திருக்கிருர். பராசரர் உபதேசம் செய்தவைகளையே வால்மீகி, வ்யாஸர், சுகர், முதலிய மஹர்ஷிகள் ஸ்ரீ ராமாயணம், ப்ரஹ்மஸூத்திரம், மஹாபாரதம், மற்ற புராணங்கள், ஸ்ரீ பாகவதம், முதலிய க்ரந்தங்களில் சொல்லியிருக்கிருர்கள் என்பதை, நம்முடைய பூர்வாசாரியர்கள், ஒன்றுக்கொன்று இணங்கி இருப்பதை, மேற்கோளாக எடுத்துக்காட்டி, விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை நிலைநாட்டி, விஷ்ணுவின்பரத்வத்தை ஸ்தாபித்திருக்கிருர்கள். "பராசரர் கண்ட விஷ்ணு தத்வம்" என்ற விஷயத்தைபுராணரத்னமொன்றையே கொண்டு, அடியேன் விண்ணப்பம் செய்து கொள்ளத்துவங்கினேனுகையால் அம் மேற்கோள்களையெல்லாம்,விண்ணப்பம் செய்துகொள்ளவில்லை. கால தேசங்களின் துணை குறைந்து கொண்டுவருகிறபடியால், விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு மிகவும் பொருத்தமாயுள்ள, உபநிஷத்துக்கள்,ப்ரஹ்மஸூத்திரம் பகவத்கீதை, ஸ்ரீராமாயணம், மஹா பாரதம் விஷ்ணு ஸஹஸ்ரநாமத்யாயம், விஷ்ணுபுராணம் தர்மசாஸ்திரங்கள், அருளிச் செயல்கள் முதலிய ஸாரமான க்ரந்தரத்னங்களையும் இவைகளின் ஸாரமான பூர்வாசாரியர்கள் அருளிச்செய்த ரஹஸ்யங்களையும் அவைகளின் வ்யாக்யானங்களையும், நன்ருக அறிந்து, ப்ரமாதாக்களாயும் ப்ரவக்தாக்களாயும், பிறரால் மதிக்கத் தக்கவர்களாயும் ஒரு சிலரே ஸேவை ஸாதிக்கிருர்கள்.'' "ஸ்வாத்யாய ப்ரவசனே சவேதிநாகோ மௌத்கல்ய:'' "ஸ்வாத்ய ப்ரவசனுப்யாம் ந ப்ரமதிதவ்யம்'' என்று ப்ரவசன கைங்கர்யத்தை உபநிஷத்தே சிறந்ததாகச்சொல்லிற்று. ப்ரவசனத்தை "திருத்துழாய்ச் செடிக்கு தண்ணீர் வார்க்குமாப்போலே இருப்பது இது'' என்ருர் ஸ்ரீதேசிகன். இந்த ரஸமான கருத்து,"நறியநன்மலர் நாடி'' என்ற விடத்திற்கு "ஆத்மபுஷ்பத்தை நாடி' என்று வ்யாக்யானம் செய்வது பகவத் விஷயரஸிகர்களான பூர்வாசாரியர்களுக்கே சொந்தமான சிறப்பு. இத்தகைய ப்ரவசனத்தைப் பல தடவைகள் எல்லா க்ரந்தங்களிலும் எல்லாவகையிலும் மேற்கொண்டு, உலகக்ஷேமத்திற்காகவே தம்முடைய வாழ்வை உபயோகிக்கும் உத்தமரொருவரைக் கண்டால், பாலைவனத்தில் பொய்கையைக்கண்டாற்போலே, அவரை நாடி நமஸ்கரித்து மங்களாசாஸனத்திற்காக, நம்மை, திருத்திப் பணிகொள்ளவேணுமென்று ப்ரார்த்தித்து மங்களா சாஸனபரராக நாம் ஆகவேண்டியது முதற்கடமை. நம்மை திருத்திப் பணிக்கொண்டு மங்களாசாஸன பரராக ஆக்கிய ஆசார்யனுக்கு, பார்த்தன்தேர்முன் நின்ருனை திருவல்லிக்கேணியில் திருவடிதொழுது பல்லாண்டு பாடவேண்டியது இரண்டாவது கடமை என்பதை விண்ணப்பம் செய்துகொண்டு சீலமில்லாச்சிறியனுன அடியேனும்"கண்டோம் கண்டோம் கண்டோம், கண்ணுக்கினியன கண்டோம் தொண்டீரெல்லீரும் வாரீர், பொலிக பொலிக'' வென்று கைகுவித்து மங்களாசாஸனம் பாடி நிற்கிறேன்.

---



ஸ்ரீ ருக்மிணி ஸமேத வேங்கடகிருஷ்ணன்
திருவல்லிக்கேணி

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# வ்யாஸமஹர்ஷியும் வைஷ்ணவமும்

தர்க்கார்ணவ உத்தமூர். தி. வீரராகவாசார்யர் ஸ்வாமி

ஸ்ரீ மந்நத்ரிம் ஸ்வயமதிவஸந் வேங்கடம் வந்தமாநம்
விச்வம் விச்வம் பல மனுபதம் லம்பயந் ப்ராஜஸே த்வம்
ப்ராப்தாந்ஸர்வாந் ஸபதி பவத: பாரமார்த்யாவபோதம்
ப்ராப்தாந் குர்வந் ஜய ஜய கலே: க்ரௌர்யமேதத்வ்யபோஹ்ய

ஆஸ்திக்யமென்பது உலகிலெங்கும் பரவியேயுள்ளது. நாஸ்திகவாதங்கள் பல புஸ்தகங்களிலே காணக்கிடக்கின்றன. ஆனால் நாஸ்திகன் இவன் என்று ஒருவனை முழு நாஸ்திகனுகக் கூற முடியவில்லை. இன்ப துன்பங்களுக்கு இடமான இவ்வுடல்விட்டு இன்ப வாழ்க்கையையே உயிர் பெறவேண்டும் மென்று பெரும்பாலும் நினைத்திருக்கின்றனர். ஆனுல் அதற்கு வழி என்ன என்பதை ஆராயாமல் தோன்றினபடி செய்துவருகின்றனர். அந்த வாழ்க்கை நம்முயற்சியினுல்மட்டும்பெறக்கூடியதா, தெய்வானுக்ரஹமும் வேண்டுமா என்பதை முதலில் தெளியவேண்டும். பிறகு தெய்வம் ஒன்ரு, பலவா? பலவாகில் எந்த தெய்வத்தை நாடி நீடித்த வாழ்க்கையைப் பெறலாமென்றெல்லாம் பராமரிப்பதும் அவச்யமாகிறது. இத்தகைய விஷயமெல்லாம் யுக்திகளால் ஸ்தாபிக்கபடமாட்டா. உணர்ந்தவர் சொல்லக்கேட்டுத் தெளிய வேண்டும்; உபதேசிப்பவருக்கு அந்த உணர்ச்சி எவ்வாறு ஏற்பட்டதென்பதும் இதற்காக விசாரிக்கவேண்டியதாகும். இதனுல் அனுதிகாலமாக ப்ரஜைகள் பெருகி வருவது.போல், தொன்று தொட்டு எந்த உபதேசச்சொற்கள் உருமாருமல்பெருகி வருகின்றனவோ, அவற்றையே மூலாதாரமாகக்கொண்டு தெளிவதை விட்டுப் பிற்காலத்திற்கிளர்ந்த பலமதப்பேச்சுக்களை ஆதரித்துப் பழைய சொற்களைப் புறக்கணித்தல் தகாதென்று தேறும். அச்சொற்களே வேதங்களெனப்படுகின்றன.

அவற்றின் பொருளை நன்கு தெளிய மஹர்ஷிகளே வல்லவர். ஏனெனில் அவர்கள் தவம்புரிந்து முழுவேதங்களையும் கண்டவர்கள். பொதுவாகவே யார் பேசினுலும் விரிவான பேச்சுக்களாகில் ஒன்ரேடொன்று முரண்பாடு சிலவிடங்களில் தோன்றும். எளிதிற்பொருள் அறியவரியனவாயும் பல பொருள்கள் கொண்டனவாயுமுள்ள வடமொழி மறைச்சொற்ரெடர்களில் பலவிடங்கள் இதற்கு இலக்காகும். இவற்றில் தெளிவு பெறுதற்காக மட்டும் நாம் யுக்திகளை ஸஹாயமாகக்கொள்ளவேண்டும். மறைகளைவிட்டுத் தனியுக்திகளால் ஒன்றை ஸாதிப்பது தகாது. யுக்திகளை அடியோடு தள்ளிவிட்டு, மறைகளுக்குப் பொருள் சொல்வதும் ஸாத்யமாகாது. மஹர்ஷிகளில் இவ்வல்லமை பொருந்தியவர் எவர் என்று விசாரிக்கும்போது, எல்லோரும் வேதங்களைக்கண்டவர்களென்ருலும் முழுவேதங்களையும் ருக்வேதம் யஜுர்வேதம் முதலான வேதங்களாகவும்அவற்றின்உட்பிரிவுகளாகவும் பல கிளைகளாகப்பிரிந்து அவற்றை அதிகாரிகளுக்கு அவரவர் சக்திக்குத்தக்கவாறு உபதேசித்து இக்கலியிலும் அவை கெடாதபடி பாதுகாத்தருளின வேதவ்யாஸரே சிறந்தவரென்று எளிதில் தெளியலாம். ஒவ்வொரு கலியுகத்தின் தொடங்கத்திலும் வேதங்களை இப்படி ஒவ்வொரு ரிஷி பிரித்து உதவுகின்ருரென்று புராணங்கள் கூறும்.

இப்போது நமக்கு உதவின வேதவ்யாஸராவார் க்ருஷ்ணத்வைபாயனர்என்

றும் பாதராயணரென்றும் பிறவியி னின்று வழங்கப்பெற்ற பராசரபுத்ரரே. வேதங்களைப்பிரித்து உபதேசித்த திறமையினுல் வ்யாஸர், வேதவ்யாஸர், என்னும் பிருதம் பெற்ருர். இவ்வள வோடு நிற்காமல், தத்துவஜ்ஞானத் திற்கு உதவியான பதினெட்டு புராணங் களையும் அருளினுர். சிறந்த இதிஹாஸ மான மஹாபாரதத்தை இயற்றினுர். மஹாபாரதமொன்றைக் கொண்டே இந்தவ்யாஸர் ஸாக்ஷாத் நாராயணனே என்று அறியற்பாலதென்று பராசரரும், "க்ருஷ்ணத்வைபாயனம் வ்யாஸம்வித்தி நாராயணம் ப்ரபும் கோஹ்யன்யோ புவி மைத்ரேய மஹா பாரதக்ருத்பவேத்" என அருளினது காண்க. இத்துடன் வேதங்களின் கடைப் பாகங்களான உப நிஷத்துக்களினின்றே தத்துவஹிதபுரு ஷார்த்தங்களை அறியவேண்டியிருப்ப தால் அங்கு எழும் ஐயங்களையும் விலக்கி உண்மையை நாம் அறிய உத்திரமீமாம் ஸையென்கிற சாரீரக ப்ரஹ்மஸூத்ரத் தையும் அருளிச்செய்தார். இதன் பெருமை, 'ப்ரம்ஹ சூத்ரபதைச் சைவ ஹேதுமத்:பிர்விநிச்சிதை:" என்று கீதை யிலும் போற்றப்பட்டதென்று எம்பெரு மாஞரின் திருவுள்ளம். இதனுலேயே "முனீனும் அப்யஹம் வ்யாஸ:" என்று கண்ணனும் சிறப்பாகக் கூறினது. இதனின்று இவருக்கு ஸாக்ஷாத்கார சக் தியுடன் ஆராயும் திறமையும் சிறந்த தென்று செவ்வனே விளங்கும். ஆக மற்ற மஹர்ஷிகளைக் காட்டிலும் இவருக்கு ப்ரமாணமான மறையின் அறிவும் ஆராயும் வல்லமையும் மேம் பட்டிருப்பதால், இவருடைய முடிவைப் பின்பற்றுவது நம்போன்ருர்க்கு நன்மை பெறக் காரணமாகுமென்று தேறிற்று. இவர் மஹாபாரதாதிகளான மற்ற க்ரந் தங்களால் செய்த நன்மை போதா தென்று ஸ்ரீபாகவதம் இயற்றி உதவினு ரென்பதைக் கண்டபோது வைஷ்ணவ ப்ரசார நோக்கம் மிகத்தெளிவானது.

மேலும் இவருடைய புராண-இதி ஹாஸ-ப்ரஹ்மஸூத்ரங்களைப் பார்க் கும்போது, எல்லா மஹர்ஷிகளுடைய கொள்கைகளையும் இவர் நன்கு அறிந் திருக்கிருரென்பது கண்கூடு. அவர் களின் ஆராய்ச்சிகளையெல்லாம் எடுத்து எடையிட்டுச் சீர்தூக்கித் தம் நுண் ணறிவால் நேர்மையாக விசாரித்துச் செய்த நிர்ணயத்திற்கு மேலாக ஒரு முடிவுகட்ட யாருக்கும் வல்லமையிருக்க நியாயமில்லை. புராணங்களைவிட இதி ஹாசம் சிறந்தது. தத்துவ விசாரத்தில் இழிந்து புராணங்களைப் பராமரிக்கும் போது அவற்றில் முரண்பாடு தோற்று வதை எப்படித்தீர்ப்பதென்ற வினு எழு மென்று இவரே ஆராய்ந்து—ப்ரஹ்ம தேவன் செய்த புராணங்கள் பலவிதமா யிருப்பதால் இங்கும் அவ்வாறு சொற் கள் அமைந்துள்ளன. ஆகையால் ஸாத்துவிகம், ராஜஸம், தாமஸம், ஸங்கீர்ணமெனப் பிரிவுகள் இவற்றில் உண்டு. மற்றவற்றை விட்டு ஸாத்து விகத்தையே மோக்ஷம்பெற தத்துவ ஜ்ஞானம் விரும்புகின்றவர் ஆதரிக்க வேண்டும். ஸாத்துவிக புராணங்களே மோக்ஷம் அளிக்கும். விஷ்ணுவின் பெரு மையை உள்ளபடி சொல்லும் தத்துவஜ் ஞானமின்றி, மோக்ஷம் பெறலாகா தாகையால் அதை விளக்கும் ஸாத்து விக புராணங்களே சிறந்தன—என்று வகுத்தும் உபதேசித்திருக்கிருர். ஸாத்துவிக ராஜஸ தாமஸங்கள் என்ற பிரிவுடைய வஸ்துக்களில் ஸாத்து விகமே ஆதரிக்கத் தக்கதென்பது அந் தந்த குணத்தின் தன்மையறிந்தார் எல்லோரும் இசைந்ததே. விஷ்ணு வைச் சிறப்பாகக் கூறும் ஸாத்துவிக புராணமென்பதை நாம் அறிந்த பிறகு மற்ற புராணங்களில் முரண்பட்ட பாகங் கள் அந்தந்த வஸ்துவின் புகழ்ச்சிக் காக ஏறிட்ட ஸ்தோத்ரமாமென்று அறியவேண்டும். அவற்றிலும் விஷ்ணு பாரம்யம் காணக் கிடக்கிறது. இது நிற்க.

இதிஹாஸமான மஹாபாரதத்திலே வேதவ்யாஸர் பரதத்துவமெதென்று தெளிவித்திருக்கிருரென்று பார்க்கும் போது, அவர் மற்ற பல மஹர்ஷிகளின் சொற்களாகச் சொன்னவற்றை அவர் கருத்தாகக் கொள்ளாமற்போனுலும், நேராக அவரே அருளினதான இடங் களையே பார்த்துத்தெளிதல் தகும். 'நாராயணம் நமஸ்க்ருத்ய' என்ற

தொடக்கமும், 'வ்யாஸப்ரஸாதாத் வக்ஷ்யாமி நாராயணகதாமீமாம்' என்கிற வைசம்பாயன வாக்யம் போன்றவையுமிருக்க ஒவ்வொரு பர்வத்தினின்றும் பல வாக்யங்களையும் குறிக்கலாம். ஆயினும் மோக்ஷதர்மத்தில் சிலவிடங்களும் மற்றும் சில அம்சங்களும் இங்கே குறிக்கப்படும்.

சாந்தி பர்வம் மோக்ஷதர்ம ப்ரகர்ணத்தில்யஜ்ஞாக்ரஹராத்யாயத்திலேவைசம்பாயனர் சொல்லுகிறுர்: ஸுமந்து முதலான நாங்கள் ஐந்து சிஷ்யர்கள் அத்யயனம் செய்து வந்தபோது எங்களுடைய ஸம்சயத்தைத் தீர்ப்பதற்காக வேதவ்யாஸர் இவ்வாறு அருளிச் செய்தார்—'முக்காலத்திய முழுவஸ்துக்களையும் அறிய விரும்பிப் பாற்கடலின் அருகே நான் பெரும் தவம் புரிந்து நாராயணனின் அருளால் கண்டதென்ன வென்றால்— அநிருத்தனுகத்தோற்றின மஹாபுருஷனை பரமாத்மாவினுல் படைக்கப்பட்ட பிரமன் வேதப்ரசாரம் செய்கின்ருனுய் மரீசி முதலான ப்ரஜாபதிகளையும் ஏகாதச ருத்ரர்களையும் படைத்த பிறகு அவர்கள் தங்களுக்கு அதிகாரம் அளிக்கக் கேட்க, அந்தப்பிரமன் எனக்கும் இதைப் பற்றிய சிந்தைதான், எல்லோரும் பாற்கடற் பெருமானைக் குறித்துத் தவம் புரிவோமென்று சொல்லிச் செல்ல,பெருமானும், நீங்கள் வைஷ்ணவ க்ரதுவைச் செய்தால் அதில் நீங்கள் அளிக்கும் பாகங்களுக்கு ஏற்றவாறு வேதத்திலே காம்ய கர்மாக்களையெல்லாம் உங்களின் பூசனைக்கும் அமைப்பேன் என்றருளினுன்.தேவதைகளெல்லாம்வைஷ்ணவக்ரதுவை நடத்தினபிறகு அவரவர்அளித்ததற்கு ஏற்ப, காம்யகர்மங்களை வேதங்களில் அமைத்து,

''யா : க்ரியா : ப்ரசரிஷ்யந்தி ப்ரவ்ருத்தி
பல ஸத்க்ருதா :
தாபி ராப்யாயிதபலா : லோகாந்வை
தாரயிஷ்யத',

என்று அவற்ருல் ப்ரஹ்மருத்ராதி தேவதைகள் ஆராதிக்கப்படலாமென்ருன். பிறகு,

" ஏதே யோகவிதோ முக்யா: ஸாங்க்ய
ஸாஸ்த்ர விசாரதா :''
ஆசார்யா தர்ம சாஸ்த்ரேஷு
மோக்ஷ தர்ம ப்ரவர்த்தகா :

என்று நிவ்ருத்திதர்மமாகிற மோக்ஷ தர்மத்திற்கு ப்ரவர்த்தகர்களாக ஸநகாதிகளைச் சொல்லி,

''ஸோஹம் க்ரியாவதாம் பந்த்தா :
புநராவ்ருத்தி துர்லப:''

என்று நிவ்ருத்திதர்மங்களாகச் செய்யப்படும்போது தர்மசாஸ்த்ரங்களிலுள்ள எல்லாக்ரியைகளுக்கும் தன்னை ஆராத்ய தேவதையாக நாராயணன் அருளினுன்.அதன்மேல்—லோககுருவான இந்த ப்ரஹ்மா எனது ஆஜ்ஞைப்படி ஸர்வ ப்ராணிகளுக்கும் வரன் அளிப்பான். நெற்றியினின்று இவனுக்குப் பின் பிறந்தவனுன ருத்ரனும் பிரமனின்ஆஜ்ஞைக்குஉட்பட்டு ப்ராணிகளை தரித்து வருவான். நீங்கள் எல்லோரும் ப்ரவ்ருத்தி தர்மங்களால் ஆராதிக்கப்பட்டு அதிகாரம் செலுத்தி உலகத்தை நடத்துங்கோள் என்றவாறெல்லாம் தேவதைகளுக்கு உபதேசித்து விட்டு, தனது ஹயக்ரீவ வுருவைப் பிரமனை தர்சிக்கச்செய்து மறைந்தருளினுன் என்று இவ்வாறு உபதேசித்து வேதவ்யாஸர் மேலே, ஆகையால் பத்மநாபனுன பெருமாலே யஜ்ஞாக்ரஹரனுவான். எல்லோராலும்ஆராதிக்கப்படுகிறவன்.நிவ்ருத்தி தர்மங்களெல்லாம் அவனையே குறித்து அனுஷ்டிக்கப்படும். அவனே தேவன். அவனே கதி.

க்ரிய தாம்மத் வச: சிஷ்யா:—
ஸேவ்யதாம் ஹரிரீசவர :
கீயதாம் வேதசப்தைச்ச
பூஜ்யதாம் ச யதா விதி''

என்று முடிவாக அருளினுர் என்றவாறு இங்கே கடைச்லோகத்தில் எந்த வேத சப்தமும் அவனையே சொல்வதாகையால் ப்ரஹ்ம ருத்ர இந்திராதி சப்தங்களைக் கொண்டும் அவனையே பூஜிப்பதே விதிப்படி அனுஷ்டானமாகுமென்று முடித்திருப்பதையும் நோக்குக.எல்லா சிஷ்யர்களும் குமாரரான சுகரும் இப்படி வேதவ்யாஸரின் உபதேசத்தைப் பெற்றிருக்கிருேமெனவும் மேலே வைசாம்பாயனர் சொல்லிமுடித்தார்.

348ல்வைசம்பாயனர் ''யோஹ்யஸ்மாகம் குரு:ச்ரேஷ்ட: க்ருஷ்ணத்வைபாயனோ முனி: ஜகௌபரமகம் ஜப்யம் நாராயண முதீரயந்கத்வா அந்தரிக்ஷாத் ஸததம் க்ஷீரோதமமருதாசயம் பூ ஜ யி த் வா தேவேசம் புனராயாத் ஸ்வமாச்ரமம்'' என்று பாற்கடல் சென்று பெருமானைப் பூசித்து வருபவர் வ்யாஸரென்று அவரு டைய வல்லமையை யறிவித்தார்.

இனித் தனியாக வ்யாஸர் தம் புதல் வரான சுகருக்குச் செய்த உபதேசத்தை நோக்குக—238ல் ''ப்ரஹ்மேதிசாபி விக் யாதம் யத்வை பச்யந்தி ஸூரய: ப்ரஹ்ம தேஜோமயம் பூதம் பூத காரணமத்புதம்'' என்று நித்யஸூரிகளால் எப்பொழுதும் காணப்படும் ப்ரஹ்மம் ஆதியில் இருந்த தென்று சொல்லி அதனின்று ப்ரக்ருதி யின் பிரிவைப் பகரும் போது, ''மாயாம் வைஷ்ணவீம் ப்ரக்ருதிம் விது:'' என்று அதனை விஷ்ணுவினுடையதாக வர்ணித் தார். ''தைவீஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா'' என்றது பகவத்கீதை. இதனால் பர ப்ரஹ்மமும் விஷ்ணுவும் ஒன்றென விளங்கும். இந்த பரமாத்மா மூன்றாக, மூன்று கார்யங்கள் செய்கிறான் என்று ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களை மேலே குறிக்குமிடத்தில், ''பாதி நாரா யணோ அவ்யய:''என்று விஷ்ணு என்று சொல்லுக்கு ப்ரதியாக நாராயண என்ற சொல்லையும், முன்னே நாராயண னுடையதான ப்ரக்ருதி என்ன வேண்டு மிடத்திலே விஷ்ணுவின் ப்ரக்ருதி என்ற சொல்லையும் ஊன்றி நோக்கும் போது, விஷ்ணு ப்ரஹ்ம ருத்ரர்களைப் போலே ஜீவனல்லன்; நாராயணனே என்ற கருத்து இவருக்கு உள்ளது தேறும். இதனால்''மாயினம்து மஹேச்வரம்என்ற ச்வேதாச்வதரோபநிஷத் வாக்யத் திலே சொன்ன மாயியான மஹேச்வரன் விஷ்ணு என்றதும் தெரிய வரும். ருத் ரனையே தொழுது சுகரென்ற புதல் வரைப் பெற்ற வேத வ்யாஸர் அந்த அருமையான புதல்வரைக் குறித்தே ஹரியே பரனென்று உபதேசித்ததும், அதன்படி சுகர் யோகம் செய்து ஸாக்ஷாத்கரித்து கைலாஸ மலையி னின்று ஸூர்ய மண்டலம் பார்த்து மேலே சென்றதும், அப்போது புத்ர வியோகத்தாலே வருந்திய வியாஸ ருக்கு ருத்ரன் ஆறுதல் அளித்து சாயா சுகம்-சுக நிழலொன்று தந்து-அதனைக் கண்டு கொண்டே த்ருப்தி பெறச் சொன்னதுமான (340-341) இவற்றை யெல்லாம் அறிந்த போது, வ்யாஸர் சிவத்வேஷியல்லர்; ஆயினும் பர தேவதை விஷ்ணுவே; விஷ்ணுவே நிவ் ருத்தி தர்மங்களால் ஆராதிக்கப்பட வேண்டியவனென்ற நிர்ணயமுடைய வரென்பது ஸ்பஷ்டம். ''மஹர்ஷே கீர்த் தனுத்தஸ்ய பீஷ்ம: ப்ராஞ்ஜலி ரப்ரவீத்'' என்று பீஷ்மர் வேத வ்யாஸருடைய திருநாமத்தை, யாராவது சொல்லக் கேட்டாலும் அஞ் ஜலி செய்து, கௌரவிப்பவரென்றது சொல்லப்பட்டது. அத்தகைய பீஷ்மர் 'வ்யாஸேன தேவச்ரவஸா நாரதேன மஹர்ஷிணு' (46) என்றவாறுன எண் ணற்ற மஹர்ஷிகள் குழுமிக் காணும் போது, கண்ண பிரானுக்கு மேற்பட்ட தேவதையில்லையென்று அறுதியிட்டுச் செய்தருளின ஸ்தவராஜத்தைக் கண்ட போது,அங்கே ''நாராயண பரம்ப்ரம்ஹ நாராயண பரம்தப: நாராயண பரம்ஸத் யம், நாராயண பரம்பரம்'' என்றபடி தத்வஹித புருஷார்த்தங் களெல்லாம் நாராயணனையே பரமாக உடையன என்றது ஸர்வ மஹர்ஷி ஸம் மதமெனத் தெளியப் பெறும் பீஷ்மரின் உபதேசமாக வ்யாஸரால் வெளியிடப் பட்ட விஷ்ணு ஸஹஸ்ரநாமமும், கிரு ஷ்ண பகவானின் உபதேசமாக வெளி யிடப்பட்ட பகவத்கீதையுமே போதும். அவனுடைய பரத்வத்தை ஸ்தாபிப் பதிலே வியாஸரின் நோக்கு நன்கு தெளிவதற்கு — ஆசிரங்கரரும் விஷ்ணு ஸஹஸ்ர நாம பாஷ்யத்திலே, ஹரி வம் ஸத்திலே கைலாஸ யாத்ரை கட்டத்தி லேயுள்ளபரமசிவன் உபதேசமொன்றை எடுத்துக் காட்டுகிறார். ''ஹரிரேக: ஸதா த்யேயோ பவத்பி: ஸத்வ ஸம்ஸ் திதை: உபாஸ்யோயம் ஸதா விப்ரா: உபாயோ அஸ்மி ஹரே: ஸம்ருதௌ'' என்ற தாகும் - பரமசிவனிடம் ப்ரார்த் தனைசெய்தால், அவன் மோக்ஷமளிக்க வாகான். பின் என்னவெனில், மோக்ஷ மளிக்கும் விஷ்ணுவை உபாஸித்தே மோக்ஷம் பெற வேண்டும். விஷ்ணு தத்

துவத்தை உபாஸிக்க வழியை அவன் உபதேசிக்க வல்லவனென்றது அதன் பொருள்; மூன்று மூர்த்திகளுக்கும் ஐக்யமோ ஸாம்யமோ தத்துவமாகில் இவ்வாறு சொல்வது பொருந்துமா? ஆகையாலும் அம்மூர்த்திகளுக்கு பேதமேயுள்ளது. அற்ப பலனேயே விரும்பி ஸம்ஸாரி நிலையை வெறுக்காத ப்ராக்ருதர்கள் அது விஷயத்திலும் அம்மூர்த்திகளுக்கு வாசியை வைத்து ஒரு மூர்த்தியை அவமதித்தல் தகாதென்பதற்காகச் சிற்சில விடங்களிலே மூவருக்கும் அபேதம், ஸாம்யம் சொல்லப்படும். ஒவ்வொருவஸ்துவினுடையவும் ஸ்ருஷ்டி, ஸ்த்திதி, ஸம்ஹாரங்களிலே மூவரும் வாசியின்றி ஸம்பந்தப்பட்டிருக்கிறார்களே. நிற்க,

பீஷ்மர் தர்மபுத்திரருக்கு (206) நாராயணனின் மேன்மையைச் சொல்ல இழிந்து, நாரத-வ்யாஸ-அஸித-தேவல வால்மீகி-மார்கண்டேயாதி மஹர்ஷிகளிடம் நான், கேட்டதைச் சொல்லுகிறேனென்று தொடங்கி, ஸர்வஜகத்திற்கும் காரணமாய், உலகினைக் காக்க உயர்ந்த அவதாரங்கள் பல செய்கின்றவன் என்று புகழ்ந்து முடிவாக, "அங்காநி சதுரோ வேதா, மீமாம்ஸா ந்யாய விஸ்தர: இதிஹாஸ புராணானி தர்மா: ஸ்வாயம்புவாதய: ய ஏவ ப்ரதிவர்த்தந்தே வேதாந்தாநி ச ஸர்வச: பக்திஹீனா நதைர் யாந்தி நித்யமேனம் கதஞ்சன:.... ......தஸ்மாத் புத்தஸ்த்வமேவைனம் த்யாஹி நித்யமதந்த்ரித: தேஹவா நிவயோ விஷ்ணுரஸௌ மாயாமயோஹரி:" என்று கண்ணனே வேத வேதாந்த வேதாங்க ஸ்ம்ருதி-இதிஹாஸ புராணாதிகளான எல்லாச் சொற்களுக்கும் விஷயமானவன். பக்தியில்லாதவர்கள் அவற்றிலிருந்து அறியவியலார். பக்தியுடன் ச்ரத்தையுடன் சோம்பலின்றி ஆராய்பவனுக்கு இந்தத் தெளிவு பிறக்குமென்கிறாராய் இந்த விஷயம் வேதவ்யாஸரிடத்திலிருந்து தமக்கு அறியலாயிற்று என்றார்.

இந்த பீஷ்மரே, தர்மபுத்ரர் மோக்ஷம் பெற விரும்புகின்றவர்கள் மரண காலத்திலே என்ன நினைக்க வேண்டுமென்று வினவினபோது (210) நாராயணன் நாரதருக்குச் செய்த உபதேசத்தை யறிவிக்கின்றாராய், வாஸுதேவ த்வாதசாக்ஷர மந்த்ரம் ஜபித்து பரவாஸுதேவனை நாராயணனை வெகு விரிவாக வர்ணித்து, 'சிந்தயந்தோ ஹி யம் நித்யம் ப்ரம்ஹேசநாதய: ப்ரபும் நிச்சயம் நாதி கச்சந்தி தமஸ்மி சரணம் கத: |' 'த்வாமேவாஹம் ஸ்மரிஷ்யாமி மரணே பர்யுபஸ்திதே' "அந்ருணோ கந்துமிச்சாமி தத் விஷ்ணோ: பரமம்பதம்" என்றெல்லாம் ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கு மேலான விஷ்ணுவையே சரணமடை வதைச் சொன்னார்.

இத்தகைய பீஷ்மரின் உபதேசமான விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தையும், பகவத் கீதையையும் தமது மஹாபாரதத்திற்குப் பெருமையளிப்பனவாக வ்யாஸர் கருதியுள்ளார். அனைவரும் ஆதரத்துடன் பாராயணம் செய்கின்ற அவற்றினின்றே எளிதில் தத்துவ ஞானம் பிறக்க வேண்டியிருக்க, அவற்றைப் படித்தும் விவேகமற்றிருப்பாரைக் காணும்போது, பக்தியற்றவர்க்கு தத்துவ ஞானம் எத்தனைதரம் ஓதினாலும் பெறப்படாமாட்டாதென்று முன் பீஷ்மர் பகர்ந்ததே உண்மையாக விளங்குகிறது. மற்றும், 'ஆலோட்ய ஸர்வ சஸ்த்ராணி விசார்ய புந: புந: இதமேகம் ஸுநிஷ்பந்நம் த்யேயோ நாராயணஸ் ஸதா | ஸத்யம், ஸத்யம் புனஸ் ஸத்யம் உத்ருத்ய புஜமுச்யதே | வேதாச் சாஸ்த்ரம் பரம் நாஸ்தி நதைவம் கேசவாத்பரம்|' என்ற வசனங்களினின்றும் தெளியலாம்.

உபநிஷத்துக்கள் போன்ற ப்ரமாணங்களைக் கொண்டு நாமும் ஆராய்வோமென்று அவரவர் இழிந்தாலும் அவ்வாராய்ச்சியில் முடிவாக பெறக்கூடியதென்னவெனில்—[தத்வம் ஜிஜ்ஞாஸமானானாம் ஹேதுபி:ஸர்வதோ முகை: | தத்வ மேகோ மஹாயோகி ஹரி நாராயண: பர:"

என்றபடி நாராயணனே பரதத்துவமென்பதே, எனவும் வ்யாஸர் தெரிவித்துள்ளார். உபநிஷத் விசாரமாக அமைந்தது ப்ரஹ்மஸூத்ரம்.

இங்கு இவ்வாறு வினா எழும். விஷ்ணு நாராயணாதி சப்தங்களிலொரு பெயரை

யும் ப்ரஹ்மஸூத்ரத்திலே. குறிக்க வில்லையே. அவ்வாறிருக்க விஷ்ணு வையே பரதேவதையாக ப்ரஹ்ம ஸூத்ரம் கருதுமென்ன முடியுமோ என்றது அது. இதற்கு விடை ப்ரஹ்ம ருத்ராதிகளின் பெயரைக்கூட குறிப்பிட வில்லையாகையால், அவர்களிலொரு வரைப் பரதத்துவமாக நினைக்கிரு ரென்றும் கூறமுடியாதே. பரதத்துவமே கிடையாதென்ற கருத்தானால், ப்ரஹ்ம ஸூத்ரமே வேண்டாவே. ஆகையால் ஏதோ ஒன்றை அவர் பரதத்துவமாகக் கூறியிருக்கிருர். அதை இன்னதென்று நேர்ச் சொல்லாலே ஏன் சொல்ல வில்லையெனில், சொல்லாமலே விளங்கு மென்றே. அவர் கையாண்ட உபநிஷத் வாக்யங்களிலே அவர் நிர்ணயம் செய்த பொருள்களைக் கொண்டு பார்த்தால் எது தத்துவமாக ஏற்படுமோ அதே அவர் கருத்தாக வேண்டும். இல்லை யேல், "ப்ரம்ஹ ஜிஜ்ஞாஸா" என்ற ஸமாஸத்தில் நான்முகனைக் கொள்ள லாம், அவர்தானே மேலே சொல்லும் ஜன்மத்திற்குக் காரணமென்றும் கேட்க லாம். இவ்வளவு விசாரிக்க இழிந்தவர் கள், இதை விசாரித்து முடிவு கட்டத் திறமையற்றவராக முடியாதென்று அவர் கருத்து. விபரீதமான முடிவு வராதென்பது முன் அவர் கூறிய ச்லோகத்தினுலும் அறியக் கூடியதே. மேலும் அவர் எழுதிய க்ரந்தங்களில் மஹாபாரதமும் சேர்ந்ததே. அதைப் படிக்கும்போது, நாராயணனுக்குப் பிர மன் மகனென்றும், பிரமனின் மகன் பரம சிவனென்றும் அவர்களும் அபாரமான சக்திவாய்ந்தவர்களென்றும் மற்ற தேவதைகளும் அவர்களுக்கு கீழ்ப்பட்ட வராயினும் அற்புதமான சக்தியுடைய வர்களே என்றும் எல்லாம் நாராயணன் விஷ்ணு, கிருஷ்ணன் எனப்படும் பெரு மானலே அளிக்கப்படுகிறதென்றும், தெளியும்படி பன்னிப் பன்னி அவர் பணித்திருந்தும், நாராயணனையே பர தத்துவமாகக் கொள்ளுங்கள் என்று உபதேசித்திருந்தும் நாம் ப்ரஹ்ம ஸூத்ரத்தில் வேறொன்றைப் பரதத்துவ மாகக் கூற முயன்றோமாகில் அது நமது கோட்பாடாகுமே யல்லது வ்யாஸரின் கருத்தோ பிரஹ்ம ஸூத்ரத்தின் பொருளோ ஆகாது; வேறொன்று பொருளாகாது, நாராயணன் பொரு ளென்றே நன்கு விளங்குகிறதென்று ப்ரஹ்ம ஸூத்ரத்தில் ஸர்வ வ்யாக்யா நாதி கரணம் முதலிய இடங்களிலே ச்ருதப்ரகாசிகை யென்கிற ஸ்ரீ பாஷ்ய வ்யாக்யானத்திலே, வெகு விரிவாக அருளிச் செய்திருக்கிருர். அவ்வளவு ஆராய்ச்சி செய்ய வியலாமற் போனாலும் சுருக்கமாகக் கீழ்க்கண்ட வகையில் ஸாரமாகத் தெளியலாம்—

ப்ரஹ்ம விசாரத்தைத் தொடங்கி உலகின் ஜன்மஸ்திதி ப்ரளயங்களுக்குக் காரணமே உபநிஷத்தில் ஓதப்பெற்ற ப்ரஹ்மமென்று உபதேசித்த போது தைத்திரியம் முக்கியமாக அவர் மனத் தில் திகழ்ந்தது. அதனால் ஸ்ருஷ்டிக்கு வேறு காரணம், ஸ்திதிக்கு வேறு, ஸம்ஹாரத்திற்கு வேறென்ன வேண்டா, எல்லாவற்றிற்கும் காரண மொன்றே என்றும் அறிவித்தார். அந்த தைத்திரீய வாக்யம் ஆனந்த மய வித்யா ஸந்தர்ப்பத்தில் இருப்பது. அது நான் முகனுக்கும் நூறு மடங்கு மேலான ஆனந்தமுடையவனைச் சொல்லுகிறது. அவன் ஸூர்ய மண்டலத்திலும் நமது உடலில் ஹ்ருதயத்திலுமிருப்பவன். விஜ்ஞான மயனென்ற எல்லா ஜீவனுக் கும் மேற்பட்டவன் என்கிறது. ஸூர்ய மண்டலத்தில் யார் இருப்பவன் என் பதை விசாரிக்கும்போது, 'யதா கப் யாஸம் புண்டரீகம் ஏவமக்ஷிணி' என்று செந்தாமரைக் கண்ணனென்ற ச்ரிய: பதியே என்று மேலே தெரிவித்தார். அந்தர்யாமி ப்ராஹ்மணத்தையும் அங்கே குறிப்பிட்டார். அந்த ப்ராஹ் மணம் நாராயணனைச் சொல்வதென்பது ஸுபாலோபநிஷத்தினின்று நன்கு விளங்கும். ஸத்வித்யையென்கிற கட் டத்தை விசாரிக்கும்போது, ஸாங்கிய சாஸ்த்ரத்திற் சொல்லுகிறபடி அசேத மான மூல ப்ரக்ருதியையே உபநிஷத் திற் சொன்ன ஜகத் காரணமாகக் கொண்டாலென்ன என்ற கேள்வி பிறக்க அதற்குப் பலவாறாக மறுமொழி மொழியும்போது, கதிஸாமாந்யத்தைப்

பார்க்க வேண்டுமென்றூர். அதாவது உலக ஸ்ருஷ்டிக்குக் காரணத்தைக் கூற வந்த உபநிஷத் வாக்யங்களையெல்லாம் எடுத்துக் கொண்டு ஒவ்வொரு வாக்யத்திலும் சொல்லப்பட்ட விசேஷத்தைக் கவனிக்க வேண்டுமென்பதே. அப்படி பார்க்கும்போது ஸத்-ப்ரஹ்மம்-ஆத்மா என்றவாறு ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு பெயராலே வழங்குவதால் ப்ரஹ்மம் தவிர வேறு ஸத்து காரணமல்ல ஆத்மாவாகக் கூடியதல்லது வேறு காரணமல்ல என்று ஏற்படும். இப்படியாக முடிவாக, 'ஏகோ ஹவை நாராயண ஆஸீத் நப்ரஹ்மா நேசாந:' என்கிற காரண வாக்யத்தையும் கண்டால், ப்ரஹ்ம ருத்ராதிகள் காரணமாக மாட்டிலர். நாராயணனே காரணமென்பதும் வெகு ஸுலபமாக விளங்குமென்று சொன்னதாயிற்று. இவ்வளவு கூட பராமரிக்க முடியவில்லையென்றுல் அவன் உபநிஷத்துக்களைக் கொண்டு ப்ரஹ்ம விசாரம் செய்யவல்ல அதிகாரியல்லன் என்பதே வியாஸரின் கருத்து.

மற்றொரு விஷயம் கேண்மின். வ்யாஸர் உபநிஷத்துக்கள் பலவற்றை விசாரிக்கின்றவர், புருஷஸூக்தம் யாரைச் சொல்லுகிறதென்பதை விசாரிக்கவேயில்லை. அது மட்டுமல்ல, ஜ்யோதிரதிகரணத்தில் ஒரு வாக்யத்தை விசாரிக்கும்போது, இங்கே பகவானுடைய நான்கு பாதங்களைச் சொல்லும் புருஷஸூக்த மந்த்ரம் இருப்பதாலே, இங்கே ப்ரஹ்மமே சொல்லப்பட வேண்டுமென்றூர். இதனுல் புருஷஸூக்தம் ப்ரஹ்மத்தைச் சொல்வது விசாரிக்காமலே தீர்ந்த விஷயமெனத் தெரிய வருகிறது. அதில் ஸம்சயமில்லையாகையாலே விசாரம் செய்யவில்லையென்றனர் ச்ருதப்ரகாசிரியரும். எல்லா வேதங்களிலும் ஓதப்படும் புருஷஸூக்தம் நாராயணனை சொல்வதென்பது அருகில் 'ஹ்ரீச்சதே ந்லக்ஷ்மீச்ச பத்ந்யௌ' என்கிற வாக்யத்தில் அவனை ச்ரிய:பதி என்றதாலேயே தெளிவாகிறதோடு, பற்பல ஸம்ருதிகளிலும் அதை விஷ்ணு விஷயமாகவே மஹர்ஷிகள் ஒருவித ஸம்சயத்திற்கும் இடமின்றி கோஷித்திருப்பதாலும் ஸ்பஷ்டம். ஆகவே அதைத் தனியே வைத்துவிட்டு, அதுதவிர உபநிஷத்துக்களைக் கொண்டே, அந்த விஷ்ணுவென்ற ப்ரஹ்மத்தை ஸ்தாபிப்பதில் வ்யாஸரின் கருத்துத் தெரிய வருகிறது. அப்படி ஸ்தாபிப்பவர் புருஷஸூக்தத்திற் சொன்ன தேவதையை விட்டு, வேறு தேவதையை ஸ்தாபிக்கக் காரணமேது? இத்துடன் புருஷஸூக்த மந்த்ரத்தையும் எடுத்துக் காட்டினுராகையாலே ஸம்சயத்திற்கு இடமேயில்லை.

மேலும் மஹர்ஷிகளைப் போலே நாமும் நமக்குக் கிடைத்த உபநிஷத்துக்களைக் கொண்டே தத்துவ நிர்ணயம் செய்ய முற்படவேண்டும். அப்படிச் செய்தாலே ஸாங்க்யாதி மதங்களிற் சொன்ன ப்ரக்ருதியோ ஜீவனே ஜகத் காரணமில்லையென்று தேறும். ஆகாசம் ப்ராணன், சோதி, இந்த்ரன் என்றூற் போலே சில பேர்களைக் கொண்டு மிரண்டுவிடக் கூடாது. அவை ஒன்றுக்கொன்று முரண்படும். மற்ற முக்ய வாக்யங்களில் ஏற்கனவே தேறினதையே அவையும் சொல்வதாகும். இப்படிசெய்த முடிவுஸ்ம்ருதிகளுக்கோ யுக்திகளுக்கோ பொருந்தாமலிருந்தால் என் செய்வதென்று சிலர் நினைக்கிறூர்கள். அது தவறு. இதே பல ஸ்ம்ருதிகளுக்கும் பொருந்தினதாகும். ஸாங்க்ய ஸ்மிருதியைப் போன்ற சில ஸ்ம்ருதிகளுக்காக வெகு ஸ்ம்ருதிகளைவிடலாகாது. யுக்திகளைப் பார்த்தாலும், அவர்களுடைய யுக்திகள் நம் மதத்தில் தோஷத்தைக் காட்டக் கூடியவையாக இல்லை. தங்கள் மத ஸ்த்தாபனத்திற்காக, அவர்கள் சொன்ன யுக்திகளும் எல்லாம் ஆபாஸமாயிருக்கின்றன என்று வ்யாஸர் முழு வைதிகராகாத மதஸ்தர்களை துஷிப்பதை ப்ரதானமாகக் கொண்டார். முழு வைதிகனுயிருப்பவன் ஒருவன் கூட விஷ்ணுவைப் பரதேவையாக நினைக்காமல் பிரமன் ருத்ரன் என்றூற் போன்றவர்களை ஸ்த்தாபிக்க முன்வர மாட்டான் என்பது அவருடைய கருத்து.

ஒரு தேவதையாகவும் சொல்லப்பட மாட்டாத நிர்குண ப்ரஹ்மமொன்றை

ப்ரஹ்மஸூத்ரப் பொருளாகச் சொல்வது முழு மோசமான விஷயமென்பதை இங்கு ப்ரஸக்தியில்லையாமையாலே விரித்துரைக்க வேண்டா. அதைக் கூறும், அத்வைதிகளும் ஆதியில் ஸகுண ப்ரஹ்மத்தை முதற்படியாகக் கொண்டு, விஷ்ணு பாரம்யத்தையே நினைத்திருந்தார்கள். சிவனுடைய பாரம்யத்திற்குச் சிறிதும் இடமளிக்கவில்லை. அத்வைதிகள் வைஷ்ணவர்களாகாமல் பெரும்பாலும் சைவர்களாக மாறினதுபோல் தோன்றுவதெல்லாம் சிறிது காலமாகவேயென்பது ஆராய்ந்தால் தெரியவரும். இதெல்லாம் கலியில் பாஷண்டிகளின் ஸஹவாஸத்தால் ஏற்படும் கேடென்று பராசரமஹர்ஷியே விஷ்ணு புராணத்தில் வருந்திச் சொல்லுகிறார்.

"கலௌ ஜகத்பதிம் விஷ்ணும் ஸர்வ ஸ்ருஷ்டாரம் ஈச்வரம் நார்ச யிஷ்யந்தி மைத்ரேய பாஷண்டோ பஹதா ஜநா:" என்றாரே. விஷ்ணுவே உலகுக்கு ஸ்ருஷ்டி முதலிய செயல்களுக்குக் காரணமாய் ஸ்வாமியாய் நியந்தாவாயிருக்க, கலியிலே ப்ரஜைகள் பாஷண்டிகளால், கெடுக்கப்பட்டு அவனுடைய ஆராதனத்தை விட்டொழிவரேயென்கிறாரே. க்ஷுத்ர பலன்களில் பெரு நோக்குடையராய் வேறு தேவதைகளின் வழிபாட்டிலிழிவரென்று பகவத்கீதையிலே சொன்னபடி உலகம் தேவதாந்தரங்களைப் பூஜிப்பது ஸஹஜம். ஆயினும் தத்துவ உணர்ச்சியில் மாறுபாடும் தலைகீழான செயல்களும் தகா. இது நாளடைவிலே விஷ்ணு த்வேஷத்திலே முடிந்து ஆஸுரப் பிறவியை விளைக்கிறது. மேன்மேல் இது கிளர்ந்து பல விபரீத மதங்கள் பரவ அதனாலும் ப்ரஜைகளின் பரிதாப நிலையைக் கண்டு ஆழ்வார்களும் வருந்துகின்றனர். நம்மாழ்வார் திருவாய்மொழி தொடங்கும் போது குண விபூதி விக்ரஹங்களுடன் அவனது பரத்வத்தையும், 'அவரவர் தமதமது அறிவறி வகை வகை' என்று தேவதாந்தரங்களுடையவும் அவர்களை வழிபடும் ப்ரஜைகளுடையவும் நிலைகளை நுவன்று, 'சுடர், மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே' என்று வேத வேதாந்த ப்ரமாணங்களாலேயே எல்லாம் தெளிவாகுமென்றறிவித்து, இதனைத் தெளியாமல் பிணக்குற்றுப் பரிதபிக்கின்றதென், 'பிணக்கற வறுவகைச் சமயமும் நெறியுள்ளியுரைத்த கணக்கறு நலத்தனன், அவனுடை உணர்வு கொண்டு பகவத் கீதா பாரத பாஞ்சராத்ர ப்ரஹ்ம ஸூத்ராதிகளிற் கண்ட வழிநின்று வாழ வேண்டுமென்றும், உணர்ந்துணர்ந்துணரிலும் இறை நிலையுணர்வரிதென்றும், நன்றெழில் நாரணனோடு நான்முகனையும் அரனையும் சேர்த்து வீண் விசாரம் செய்கின்றதை நிறுத்தித் திருவுடையடிகள் தம் நலம் கழல் வணங்க வேண்டுமென்றும் உபதேசித்தார். பின் இரண்டாம் பத்திலே திண்ணன்வீடென்ற திருவாய் மொழியிலே, இப்படி வேத வேதாந்தங்களிலே வேறு துணை வேண்டாமலே திருமாலின் பெருமை தெளிவதாயிருக்க, மஹர்ஷிகளின் மொழிகளும் அதற்கு நன்கு விளக்கமாயிருக்க, எம்பெருமானும் அடிக்கடி தோன்றி உபதேசமும் அனுஷ்டானமும் நடத்தா நிற்க, பல புராணங்கள் இருப்பினும் வால்மீகியருளின ராமாயணத்தையும் பராசரர் அருளிய விஷ்ணு புராணத்தையும் வ்யாஸர் இயற்றிய மஹாபாரதத்தையும் அவ்வளவிலும் த்ருப்தி பெருமல் வ்யாஸர் ஸ்ரீமந் நாராயணனே பரதத்துவமென்று அவனது அடிகளில் பக்தி ஜ்ஞானங்களை வளர்ப்பதற்காகவே யருளின பாகவதத்தையுமே உலகில் எங்கும் உயர்ந்தோர் பாராயண ப்ரவசனங்கள் செய்துவாரா நிற்க, இதற்கு மேலும் உலகம் கலக்கமுற்று அவனையறியாமல் வாதம் செய்கின்றனரே. நாமும் இதற்குப் பொழுதைப் போக்க வேண்டி நேர்ந்ததே என்று கலங்கி, "ஏ பாவம் பரமே எழுலகும் ஈபாவம் செய்து அருளால் அளிப்பாரார்? மாபாவம் விட அரவிற்குப் பிச்சை பெய் கோபால கோளரி ஏறன்றியே" எனவருளினர். வெகு ஸ்பஷ்டமாய் வ்யாஸர் வைஷ்ணவ ச்ரேஷ்டரென்றும், வைஷ்ணவ ப்ரசாரத்திற்கே பிறந்து பூரணமாக உழைத்தவரென்றும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் காணுகிறதன்றோ.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# சுகர் சுவைத்த வேதக் கனி

ஸ்ரீகௌஸல்யா நந்தநாசார்ய:

இதிஹாஸங்களில் ஸ்ரீமத்ராமாயணத்துக்கு எவ்வளவு பெருமை உள்ளதோ அவ்வளவு பெருமை புராணங்களுள் ஸ்ரீ பாகவதத்துக்கு இருப்பதைக் காண்கிறோம். இதிஹாஸ புராணங்கள் தத்வ ஹித புருஷார்த்தங்களை உபதேசிக்கும் வேதங்களுக்கு உபப்ரும்ஹணமாக ஏற்பட்டவை. உபப்ரும்ஹணங்களின் உதவியில்லாமல் வேதார்த்தத்தை விசாரிக்கப் புகுவது சரியான வழியில்லை.

உபப்ரும்ஹணமாவது——

ஸர்வ வேத வேதார்த்தங்களைக் கசடற அறிந்து அவைகளைத் தம் யோக மஹிமையினால் ஸாக்ஷாத்கரித்த மஹான்களுடைய அனுபவம் கனிந்த மொழிகளைக் கொண்டு நாம் கற்றுள்ள வேத பாகங்களின் அர்த்தத்தைத் தெளிவுபடுத்திக் கொள்வதாகும். ஏனெனில் வேதங்களோ அனந்தம். அவைகளில் நாம் கற்பதோ மிகவும் ஸ்வல்பம். அத்துடன் அதை விசாரிக்கப் புகும் நம் அறிவும் அல்பம். வேதார்த்தங்களோ அனுபவத்தினால் திகழ்பவை. அப்படிப்பட்ட அனுபவத்திற்கும் நமக்கும் எவ்வளவோ தூரம்.

வேதங்கள் அனைத்தையும் கசடறக் கற்றவர் ஸ்ரீ வால்மீகி. வேதார்த்தங்களை அவரைப் போல் அறிந்தவர் எவரும் கிடையாது. அவர் ஈடு இணையற்ற தபஸ்வியும் கூட. ஆயினும் ஸ்ரீ நாரத பகவானிடமிருந்து வேதத்தின் தத்வார்த்தமான ஸ்ரீ ராம விருத்தத்தை மிக ஆவலுடன் கேட்டறிந்தார். ஆனால் அதோடு அவர் திருப்தி அடைந்துவிடவில்லை. நம்மைப் போல் கேட்டதை வைத்துக்கொண்டு ஸ்ரீராம கதையைத் தன் சொந்தக் கற்பனையினால் தன் இஷ்டத்துக்கு உருவாக்கி ஸ்ரீமத் ராமாயணத்தை எழுதியும் விடவில்லை. பின் ஏனோவெனில்—"தத: பச்யதி தர்மாத்மா தத்ஸர்வம் யோகமாஸ்தித:" என்றபடி முறைப்படி யோகத்தில் அமர்ந்து ஸ்ரீ ராம விருத்தாந்தம் அனைத்தையும் உள்ளபடி ஸாக்ஷாத்கரித்து, அதன் பிறகு ஸ்ரீமத் ராமாயணமென்னும் இதிஹாஸ ரத்தினத்தை வேதோபப்ரும்ஹணமாக இவ்வுலகிற்கு உபகரித்தருளினர்.

அவ்விதமே——

ஸ்ரீ கிருஷ்ணத்வைபாயனர் என்றும் ஸ்ரீ பாதராயணரென்றும் மிகப் பிரஸித்தமாக வழங்கப்படும் ஸ்ரீ வியாஸர் வேதாசார்யர் எனப் புகழ் பெற்றவர். அவருக்குத் தெரியாத வேதங்களில்லை; அவர் அறியாத வேதார்த்தங்களில்லை. அவருடைய சிஷ்யர்களான பைலர் வைசம்பாயனர் ஜைமினி ஸுமந்து என்னும் நால்வர் முறையே ருக் யஜுஸ் ஸாம அதர்வ எனப்படும் வேத சாகைகளின் விபாக நிமித்தமாக அவரால் நியமிக்கப்பட்டவர்கள். ரோமஹர்ஷணர் என்னும் தம் சிஷ்யரை இதிஹாஸ புராணங்களை ஆராய ஸ்ரீ வியாஸர் நியமித்திருந்தார். அதன் நிமித்தமாக ரோமஹர்ஷணரின் அதீனத்தில், திரய்யாருணி, கச்யபர், ஸாவர்ணி, அகிருதவ்ரணர், வைசம்பாயனர், ஹாரீதர் என அறுவர் ஈடுபட்டிருந்தனர்.

தம் சிஷ்யர்களும் தாமுமாக இருந்து, வேத விபாகம் செய்த ஸ்ரீ வியாஸர் கர்ம பரமாயும் பிரும்ஹ ப்ரமாயும் விளங்கும் வேதங்களில் கர்மபாகத்தை நன்கு விசாரித்து விளக்கும்படித் தம் சிஷ்யரான ஜைமினியை நியமித்தார் பிரும்ஹ பரமான உபநிஷத் பாகங்கள் மிக முக்கியமான வையானபடியினால் அவைகளைச் செவ்வனவே விசாரித்து விளக்க வேண்டிய மிகப் பெரியதொரு பொறுப்

பைத் தாமே ஸ்ரீ வியாஸர் ஏற்றுக் கொண்டார். இவ்விருவராலும் விசாரித்து விளக்கப்பட்ட கர்ம ப்ரும்ஹ பாகங்கள் கர்ம மீமாம்ஸை ப்ரும்ஹ மீமாம்ஸை எனப்படுவன. ப்ரும்ஹ மீமாம்ஸை ஸ்ரீ சாரீரக மீமாம்ஸை என்று மிகச் சிறப்பாக வழங்கப்படும்.

ஸ்ரீ வியாஸர் இப்பெரும் பணிகளுடன் திருப்தி கொள்ளவில்லை. ஸர்வ வேத வேதாந்தார்த்தங்களையும் உலகில் எல்லோருமே அறிந்து உய்ய வேண்டுமென்று திருவுள்ளம் பற்றி அவ்விதப் பிரபந்தமொன்றை அருளிச் செய்ய முன் வந்தார். ஸ்ரீ வால்மீகி பகவான் ஸ்ரீ ராம விருத்தாந்தத்தைத் தம் யோக மஹிமையினால் உள்ளபடி ஸாக்ஷாத்கரித்து ஸ்ரீ ராமாயணத்தை அருளிச் செய்தது போல் ஸ்ரீ வியாஸரும், "பாரதஸ்யே திஹாஸஸ்ய தர்மேணாந்வீக்ஷ்ய தாம் கதிம் ப்ரவிச்ய யோகம் ஞானேன ஸோ அபச்யத் ஸர்வ மந்ததः" என்பதாக ஸ்ரீ பாரதத்தின் ஆதியில் தெரிவித்துள்ளபடியே தாம் காண வேண்டிய தத்துவங்கள் அனைத்தையும் யோக மஹிமையினால் ஸாக்ஷாத்காரம் செய்து அதன் பயனாக ஸ்ரீ பாரதம் என்னும் இதிஹாஸ ரத்தினத்தை உலகிற்கு உபகரித்தருளினார். ஆனாலும் அவர் உள்ளம் ஏனோ நிம்மதியடையவில்லை. ஏதோ குறை! ஏதோ குறை! அது இன்னது என்று ஸ்ரீ வியாஸருக்குப் பிடிபடவில்லை. அவர் அதே கவலையில் தம் ஆசிரமத்தில் அமர்ந்திருந்த போது ஸ்ரீ நாரதபகவான் அவ்விடம் வந்து சேர்ந்தார். அவரை முறைப்படி உபசரித்து மீண்டும் யோசனையில் ஆழ்ந்து அமர்ந்துவிட்ட ஸ்ரீ வியாஸரை ஸ்ரீ நாரத பகவான் மிகப் பரிவுடன் நோக்கி வேத விபாகம் முதல் ஸ்ரீ மஹா பாரதம் வரையில் அவர் செய்துள்ள மிக உயர்ந்த உலக நன்மைகளை எடுத்துக் காட்டி அப்படி இருந்தும் அவர் ஏதோ குறையுடன் இருப்பானேன்? என்றும் வினவினார். அவ்வளவும் உண்மையாயினும் தனக்கு ஏதோ பெரும் குறை இருப்பது எதனால் என்பதைத் தன்னால் அறிய முடியவில்லை என்றும் எல்லாம் அறிய வல்ல ஸ்ரீ நாரத பகவானே அதை எடுத்து இயம்ப வேண்டுமென்றும் ஸ்ரீவியாஸர் வேண்ட, அதற்கு ஸ்ரீ நாரத பகவான் ஒரு புன்னகையுடன் ஸ்ரீ பாரதத்தில் எவ்வளவுதான் பல தர்மங்களைப் பற்றி ஸ்ரீவியாஸர் உபதேசித்திருந்தாலும் பகவத தர்மம் உபதேசிக்கப்பட வேண்டிய அளவுக்கு உபதேசிக்கப்படவில்லை என்பதே அப்பெரும் குறைக்குக் காரணம் என ஸ்ரீ வியாஸருக்கு உணர்த்தி பகவத் தர்மத்தை உணர்த்துவதற்கு மூல மந்திரங்களான "நமோபகவதே துப்யாம்வாஸுதேவாய தீமஹி ப்ரத்யும்னாயானிருத்தாய நம: ஸங்கர்ஷணாய ச!"

என்று தொடங்கும் ஸ்ரீவாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ன அநிருத்த பகவத் வ்யூஹ ஸ்வரூபங்களையும் அவைகளுக்கும் நமக்கும் உள்ள ஸம்பந்தாநுஸந்தானப்ரகாரத்தையும் ஆராதிக்கும் முறையையும் பல ஸ்வரூபத்தையும் சுருக்கமாக உபதேசித்து இவ்விஷயங்களை விரிவாக எடுத்துக் கூறுமாறு ஸ்ரீவியாஸரை ஸ்ரீ நாரத பகவான் நியமித்தார். அவ்விதமே ஸ்ரீ வியாஸரும் செய்யத் திருவுள்ளம் பற்றி அதற்கு முன் தியான யோகத்தில் ஸ்ரீ வால்மீகி பகவானைப் போலவே அமர்ந்து,

அபச்யத் புருஷம் பூர்வம் மாயாம் ச தது பாச்ரயாம்
யயா ஸம்மோஹிதோ ஜீவ ஆத்மாநம் த்ரிகுணாத்மகம்
பரோபி மனுதே அனர்த்தம் தத்க்ருதம் சாபி பத்யதே
அனர்த்தோ பசமம் ஸாக்ஷாத் பக்தி யோகமதோக்ஷஜே
லோகஸ்யாஜானதோ வித்வாந் சக்ரே ஸாத்வதஸம்ஹிதாம்
ஸஸம்ஹிதாம் பாகவதீம் க்ருத்வா அனுக்ரம்ய சாத்மஜம்
சுகமத்யாபயாமாஸ நிவ்ருத்தி நிரதம் முநி:

முதன்முதலில் எம்பெருமானைப் பார்த்தார். அடுத்து அவன் அதீனத்திலுள்ள ஆச்சரியகரமான பிரகிருதி சக்தியைக் கண்டார். பிரகிருதி சக்தியினால் மயங்கித் தன்னை உடம்பாகவே நினைத்து அவதிப்படும் ஜீவதத்துவத்தையும் கவ

னித்தார். இவ்வனர்த்தம் தீர்ந்து ஜீவன் உய்ய உகந்த வழி பக்தியோகம் ஒன்று தான் என்பதையும் அறிந்தார். இவ் வுண்மைகளை அறியாத இவ்வுலகத் திற்கு இவைகளை உணர்த்த வேண்டி உடன் ஸாத்வத ஸம்ஹிதையைச் செய் தருளினர். இவ்விதம் அவர் பாகவத ஸம் ஹிதையைச் செய்து அதை நன்கு சோதித்துத்தன் புத்திரனும் ப்ரும்ஹ ஞானியுமான ஸ்ரீ சுகருக்குச் சொல்லி வைத்தார்.

ஸாத்வத ஸம்ஹிதை பாகவதம் என்று பர்யாய நாமாக்களினல் பேசப்படுவது ஸ்ரீ பாஞ்சராத்திர சாஸ்திரமாகும். பிரும்ஹ ஸூத்திரம் 2வது அத்தியாயம் 2வது பாதத்தின் முடிவான அதிகரணத் தில் ஸ்ரீ வியாஸர் ஸ்ரீ பாஞ்சராத்திரத் தைப் பற்றி விசாரித்து அதன் பெருமையை விளக்கி இருக்கிருர். அந்த விடத்தில் ஸ்ரீ சங்கர பகவத் பாதர் ஸ்ரீ பாஞ்சராத்திர நிஷ்டர்களைக் குறிப் பிடும்போது, "தத்ர பாகவதா மந்யந்தே" அங்கு பாகவதர்கள் எண்ணுகிருர்கள் என்று 'பாகவத' சப்தத்தால் அவர் களைப் பிரஸித்தமாக அழைப்பதை எல் லோரும் கவனிக்க வேண்டும். பகவான் பாகவதம், பாகவதர்கள் என்ற இவ் வனைத்தும் ஸ்ரீ பாஞ்சராத்திரத்தின் தனிப் பதங்கள்.

பகவான் என்ருல் ஹேயகுணங்கள் ஏதுமில்லாமல் ஞானம் சக்தி, பலம், ஐச் வரியம் வீர்யம் தேஜஸ் என்னும் அரும் பெறும் குணங்களுக்கு உறைவிடமான வஸ்து என்று பொருள். இதை,

"ஜ்ஞான சக்தி பலைச்வர்யவீர்ய
தேஜோஸ்யசேஷத
பகவத் சப்தவாச்யாநி விஞ
ஹேயைர் குணுதிபி:"

என்னும் ஸ்ரீ பராசர ப்ரும்ஹர்ஷியின் வாக்யத்தில் காணலாம். பரப்ரும்ஹம் சேதனுசேதன உலகமனைத்துக்கும் இணையற்ற நிமித்தோபாதான காரண மாயிருப்பது இக்குணங்களின் தன்மை யினுலேதான். இவைகளில் எந்த ஒரு குணம் குறைந்தாலும் பிரும்ஹம் ஜகத் காரணமாக ஆகமாட்டாது. எக்குணமு மில்லாத பிரும்ஹம் ஒன்றுதான் பர மார்த்தம்; உலகமனைத்தும் பிரமையின் தோற்றம் என்று பேசும் மதம் எங்ஙனம் ஸ்ரீபாகவதத்தில் இடம் பெறும் என்பதை ஒவ்வொருவரும் யோசித்துப் பார்க்க வேண்டும்.

ஷாட்குண்ய பரிபூரணன எம்பெரு மான் ஒருவனே ஸ்ரீ பாகவதத்தின் ஒவ் வொரு எழுத்திலும் பளிச்சிடுகிருன்.

"ஷாட்குண்யம் தத் பரம்
ப்ரம்ஹ ஸர்வகாரண காரணம்"

என்று ஸ்ரீ பாஞ்சராத்திரம் முழங்கு கிறது. அப்படிப்பட்ட எம்பெருமான் பாகவதம் எங்கும் மின்னுவதினு லேயே அதற்கு ஸ்ரீ பாகவதம் என்னும் தனிச்சிறப்புப் பெயர் கொடுக்கப்பட்டது.

வேதங்களை உபதேசித்த எம்பெரு மானைத் தவிர வேறு எந்த தேவர்களா லும் நரர்களாலும் எவராலும் வேதார்த் தங்களை உள்ளபடி அறியமுடியாத கார ணத்தினுல் அவ்வெம்பெருமானே ஸ்ரீ பாஞ்சராத்திரத்தை வேதங்களின் விளக்கமாக உலகின்பாலுள்ள அபார கருணையினுல் அருளிச் செய்தானுகும். அப்படிப்பட்ட ஸ்ரீ ஸாத்வத சாஸ்திரத் தின் பெருமையை விளக்கவே ஸ்ரீ வியா ஸர் ஸ்ரீ பகவானை மையமாக வைத்து, ஸ்ரீ மஹாபாரதத்தை அனுக்ரஹித்தார். ஆயினும் கர்ம பாகங்களால் விரிந்து கிடக்கும் வேதங்களில் இங்குமங்கும் உபநிஷதங்கள் காணக் கிடைப்பது போல் வேதார்த்தமாகப் பல கர்மங்களை விவரிக்கும் ஸ்ரீ பாரதத்தில் பகவன் மஹிமையும் பகவச் சாஸ்திரமும் ஸாரத்திலும் பரம ஸாரமாக இங்குமங் கும் விளக்கப் பெற்றன. அவைகளில் முக்கியமாகச் சாந்தி பர்வத்தில் மோக்ஷ தர்மத்தின் முடிவு பாகமாகப் பல அத் யாயங்களால் பூரித்துப் பூரித்து ஸ்ரீ வியாஸர் ஸ்ரீ பாஞ்சராத்திரத்தின் பெருமையை உணர்த்தி இருக்கிருர். ஒரு லக்ஷம் ச்லோகங்களாலான மஹா பாரதத்தில் நாராயணீயம் என்னும் பகவச் சாஸ்திரமானது அறிவு என்னும் மத்தைக் கொண்டு ஞானக் கடலைக் கடைந்தெடுத்த அமுதமாகும் என்பதை எவரும் கவனிக்கத் தவறக்கூடாது.

"இதம் சஸஹஸ்ராத்தி பாரதாக்யான
விஸ்தராத்
ஆமத்ய மிதி மந்தேன ஞானேதி
மநுத்தமம்......ஸமுத்ருதம்"

வேதம் முழுவதும் உபநிஷதமாக அமையாததுபோல் மஹாபாரதம் முழுவதும் ஸ்ரீபாஞ்சராத்திரமாகவும் பகவன் மஹிமை ஒன்றே பளிச்சென எவ்விடத்தும் தெரிவதாகவும் அமையாததுந்தான் ஸ்ரீ வியாஸரை வாட்டி எடுத்த பெரும் குறை. அதை ஸ்ரீ நாரத பகவான் எடுத்துக்காட்டி, ஸ்ரீபாஞ்சராத்திர சாஸ்திரமாகவே ஒரு புராண ரத்தினத்தை அருளிச் செய்ய நியமித்ததினாலேயே ஸாத்வத சாஸ்திரமாகிய ஸ்ரீ பாகவதம் ஸ்ரீ வியாஸரிடமிருந்து அவதரித்தது. ஸ்ரீ வால்மீகி பகவானுக்கு ஸ்ரீ பாஞ்சராத்திரத்தை ஸ்ரீ ராமாயணம் என்னும் மறையாக ஸ்ரீ நாரத பகவான் உபதேசித்தருளினார். அதே ஸ்ரீ நாரத பகவானே ஸ்ரீ வியாஸ பகவானுக்கு ஒளிவு மறைவு ஒன்றுமில்லாமல் ஸ்ரீ பாஞ்சராத்திரத்தை அதன் ஒப்பற்ற நாமதேயமான ஸ்ரீ பாகவதம் என்பதினாலே உபதேசித்தருளினார். எம்பெருமானின் அனுக்ரஹத்தினால் ஸப்தருஷிகள் பிருஹஸ்பதி அஹிர்புத்னிய பகவான் மற்றும் பல முனிவர்கள் ஸ்ரீ பாஞ்சராத்திர பிரவர்த்தகர்கள் ஆனாலும் ஸ்ரீ நாரத பகவானே இச்சாஸ்திரத்தின் முக்கிய உபதேஷ்டாவாவர். அதனாலேயே இச்சாஸ்திரத்தை நாரத பாஞ்சராத்திரமென்பர். இதை ஸ்ரீ பாகவதத்தின் ஆரம்பத்தில் சுருக்கமாக அவதாரங்களை வருணித்து வரும்போது,

"த்ருதீயம் ருஷிஸர்கம் வை தேவர்-
ஷித்வ முபேத்ய ஸ:
தந்த்ரம் ஸாத்வதமாசஷ்ட
நைஷ்கர்ம்யம் கர்மணாம் யத:

பகவான் மூன்றாவதாக தேவர்ஷியான நாரத உருவத்தைப் பெற்று ஸாத்வத சாஸ்திரத்தை உபதேசித்தருளினான்" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்ரீபாஞ்சராத்திரத்தின் ஸம்பிரதாயம் விரிந்து கிடந்தாலும் முக்கியமாக இரண்டாகக் கிளம்பி மறுபடியும் ஒன்று சேர்ந்துவிட்ட அழகையும் ஸ்ரீபாகவதம் விளக்குகிறது. எப்படி என்றால்-முதல் ஸ்கந்தத்தின் ஆரம்பத்தில் ஸ்ரீநாரத பகவான் ஸ்ரீவியாஸ பகவானுக்கு உபதேசித்தருளின ஸ்ரீநாரத பகவானின் ஸம்பிரதாயமும் மூன்றாம் ஸ்கந்தத்தில் ஸ்ரீஸங்கர்ஷணரிடமிருந்து ஸனத்குமாரரும் ஸனத்குமாரரிடமிருந்து ஸாங்கியாயனரும் ஸாங்கியாயனரிடமிருந்து ஸ்ரீபராசரரும் பிருஹஸ்பதியும் ஸ்ரீபராசரரிடமிருந்து மைத்ரேயரும் மைத்ரேயரிடமிருந்து விதுரரும் ஆக ஸ்ரீஸனத்குமார ஸம்பிரதாயமும் ஸ்ரீபாகவதத்தில் ஒன்றுபட்டு விளங்குவதாம். இதனால் ஸ்ரீபராசரர் மைத்திரேயருக்கு உபதேசித்த ஸ்ரீவிஷ்ணு புராணமும் ஸ்ரீபாஞ்சராத்திரமாகவே ஆகிறது. இச்சாஸ்திரம் ஸ்ரீநாரத பகவானுக்கு முக்கியமாக ஸாக்ஷாத் நாராயணனிடமிருந்து உபதேசிக்கப் பெற்றதாகும் — இதை—

நாரதேநது ஸம்ப்ராப்த: ஸரஹஸ்ய:
ஸ ஸங்க்ரஹ: |
ஏஷ தர்மோ ஜகந்நாதாத்
ஸாக்ஷாந் நாராயணாந் ந்ருப |
ஏவமேஷ மஹாந் தர்ம ஆத்யோராஜந்
ஸநாதந: |
துர்விஜ்ஞேயோ துஷ்கரச்ச ஸாத்வதைர்
தார்யதே ஸதா |

என்றும், ஸ்ரீநாரத பகவானிடமிருந்து இச்சாஸ்திரத்தை ஸ்ரீவியாஸ பகவான் பெற்றான் என்பதை,

ஏவம் ஸ பகவாந் வ்யாஸோ குருர்மம
விசாம்பதே |
கதயாமாஸ தர்மஜ்ஞோ தர்மராஜே
த்விஜோத்தம: |
ருஷீணாம் ஸந்நிதௌ ராஜந் சருண்வதோ:
க்ருஷ்ண பீஷ்மயோ: |
தஸ்யாப்யகதயத் பூர்வம் நாரத:
ஸுமஹாதபா: |

என்றும் மஹாபாரதத்தில் சாந்தி பர்வத்தில் மோக்ஷ தர்மத்தில் பகவச் சாஸ்திரமாக ஒளிவிடும் நாராயணீயத்தில் காணலாம்.

ஆக ஸ்ரீபாகவதம் என்னும் புராண ரத்தினம் எழுத்து எழுத்தாகப் பதம் பதமாக ச்லோகம் ச்லோகமாக ஸ்ரீபாஞ்சராத்திர சாஸ்திரமாகக் கிடைத்த ஒரு அரும்பெறும் பொக்கிஷம். இதில் நோக்குமிடமெல்லாம் வாஸுதேவ ஸங்கர்ஷணபிரத்யும்னஅனிருத்த தத்துவங்களையும் கர்மாக்கள் அனைத்தும் பகவதாராதனம் என்பதையும் பகவத்

பக்தியோகமும் பகவச்சரணாரவிந்த சர ணாகதியும் இணையற்ற உபாயங்கள் என் பதையும் இவைகளின் மூலம் பகவன் முகோல்லாஸமடியாக எம்பெருமானின் இணையடிகளில் நாம் பெறும் தாஸ்யமே பரம புருஷார்த்தம் என்பதையும் தெள்ளத் தெளிய உபபாதித்திருப்பதை மனமுள்ள எவரும் காணலாம்.

நிர்குணம் முதலிய சில பதங்கள் ஸ்ரீபாகவதத்தில் காணப் படுவதால் ஸ்ரீபாகவத ரஸாநுபவத்தை விடமுடி யாத சில நிர்குண ப்ரும்ஹவாதிகள் ஸ்ரீபாகவதத்தை நிர்குண ப்ரும்ஹ பர மான சாஸ்திரம் என்று நினைக்கிறார்கள். ஸ்ரீபாகவதம் என்னும் பெயர் ஒன்றே அதற்கு பாதகம் என்பதை ஏனோ அவர்கள் கவனிக்க மறந்துவிட்டார்கள். தவிர நிர்குணம் என்னும் பதம் போன் றவைகள் ஸ்ரீபாகவதத்தை நிர்குண பிரும்ஹ பரமானது என்று காட்டப் போதுமானது என்பது, உபநிஷத்துக் களில் ஸாங்கியர்கள் 'அவ்யக்தம்', 'புருஷன்' முதலான சில பதங்களையும் மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது ஸாங்கிய மதத்திற்கு அனுகூலம் போல் காணப்படும் சில உபதேசங்களையும் வைத்துக் கொண்டு உபநிஷத்துக்கள் ஸாங்கிய மதத்தைத்தான் பேசுகின்றன என்று வாதிப்பதற்கு ஒப்பாகும். அந்த வாதங்கள் எல்லாவற்றையும் ப்ரும்ஹ ஸூத்திரத்தில் விஸ்தாரமாகஸ்ரீவியாஸ பகவான் தவிடு பொடியாக்கிவிட்டதை அத்வைதிகள் விசிஷ்டாத்வைதிகள் முதல் எல்லோருமே விளக்கி இருக் கின்றனர்.

மேலும். ஸ்ரீபாஞ்சராத்திரத்தில் 'நிர் குணம்' என்னும் சொல்லுக்குப் பிர கிருதி குண ஸ்பர்சமற்றது—''அப்ரா க்ருத குணஸ்பர்சம் நிர்குணம் பரிகீயதே' என்று விளக்கம் கொடுக்கப்பட்டிருக் கிறது. இவ்வர்த்தம்தான் பகவான் நிர்குணன் என்னும் இடங்களிலெல் லாம் பொருந்தி நிற்பதை உண்மை உள்ளம் படைத்தவர்கள் அறிவார்கள்.

ஸ்ரீபாகவதத்தின் பெருமையில் அஸூயையுள்ள சிலர் ஸ்ரீபாகவதம் ஸ்ரீவியாஸ பகவானால் அனுக்ரஹிக்கப் பட்டதன்று என்று துணிந்து பேசுகிறார் கள். ஸ்ரீபாகவதம் ஒன்றுதான் ஸ்ரீவியாஸ பகவான் அருளிய புராண ரத்தினம் என்பதற்கு பல புராணங்கள் சான்று கூறுகின்றன. ஸ்ரீபாஞ்சராத்திர சாஸ்திரத்துக்குமேல் ஒரு சாஸ்திரமு மில்லை ஸ்ரீபகவானுக்கு மேல் ஒரு தத்து வமுமில்லை என்று ஸ்ரீமஹாபாரதத்தில் சாந்திபர்வம் மோக்ஷ தர்மத்தில் ஸ்ரீநாராயணீயம் என்னும் ஸாத்வத சாஸ்திர மஹிமானுவர்ணன பிரபந் தத்தில் வியாஸ பகவான் விளக்கி இருப்பதும் ஸ்ரீநாரத பகவானிடமிருந்து வியாஸ பகவான் ஸ்ரீபகவச் சாஸ் திரத்தை உபதேசிக்கப் பெற்றிருப்பதும் ஒவ்வொருவர் உள்ளத்தையும் தொட வேண்டும். ஸ்ரீநாரத பகவானுடைய நியமனத்தினால் ஸ்ரீஸாத்வதத்திற்கே ஒரு புராணமாக பாகவதத்தை வியாஸ பகவான் அருளிச் செய் திருக்கும் விஷயம் பாகவதத்தில் வெட்ட வெளிச்சமாகும்.

'ஜன்மாத்யஸ்ய யத:' என்று தொடங்கும் ஸ்ரீபாதராயண ஸூத்திர மும் 'ஜன்மாத்யஸ்ய யத:' என்று தொடங்கும் ஸ்ரீபாதராயணரின் பாக வதமும் வியாஸ பகவான் ஒருவரின் அருளிச் செயல்களே என்று பறை சாற்றுகின்றன. பிரும்ஹ ஸூத்திரம் முழுவதும் உபநிஷத் வாக்கிய விசாரம்; பாகவதம் முழுவதும் உபநிஷத் வாக்கிய விளக்கம், இப்படி எப்படிப் பார்த்தாலும் இவ்விரண்டும் வியாஸ பகவான் அருளிச் செய்தவை என்றே காணும்.

மாடரர் முதலான ஸாங்கிய காரிகா விருத்திகாரர்கள் ஸ்ரீபாகவதத்தி லிருந்து மிக ஆர்வத்துடன் மேற்கோள் எடுத்திருப்பதும் பாகவதத்தின் பிரா சீனதைக்கு ஒரு பெரும் சான்றாகும். மாடரர் விருத்தி ஸாங்கிய காரிகையின் கௌடபாத பாஷ்யத்திற்கும் முந்தியது எனத் தெரிகிறது.

தவிர,

வேதத்தை அப்படியே தமிழ் செய்த மயர்வற மதிநலம் பெற்ற ஆழ்வார் களும் ஸ்ரீபாகவத ச்லோகங்களையும் அப்படியே தமிழ் செய்திருப்பதை அங் கங்கே கவனிக்கும்போது ஸ்ரீபாகவதத் தின் பெருமை எவரையும் பரவசப்படுத் தும் என்பதில் ஐயம் ஏது?

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# எம்பெருமானர் தர்சனம்

ந்யாய வேதாந்த வித்வான் வேளுக்குடி வரதாசார்யர் ஸ்வாமி

ச்ரிய: பதியான ஸர்வேச்வரன் முதலாக ஸ்வாமி மணவாள மாமுனிகள் ஈருகவுள்ள பூர்வாசார்ய பரம்பரையில் ஸ்வாமி எம்பெருமானர் நடுவாக எழுந்தருளியிருக்கிரூர் என்பது ஸ்ரீவைஷ்ணவர்கள் அறிந்த விஷயம். பூர்வாசார்ய பரம்பரையாகிற ரத்ன ஹாரத்திற்கு நடு நாயக ரத்னம் ஸ்ரீராமானுசன் என்பதை தேசிகன் யதிராஜ ஸப்ததியில் "அமுனதபனுதிசாயிபூம்நாயதிராஜேன நீபத்த நாயகஸ்ரீ:" என்று அருளிச் செய்கிரூர்.

### எம்பெருமானர்

இராமானுசர்க்கு, "எம்பெருமானர்" என்ற திருநாமம் திருக்கோட்டியூர் நம்பிகளாலே சாத்தப்பட்டது என்பர் பெரியோர்.

லோகதேசிகன் அருளிச் செய்த முமுக்ஷுப்படி சரமச்லோக ப்ரகரணத்தின் வ்யாக்யான வதாரிகையில் மணவாள மாமுனிகள், "ஸம்ஸாரிகள் துர்கதி கண்டு பொறுக்க மாட்டாதபடி கிருபை கரை புரண்டிருக்கையாலே அர்த்தத்தின் சீர்மை பாராதே அனர்த்தத்தையே பார்த்து வெளியிட்டருளினர் எம்பெருமானர்" என்று அருளிச் செய்கிரூர். அவ்விடத்து அரும் பதவுரையில், "எம்பெருமானர் வெளியிட்டருளினர்" என்றருளிச் செய்யாமல், "வெளியிட்டருளினர் எம்பெருமானர்" என்றருளிச் செய்தது ச்லோகார்த்தத்தை வெளியிட்டருளின வனந்தரம் திருக்கோட்டியூர் நம்பி இவருடைய பரஸம்ருத்திக்கு உகந்து, "எம்பெருமானர்" என்று திருநாமம் சாத்துகையாலே' என்று சுத்த ஸத்வம் தொட்டாசார்ய ஸ்வாமி யருளிச் செய்கிரூர். "எம்பெருமானர் தரிசனம்" என்ற உபதேச ரத்தினமாலைப் பாசுர வ்யாக்யானத்தில் பிள்ளைலோகம் ஜீயரும்"...... இவர் ஆக்ஞாதி லங்கனம் பண்ணி அமர்யாதமாக ப்ரபத்தி ப்ரதானம் பண்ணின ப்ரபாவத்தைக் கண்டு, திருக்கோட்டியூர் நம்பியும் அப்படியே "எம்பெருமானர்" என்று திருநாமம் சாத்தி. . . . ." என்று அருளிச் செய்கிரூர்.

ஆக ஸ்வாமிக்கு "எம்பெருமானர்" என்ற திருநாமம் அவருடைய கரை புரண்ட கருணை மிகுதி பற்றி அவர் தன் ஞசார்யனலேயே சாத்தப்பட்டது என்று அறிந்தோம். "காரேய் கருணை யிராமானுச இக்கடலிடத்தில் ஆரேயறிபவர் நின்னருளின் தன்மை" என்று இவர் தன் பெருங் கருணை தன்னை அமுதனரும் வியந்து அனுபவிக்கிரூர். இப்படிப் பட்ட பரம காருணிகரான ராமானுசருடைய தர்சனம் எம்பெருமானர் தரிசனம் எனப்படுகிறது.

### தர்சனம்

"தர்சனம்" என்ற பதம் "மதம்" "பார்வை" "கண்" என்னும் பல பொருள்களைக் குறிக்கும் நாநார்த்தக பதம்.

### மதம்

"தர்சனம்" என்னும் இப்பதம் "மதம்" என்ற பொருளைக் குறிக்கும். "நம் தர்சனத்துக்கு தத்வங்கள் மூன்று" என்று ஈடு மஹாப்ரவேசத்தில் நம்பிள்ளையும் "இதம் அகிலதம: கர்சநம் தர்சநம் ந:" என்று தேசிகனும், "எம்பெருமானர் தரிசனம்" என்று நம்பெருமாள் திருவாக்காக மணவாள மாமுனிகளும் ப்ரயோகித்திருப்பதைக் காணலாம். "ஸாங்க்ய தர்சனம், பாதஞ்ஜல தர்சனம், வைசேஷிக தர்சனம், ஷட் தர்சனம்" என்ற பதங்களில் உள்ள தர்சன சப்தம் இவ் வர்த்தத்தையே குறிக்கும். அவ்வோ

பாதி "இராமானுஜர் மதம் எம்பெருமானார் தர்சனம்" என்று குறிக்கப்படுகிறது.

இவ்விடம் ஓர் ஸந்தேஹம் எழக்கூடும், "இந்த மதம் எம்பெருமானாலே உண்டாக்கப்பட்ட மதம் எனத் தோன்றுகிறதே. இது புராணம் அல்லவா" என்று. இதனைப் பரிஹரிக்கிறார்கள் நம் பூர்வர்கள். பரிஹார க்ரமத்தை வேதாந்த தேசிகன் யதிராஜஸப்ததியில் "யதி க்ஷமாப்ருத் த்ருஷ்டம் மத மிஹ நவீனம்" (57) என்ற ச்லோகத்தில் விசதமாக வருளிச் செய்தார். ஓர் மதத்தை உத்தேச்யமாகக் கைக்கொள்ளும் போது, "அது நவீனமா, புராதனமா" என வைதிகன் ஆராய வேண்டா. "மூல ப்ரமாணமாய் நித்ய நிர்துஷ்ட ப்ரமாண வேதாந்தங்களுக்கு அநுகுணமான மதம் உபாதேயம்—மற்றையது த்யாஜ்யம்" என்றே நிர்ணயிக்க வேண்டும். ஆகையால் எம்பெருமானார் மதம் நவீனம் எனக் கொண்டாலும் வேதாந்தானுஸாரியாகையால் உத்தேச்யம் எனக் கொள்ளத் தட்டில்லை என்று முந்துற அப்யுபகம்ய வாத ப்ரக்ரியையிலே ஸமாதானம் அருளிச் செய்து பிறகு "யத்வா நிராதம்கா: டங்கத்ரமிட குஹதேவப்ரப்ருதய" என்று வஸ்து கத்யா ஸமாதானமும் அனுக்ரஹித்தார் இதிறே மேற்கூறிய யதிராஜ ஸப்ததி ச்லோகத்தின் பொருள்.

ஸம்ப்ரதாய பரிசுத்தி ஆரம்பத்தில் தேசிகன், "ஸர்வலோக ஹிதமான அத்யாத்ம சாஸ்த்ரத்திற்கு ப்ரதம ப்ரவர்த்தகன் ஸர்வேச்வரன். . . . . இந்த யுகாரம்பத்திலே ப்ரஹ்ம நந்த்யாதிகளுக்குப் பின்பு நம்மாழ்வார் ப்ரவர்த்தகரானார்" என்றருளிச் செய்துள்ளார். ஸ்வாமி எம்பெருமானார் தாமே "பகவத் போதாயன க்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்ம ஸூத்ர வ்ருத்திம் பூர்வாசார்யா: ஸஞ்சிக்ஷிபு:, தந் மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்யாஸ்யந்தே" (ஸ்ரீ பாஷ்யம்) என்றும், "பகவத் போதாயன டங்க த்ரமிட குஹதேவம்பர்தி பாருசி ப்ரப்ருதி அவிகீத சிஷ்ட பரிக்ருஹீத புராதன வேத வேதாந்த வ்யாக்யா ஸுவ்யக்தார்த்த ச்ருதி நிகர நிதர்சிதோயம் பந்தா:" (வேதார்த்தஸங்க்ரஹம்) என்றும் ஸுவிசதமாகவருளிச் செய்துள்ளார். ஆக வேத வேத்ய வைதிகர்களாலே ப்ரவர்த்தனம் செய்யப்பட்ட அனாதி மதத்தையே எம்பெருமானார் மிகவும் நன்றாக வளர்த்துள்ளார் என்று தேறுகிறது. "இம்மதம் அனாதி. இதற்கு எம்பெருமானார் பரம ரக்ஷகர்-ஸ்ரஷ்டாவல்லர்" என்னும் இவ்வர்த்தத்தை "நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் பஹுபிருபசிதம் யாமுநேய ப்ரபந்தை:, த்ராதம் ஸம்யக் யதிந்த்ரை:" என்று தேசிகனும் "எம்பெருமானார் தரிசனம் என்றே இதற்கு நம் பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார்—அம்புவியோர், இந்தத் தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்த அந்தச் செயல் அறிகைக்கா" என்று மணவாள மாமுனிகளும் அருளிச் செய்துள்ளார்கள். "நாட்டி வைத்தார்"என்று பாடமானால், நம் பெருமாளே இத்திருநாமத்தையிட்டார் என்று தேறும். "நாட்டுவித்தார்" என்று பாடமானால் திருக்கோட்டியூர் நம்பிகள் இத்திருநாமம் இட்டார் எனத் தேறும். ஆக பரமகாருணிகரான இராமானுசன் ஸ்ரீ விசிஷ்டாத்வைத மதத்தைத் தன் உபதேசத்தாலும் அனுட்டானத்தாலும் க்ரந்த நிர்மாணத்தாலும் மிகவும் வளர்த்துள்ளார் என்பது பற்றித் திருவரங்கன் இந்தத் தரிசனத்தை "எம்பெருமானார் தரிசனம்" என்று அபிமானித்தான் எனத் தேறியது—

இனி இந்தத் தரிசன ப்ரமேயங்களைச் சற்று விவரிக்கிறேன்:-

### இராமானுச மதம்

வேதம் முதலான சாஸ்த்ரங்களைப் பிரபல ப்ரமாணங்களாகக் கொண்டு அதன்படியநுட்டிக்குமவர்கள் வைதிகர்கள். இவர்கள் மதம் வைதிக மதம் எனப்படும். வைதிக மதங்கள் பல. அவற்றுள் த்வைதம் அத்வைதம் விசிஷ்டாத்வைதம் என மூன்று மதங்கள் உலகத்தில் ப்ரஸித்தங்களாகவும் ப்ரசுரங்களாயும் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்று இராமனுசர் வளர்த்த விசிஷ்டாத்வைதம். சித்தாந்தங்கள் பல. ஸர்வ

தந்த்ர ஸித்தாந்தம் அப சித்தாந்தம் ப்ரதி தந்த்ர சித்தாந்தம் அப்புபகம சித்தாந்தம் என்பன போல்வன அவை. அவற்றுள் ப்ரதிதந்த்ர சித்தாந்தமாவது "மற்றுள்ள சித்தாந்திகள் ஒருவரும் இசையாதே தன்னுடைய சித்தாந்தத்திற்கே அஸாதாரணமான வர்த்தம்" என்பர் பெரியோர். நம்முடைய தர்சனத்திற்கு அஸாதாரணமான வர்த்தம் சேதன சேதனங்களுக்கும் ஈசுவரனுக்கும் உண்டான சரீராத்மபாவம். ஆகையாலேயிறே ப்ரஹ்மவிசார ரூபமான சாஸ்த்ரம் சாரீரகமீமாம்ஸை எனப்படுகிறது. சாரீரனைப் பற்றியது சாரீரகம். ஜகச்சரீரன் சாரீரன் என்றிறே சாரீர சப்தவ்யுத்பத்தி. "சாரீர ஆத்மா" என்ற உபநிஷத்வாக்யமும் காணத்தக்கது. இந்தத் தரிசனத்தில் இவ்வர்த்தம் ப்ரதான ப்ரதிதந்த்ரம். இவ்வர்த்தத்தை "யஸ்யாத்மா சரீரம் யஸ்ய ப்ருதிவீ சரீரம் ஏஷஸர்வ பூதாந்தராத்மா. ...நாராயண:" என்று வேதபுருஷனும், 'ஜகத்ஸர்வம் சரீரம்தே' என்று ஸ்ரீவால்மீகி பகவானும், "ஸஈச்வர; வ்யஷ்டி ஸமஷ்டிருப:" என்று ஸ்ரீ பராசர பகவானும், "அவஸ்திதேரிதி காசக்ருத்ஸ்ன; "என்று ஸ்ரீவேதவியாஸரும், "உடன் மிசையுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்" என்று நம்மாழ்வாரும், 'யதண்டம் பராத்பரம்ப்ரஹ்மதேவிபூதய:"என்று ஆளவந்தாரும் அருளிச்செய்தார்கள். இவர்கள் வழித் தோன்றலான ஸ்வாமி எம்பெருமானாரும் இந்த சரீராத்மபாவத்தையே திறவு கோலாகக் கொண்டு ஸித்தாந்த ரக்ஷணம் செய்தார் என்பது வ்யக்தம்.

விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தில் "ஸ்ரீமந்நாராயணனே பரதத்வம்' என்றும், "க்ருபாவிசிஷ்டனனவனே பரமோபாயம்" என்றும், "அவன் திருவுள்ளத்தில் உகப்பே பரம புருஷார்த்தம்" என்றும் தத்வஹிதபுருஷார்த்தங்கள் அங்கீகரிக்கப்பட்டுள்ளன. இவ்வர்த்தங்களையே எம்பெருமானார் தம்முடைய வுபதேசத்தாலும் அநுட்டானத்தாலும் கிரந்தங்களாலும் நிர்ணயித்துள்ளார்.

இதனை சற்று விவரிக்கிறேன்.

### பரதத்வம்

ஒன்றைப் பரதத்வம் என அறுதியிடும் போது, அதற்கு ஜகத்காரணத்வம் உளதா என்று வைதிகர் விசாரிப்பார்கள். பரத்வ ஸ்தாபகம் காரணத்வம் என்பர் ஆசார்யஹ்ருதயத்தில் அழகிய மணவாளப் பெருமாள் நாயனர். நம்மாழ்வார் திருவாய்மொழி முதற்பத்தில் பகவானுடைய பரத்வத்தை யருளிச்செய்து பின்பிறே தத்ஸ்தாபகமான காரணத்தை இரண்டாம்பத்தில் அருளிச்செய்தது. இந்த பரத்வ ஸ்தாபகமான காரணத்வத்தையும் ததநு குணங்களான வ்யாபகத்வாதிகளையும் அடைவே விவரிக்கிறேன்.

### நாராயணனே ஜகத்காரணம்

வேதாந்தங்கள் காரண வஸ்துவை "ஸத்" "ப்ரஹ்ம" "ஆத்மா" "ஹிரண்யகர்ப:" "சிவ:" "இந்த்ர:" "நாராயண:" என்ற சப்தங்களாலே நிர்தேசித்துள்ளன. முதற்கூறிய ஆறுசப்தங்களும் ஸாமான்ய சப்தங்கள் என்றும் ஏழாவது சொல்லப்பட்ட நாராயண சப்தமே விசேஷ சப்தம்என்றும்"பூர்வபதாத் ஸம்க்ஞாயாம்" என்கிற பாணினி ஸூத்ரத்தின்படி தேறுகிறபடியால், ஸமான்ய விசேஷ ந்யாயத்தைக் கொண்டு ஸத் ப்ரஹ்மாத்மாதி சப்தங்களால் நாராயணனே நிர்தேசிக்கப்படுகிறுன் என்று எம்பெருமானுர் அறுதியிடுகிருர். ம்ருக சப்தம் (பொதுச் சொல்) எல்லா மிருகங்களையும் குறிக்கும், சிங்கத்தையும் குறிக்கும். ஆனல் ஸிம்ஹ சப்தம் (விசேஷ சப்தம்)சிங்கத்தையே குறிக்கும் அல்லது மற்ற மிருகங்களைக் குறிக்காது என்பது வ்யக்தம். அவ்வோபாதி காரணவஸ்துவைக்குறிக்கும் சப்தங்களுள் நாராயண சப்தம்விசேஷ சப்தம்என்பது தேற்றம். ஹிரண்யகர்ப சப்த கடித வாக்யத்திலே ப்ரளயகாலத்தில் ஹிரண்யகர்பன் இருந்தான் என்று ஓதப்பட்டுள்ளதே யொழிய நாராயணன் அப்பொழுது இலன் என்று கூறப்படவில்லை. சிவ சப்த கடித வாக்யத்திலே ப்ரளயகாலத்தில் சிவன் ஒருவனே இருந்தான். ஸத்து அஸத்து இரண்டும் இல என்று ஓதப்பட்டுள்ளதேயன்றி அப்பொழுது நாராயணன் இலன்

என்று கூறப்படவில்லை ஆனால் நாராயண சப்த கடிதவாக்யத்திலே. ப்ரளய காலத்திலே நாராயணன் ஒருவனே இருந்தான் ப்ரஹ்மாவும் இலன் சிவனும் இலன் என்று ஸுஸ்பஷ்டமாக ஓதப்பட்டிருப்பதை நன்கு நோக்கவேண்டும். "ஏகோஹவை நாராயண ஆஸீத், நப்ரஹ்மாநேசாந:" என்றன்றோ உபநிஷத் வாக்யம் "ஸத்ப்ரம்ஹாத்மாதிபரமகாரண வாசிபி: சப்தை: நாராயணஏவாபிதீயதே இதி நிச்சீயதே' என்று வேதார்த்த ஸங்க்ரஹத்தில் எம்பெருமானார் அருளிச் செய்கிறார். ஸத்ப்ரஹ்மாத்மபதை: த்ரயீசிரஸியோ நாராயணோக்த்யா ததா வ்யாக்யாதோ கதிஸாம்ய லப்த விஷயானன்யத்வபோதோஜ்வலை: என்று சுந்தரபாஹுஸ்தவத்தில் கூரத்தாழ்வானும் அருளிச் செய்கிறார். வாரணம் (ஸ்ரீகஜேந்த்ராழ்வான்)காரணமே என்றழைக்க ஓடிவந்து அருள்புரிந்தான் நாரணனே என்பர் பெரியோர். ஆக நாராயணனே அகில ஜகத் காரணம் எனவறிந்தோம்.

### நாராயணனே ஸர்வ வ்யாபகன்

கீழே கூறப்பட்ட காரணத்வம் மூன்று விதம். உபாதானத்வம் நிமித்தத்வம் ஸஹகாரித்வம் என்று. குடத்தைக் குறித்து மண் உபாதானகாரணம். குயவன் நிமித்த காரணம், தண்டசக்ராதி ஸஹகாரி காரணம் என்பதைக் காண்கிறோம். அதுபோல ஜகத்தைக் குறித்த இம்மூன்று காரணங்கள் எவையென்றால் இவ்விடத்தில் இம்மூன்று காரணமும் ஒன்றே. பரப்ரஹ்மம் ஜகத்துக்கு த்ரிவிதகாரணமாயும் உள்ளது அற்புதசக்தியாலே என்பதை "அத்ரோச்யதே ஸகலேதரவிலக்ஷணஸ்ய பரஸ்ய ப்ரஹ்மண: ஸர்வசக்தே; ஸர்வஜ்ஞஸ்ய ஏகஸ்யைவ ஸர்வம் உபபத்யதே" (ஸ்ரீபாஷ்யம்) என்று எம்பெருமானார் வெளியிட்டருளுகிறார். "ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வே நிமித்தோபாதனதோபயோகிநீ" என்று ச்ருதப்ரகாசிகா வாக்யம். "ப்ரஹ்மவனம் ப்ரஹ்மஸ வ்ருக்ஷ" என்ற ச்ருதியும், "ப்ரகிருதிச்ச' 'ஸாக்ஷாச்ச உபயாம்னாத்" என்ற வ்யாஸ ஸூத்ரங்களும் "வேர் முதலாய் வித்தாய்" என்ற த்ரமிடோபநிஷத்தும் இதனை வலியுறுத்தும்.

இவ்விடம், ஓர் சங்கை எழக்கூடும் "குடத்துக்கு உபாதான காரணமான மண், குடமாகப் பரிணமிக்கிறது ஸவிகார தத்வம் ஆகையால். ப்ரஹ்மம் நிர்விகாரம் என வேதாந்த ப்ரஸித்தம். நிர்விகாரப் ப்ரஹ்மம் எங்ஙனே உபாதானமாகும்" என்று பரப்ரஹ்மத்தினுடைய ஸர்வாத்ம பாவத்தைத் காட்டி இதனை எம்பெருமானார் பரிஹரிக்கிறார். "நிர்விகாரத்வம் ஸ்வரூபநிஷ்டம் என்றும் விகாரம் சரீரபூதசேதனசேதன கதம்" என்றிறே நிஷ்கர்ஷம். "அசேஷ ஹேயப்ரத்யநீக கல்யாணைகதானம் ஸமஸ்த சிதசித்வஸ்து சரீரதயா ததாத்மபூதம் பரம் ப்ரஹ்ம ஸ்வ சரீரபூதே ப்ரபஞ்சே . . . ஸ்வஸ்மின் ஏகதாம் ஆபன்னே ஸதி. . . . . ஜகச்சரீரதயா ஆத்மானம் பரிணமயதீதி ஸர்வேஷு வேதாந்தேஷு பரிணாமோபதேச:" (ஸ்ரீபாஷ்யம்) என்றும், "பரமாத்ம சிதசித் ஸங்காத ரூப ஜகதாகார பரிணாமே பரமாத்ம சரீரபூத சிதம் சகதா: ஸர்வஏவ அபுருஷார்த்தா: ததா பூதாசிதம் ச கதாச்ச ஸர்வே விகாரா: பரமாத்மனி கார்யத்வம் தத வாப்தயோ: தயோ: நியந்த்ருத்வேன ஆத்மத்வம்" (ஸ்ரீபாஷ்யம்) என்றும், "அவிகார ச்ருதய: ஸ்வரூப பரிணாம பரிஹாராதேவ முக்யார்த்தா: (வேதார்த்த ஸ்ங்க்ரஹம்) என்றுமிறே எம்பெருமானார் நிஷ்கர்ஷம். ஆசார்ய ஹ்ருதய வ்யாக்யானத்தில் பெரிய ஜீயரும் "லோகத்தில் கார்ய காரணங்கள்போல் அன்றிக்கே உபாதான காரணமும் தானேயாகையாலே கார்ய பூத ஸமஸ்த வஸ்துக்களுக்கும் வ்யாபகனாய்" என்று அருளிச் செய்தார். "யஸ்யாத்மா சரீரம் யஸ்ய ப்ருதிவீ சரீரம், ஏஷ ஸர்வபூதாந்தராத்மா . . . . நாராயண:" என்று மூலப்ரமாணகோஷம்.

ஆக நாராயணன் ஸர்வ வ்யாபகன் எனவறிந்தோம்.

### நாராயணனே ஸர்வ நியந்தா

கீழேகூறப்பட்ட ஸர்வ வ்யாப்தி நிறம் பெறுவது நியந்த்ருத்வத்தாலே என்பர் பெரியோர். ஆகாயத்துக்கு வ்யாப்தி உண்டு. அசேதனம் ஆகையால் நியமன ஸாமர்த்யம் இல்லை. ராஜாவுக்கு

நியமன ஸாமர்த்யம் உண்டு. அணுமாத்ர ஸ்வரூபன் ஆகையால் வ்யாபகத்வம் இல்லை.பகவான் பரம சேதனனும் விபு வாயுவும் இருக்கிறபடியால் வ்யாபகனு யும் ஸர்வ நியந்தாவாகவும் உளன். "அனேன ந்ருப நபோ வ்யாவ்ருத்தி:" என்பர் ச்ருத ப்ரகாசிகாசார்யர். சாந் தோக்யம் ஸத்வித்யா ப்ரகரணத்தில் உள்ள "ஆதேச:" என்ற பதத்திற்கு எம்பெருமானார், "ஆதிச்யதே அனேன இத்யாதேச:, ஆதேச: ப்ரசாஸனம்" (வேதார்த்தஸங்க்ரஹம்) என்று வ்யாக் யானம் இட்டருளுகிறார். "ஆதிச்யதே ..... ஆதேச: "இதி ப்ரத்யயார்த்த வ்யாக்யானம். "ஆதேச: ப்ரசாஸனம்" இதி ப்ரக்ருத்யர்த்த வ்யாக்யானம்" என் றிறே தாத்பர்யதீபிகா. "சாஸ்தா விஷ்ணுரசேஷஸ்ய" என்ற பள்ளிப் பிள்ளை வார்த்தையும், "ஈசித்ருத்வம் நாராயண த்வயி ந ம்ருஷ்யதி வைதிக: க:" என்ற ஆளவந்தார் ப்ரச்னவாக்ய மும், "வ்யாப்தி நிறம்பெற தனிக்கோல் செலுத்தும் ஸர்வ நியந்தா" என்ற ஆசார்ய ஹ்ருதய சூக்தியும் இவ்விடம் அநுஸந்திக்கத்தக்கவை. வ்யாபகனும் நியந்தாவும் ஆனவனே ஆத்மா."அந்த: ப்ரவிஷ்ட: சாஸ்தா ஜனானாம் ஸர் வாத்மா" என்றிறே வேதகோஷம். ஆக நாராயணனே ஸர்வநியந்தா என வறிந்தோம்.

### நாராயணனே உபயவிபூதியுக்தன்

லீலா விபூதி, நித்யவிபூதி எனக்கூறப் படும் இரண்டு விபூதிகளை உடையவன் நாராயணன் என்பது சாஸ்த்ரஸித்தம்: கீதோபநிஷதாசார்யனான கண்ணன் கீதை பத்தாவது அத்யாயத்திலும், த்ர மிடோபநிஷதா சார்யனான நம்மாழ் வார் திருவாய்மொழி "புகழு நல்லொரு வன்" பதிகத்திலும், "நாராயணன் விபூதிமான்" என்றறுதியிட்டார்கள். இவ்வர்த்தத்தை நம்முடைய ஸ்வாமி "தத் வ்யதிரிக்தஸ்ய ஸமஸ்தஸ்ய ததா யத்ததாம் தத்வ்யாப்யதாம் ததாதார தாம், தந்நியாம்யதாம் தச்சேஷதாம் ததாத்மகதாம்ச ப்ரதிபாத்ய (வேதார்த்த ஸங்க்ரஹம்) என்றும், ப்ரஹ்ம சிவயோ ரபி இந்த்ராதி ஸமானாகரதயா தத்விபூ தித்வம் ச ப்ரதிபாதிதம் (வே.ஸ) என் றும், "க்ஷயந்தம் அஸ்ய ரஜஸ: பராகே" ....அனேன த்ரிகுணாத்மகாத் க்ஷேத்ரஜ் ஞஸ்ய போக்ய பூதாத் வஸ்துந: பரஸ் தாத் விஷ்ணோ: வாஸஸ்தானம் இதி கம்யதே" (வே.ஸ) என்றும், "த்வே வாவப்ரஹ்மணோ ரூபே-மூர்த்தம் சைவ அமூர்த்தம்ச" இதிப்ரக்ருத்ய.....ஸமஸ் தம் ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபம் ப்ரபஞ்சம் ப்ரஹ்மணோ ரூபத்வேன பராம்ருச்ய (ஸ்ரீ பாஷ்யம்) என்றும் நிதித்யாஸனாய ப்ரஹ்ம ஸ்வரூபம் உபதிசத். "த்வேவாவப்ரஹ்மண:" இத் யாதி சாஸ்த்ரம் ப்ரஹ்மணோ மூர்த்தா மூர்த்த ரூபத்வ யாதி விசிஷ்டதாம் ப்ராக் அஸித்தாம் நாநுவதிதும் க்ஷமம்' (ஸ்ரீபாஷ்யம்) என்றும், "லோக்யத இதிலோக: தத் த்ரயம் லோகத்ரயம். அசேதனம் தத் ஸம்ஸ்ருஷ்ட: சேதன முக்தச் சேதி ப்ரமாணைவகம்யம் ஏதத் த்ரயம் ய ஆத்மதயா ஆவிச்ய பிபர்தி" (கீதாபாஷ்யம்) என்றும் வெளியிட்டிருக் கிறார். ஆக நாராயணன் உபயவிபூதி யுக்தன் எனவறிந்தோம். ஆகவிறே பகவான் ஸர்வ சப்தவாச்யனாகிறான்.

### நாராயணன் திவ்ய மங்கள விக்ரஹ விசிஷ்டன்

பகவானுக்கு ஜகதாகாரத்வம் போலே அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்தானமும் உண்டு என்று சாஸ்திரங்கள் கோஷிக் கின்றன. "அந்தராதித்யே ஹிரண்மய: புருஷ...ஹிரண்ய ச்மச்ரு:....ஆப்ரணகாத் ஸர்வ ஏவஸுவர்ண....தஸ்ய யதா கப் யாஸம் புண்டரீகம் ஏவம் அக்ஷிணீ" என்று ச்ருதியும், "ராம: கமலபத்ராக்ஷ:" என்று ஸ்ரீ ராமாயணமும், "இச் சாக் ருஹீதாபிமதோருதேஹ:" என்று ஸ்ரீ விஷ்ணு புராணமும், 'ரூபம்வா அதீந்த்ரியம்...." "ஹிரண்மய இதி ரூப ஸாமான்யாத்" என்று டங்காசார்ய வாக் யமும்,"யதா பூதவாதிஹி சாஸ்த்ரம்....... ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்" என்ற த்ரமிடபாஷ்யமும், "துயரறு சுட ரடி" என்ற திருவாய்மொழிப் பாசுரமும் இதனை வலியுறுத்தும். "ஸ்வாம் ப்ரக் ருதிம் அதிஷ்டாய, ப்ரக்ருதி: ஸ்வபாவ: ஸ்வமேவ ஸ்வபாவம் அதிஷ்டாய ஸ்வே நைவ ரூபேண ஸ்வேச்சயா ஸம்பவாமி

இத்யர்த்த: ஸ்வஸ்வரூபம் ஹி ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத்'' ''க்ஷயந்தம் அஸ்ய ரஜஸ:பராகே'' ''அந்தராதித்யே ஹிரண்மய: புருஷ:''....இத்யாதி ச்ருதி ஸித்தம்'' (கீதாபாஷ்யம்) என்றும், ''இதானீம் விச்வ சரீரத்வேன த்ருச்ய மானரூப: த்வம் தேனைவ ரூபேண, பூர்வ ஸித்தேன சதுர்புஜேன ரூபேண யுக்தோ பவ'' (கீதாபாஷ்யம்) என்றும் எம்பெருமானர் திவ்ய ஸூக்தி அனுபவிக்கத் தக்கது. ஆழ்வாரும் ''நீராய் நிலனாய்.... சிவனாய் அயனாய் ''(நம். 6.9.1) என்று ஜகதாகாரத்வத்தைப் பற்றித் தனக்கு ஏற்பட்டவனுபவத்தை யனுவதித்துக் கொண்டு ''கூராராழி வெண் சங் கேந்தி....வாராய்'' (நம். 6.9.1.) என்று திவ்யமங்கள விக்ரஹ விசிஷ்டானுபவத்தை யாசைப்படுகிறார். ஆகையால் பகவான் ஜகதாகாரனாயிருப்பது போல் திவ்ய விக்ரஹ விசிஷ்டனாயும் உளன் எனவறிந்தோம்.

### நாராயணன் உபயலிங்கம்

ராஜாவுக்கு சத்ர சாமரங்கள் அடையாளங்கள் அதேபோல பகவானுக்கு இரண்டு அடையாளங்கள் ''அகிலஹேய ப்ரத்யனீகத்வம், கல்யாண குணைகதானத்வம்''என்று. இதிறே பகவத் சப்தார்த்தமாய் ''ஜ்ஞான சக்தி பலைச்வர்ய வீர்ய தேஜாம்ஸி அசேஷத:பகவத் சப்த வாச்யாநி விநாஹேயை: குணாதிபி:'' என்று ஸ்ரீ பராசரர் நிஷ்கர்ஷித்தது. ப்ரஹ்மம் ஸகுணம் என்னும் இவ்வர்த்தத்தை ''ஈக்ஷதே: நாசப்தம்'' ''ஆனந்தமய: அப்யாஸாத்'' ''அந்த:தத்தர்மோபதேசாத்'' ''அத்ருச்யத்வாதி குணக: தர்மோக்தே:'' ''ஸாச ப்ரசாஸனாத்'' ''அபித்யோபதேசாச்ச'' ''ஆனந்தாதய: ப்ரதானஸ்ய'' என்று ஸ்ரீ வேத வ்யாஸரும் ''யுக்தம்தத் குணகோபாஸநாத்'' என்று வாக்யகாரரான டங்கர் என்ற ப்ரஹ்மநந்தியும், ''யத்யபி........ததாபி அந்தர்குணமேவ தேவதாம் பஜதே....ஸகுணை வ தேவதா ப்ராப்யதே'' என்று த்ரமிட பாஷ்யகாரரும் அருளிச் செய்தார்கள். அபௌருஷேயத்வ நித்யத்வங்களாலே வேதம் அகில ப்ரமாண விலக்ஷணமாய் இருக்குமாபோலே அகிலஹேய ப்ரத்யநீகத்வ கல்யாண குணைகதானத்வங்களாலே ஈசுவரன் அகில ப்ரமேய விலக்ஷணன் என்பர் பெரியோர். இது பற்றியும் கலியன் ''தூயானைத் தூய மறையானை (11.7.3.) என்று ப்ரமாண ப்ரமேயங்களின் தூய்மையைத் திருவுள்ளம் பற்றினார். நம்மாழ்வார் முதலடியிலே மாயாவாதிகள் மிடற்றைப் பிடிப்பாரைப் போலே ''நலமுடையவன்'' என்றருளிச் செய்தார். மாறன் அடிபணிந்துய்ந்தவரான எம்பெருமானாரும், தம்முடைய க்ரந்தங்களில் பரமாத்ம நிரூபண ப்ரகரணங்களில் அவன் குணஸமூஹங்களை வாய் வெருவாமல் இருக்கவேமாட்டார். ''நிர்மலானந்த கல்யாண நிதயே''என்று வேதார்த்த ஸங்கரஹாதியிலும், ''நிர்மலானந்த உதந்வதே'' என்று வேதாந்த ஸாராதியிலும், ''ஸ்ரீய:பதி: நிகிலஹேய:ப்ரத்யநீக கல்யாண குணைகதான'' என்று கீதாபாஷ்யாதியிலும், ''அகுலஹேய ப்ரத்யனீக கல்யாண குணைகதான'' என்று சரணாகதி கத்யத்திலும் அருளிச் செய்திருப்பதைக் காணலாம். ஸ்ரீ பாஷ்யத்தில் மஹாசித்தாந்த ச்ருதி கட்டத்தில் ஸகுண நிர்குண ச்ருதிகளை உதாஹரித்து இவற்றுக்கு விஷய பேதத்தாலே விரோதலேசம் கிடையாது என நிருபித்துள்ளார். பகவானுக்குக் கல்யாண குணங்கள் உள என்று ஸகுணச்ருதியும், அவனுக்கு அபகுணங்கள் கிடையா என நிர்குண ச்ருதியும் சொல்லுகின்றன என்றும் இந்த நிர்ணயத்தை ''நச நிர்குண வாக்ய விரோத: ப்ராக்ருத ஹேய குண விஷயத்வாத் தேஷாம் ''நிர்குணம்'' இத்யாதீனும் என்றும், ''பராஸ்ய சக்தி:....ஏஷ ஆத்மா ....ஸத்யகாம: ஸத்ய ஸங்கல்ப:'' ''இத்யாத்யா: ச்ருதய: ஜ்ஞாத்ருத்வ ப்ரமுகான் கல்யாண குணாந்'' என்றும் அருளிச் செய்துள்ளார். ''ஸங்க்யாதும் நைவ சக்யந்தே குணாதோஷாச்ச சார்ங்கிண: ஆனந்த்யாத் ப்ரதமோ ராசி: அபாவாதேவ பச்சிம:'' என்ற சாஸ்த்ர வசனமும் பகவானை உபயலிங்கமாகக் கூறுகிறது. ஆழ்வானும் ''தூரே குணா: தவது ஸத்வரஜஸ்தமாம்ஸிதேன த்ரயீ ப்ரதயதி த்வயி நிர்குணத்வம் நித்ய ஹரே நிகில ஸத்குண ஸாகரம் ஹி த்வா மாமனந்தி பரமேச்வரம் ஈச்வராணாம்'' என்று (ஸ்ரீ. வை.ஸ்த) அருளிச் செய்கி

ரூர். "உபயலிங்கம் — உபயலக்ஷணம் நிரஸ்த நிகில தோஷத்வ கல்யாண குணாகரத்வ லக்ஷணோ பேதம் இத்யர்த்த:" என்ற ஸ்ரீ பாஷ்ய வாக்யமும், "அன்யோன்ய பின்னவிஷயா: நவிரோத கந்தம் அர்ஹந்தி" என்ற நடாதூர் அம்மாள் தத்வஸார வாக்யமும், "கல்யாணா: அஸ்யயோக: ததிதர விரஹோபி ஏக வாக்ய ச்ருதௌச" என்ற தேசிகன் தத்வ முக்தாகலாப வாக்யமும் காணத்தக்கவை—பதினாறு ஹேதுக்களைக் கொண்டு, பரமாத்மா ஸத்ய கல்யாண குணகரன் என்று ச்ருத ப்ரகாசிகாசார்யர் ஸ்தாபித்துள்ளார். "த இமே ஸத்யா: காமா:" என்றன்றோ வேதாந்த கோஷம் — ஆக நாராயணன் உபயலிங்கம் எனவறிந்தோம்.

## நாராயணனே புருஷோத்தமன்

புருஷன் என்ற பதம் ஸ்வதந்த்ரன் என்ற பொருளைக் குறிக்கும். பகவான் ஒருவனே ஸ்வதந்த்ரன் என்றும் அவனையொழிந்த எல்லோரும் அவனுக்கு பரதந்த்ரர்கள் என்றும் வேதாந்தம் ஸாரமாகத் தெரிவிக்கிறது. இந்த பாரதந்த்ர்யமான ஸ்த்ரீத்வம் ஸர்வஜீவாத்மாக்களுக்கும் அவிசிஷ்டம். அத ஏவ லக்ஷ்மீதுல்யத்வம் ஸர்வர்க்கும் ஒத்துக் கொள்ளப்பட்டுள்ளது. இவ்வண்ணமே ஆழ்வார்களினுடைய நாயிகா பாவம் பெரியோர்களால் நிர்வஹிக்கப்பட்டுள்ளது. பத்தனோடு முக்தனோடு நித்யனோடு வாசியற ஜீவஸாமான்யமே பகவத் பரதந்த்ரம். "ஸ ஸ்வராட் பவதி" "ஸ: ஆக்ஷர: பரம: ஸ்வராட்" என்று ஜீவனுக்கு வேதாந்தங்களில் ஸ்வாதந்த்ர்யம் ஓதப்பட்டிருந்தாலும், "கர்மத்தைக் குறித்து இவனுக்கு ஏற்பட்ட ஸ்வாதந்த்ர்யத்தை அவ்வாக்கியங்கள் தெரிவிக்குமதொழிய பகவானைக் குறித்து, இவன் ஸ்வதந்த்ரன் எனக் கூறுது. "அத ஏவச அனன்யாதிபதி:" என்ற ஸ்ரீவேதவ்யாஸ ஸூத்ரம் இதனை வலியுறுத்தும், "அநதிபதி:" என்று கூறுமல், "அனந்யாதிபதி: என்று கூறியது உற்று நோக்கத்தக்கது. ஆக பகவான் ஒருவனே ஸ்வதந்த்ரன், புருஷோத்தமன், மற்ற எல்லோரும் பரதந்த்ரர்கள், நாரீதுல்யர்கள் எனத் தேறிற்று. இதுபற்றியே "நேஹ நாநா" என்று த்விதீய நிஷேதம் செய்தது. "பரமாத்ம ஸத்ருச ஸ்வதந்த்ரன் மற்றொருவன் இலன்" என்றிறே அதன் பொருள். "ஸ ஏவ வாஸுதேவாயம் ஸாக்ஷாத் புருஷ உச்யதே" என்ற ஸ்ரீ ராமாயண ச்லோக பாகத்திற்கு மஹேச்வர தீர்த்தர் வ்யாக்யானமும் காணத்தக்கவை. பத்த ஜீவர்களான புருஷர்களைக் காட்டிலும் முக்த ஜீவர்களான புருஷர்களைக் காட்டிலும் புருஷோத்தமன் பகவான் பரமவிலக்ஷணன் என்று கீதை கூறுகிறது. "கைவல்யார்த்திக்குப் ப்ராப்யன் தன்னாத்மாவாகிற புருஷன். அந்தப் புருஷனைவிட விலக்ஷணன் புருஷோத்தமன் பகவான்" என்னும் இவ்வர்த்தத்தை "புருஷாத் கைவல்யார்த்தி ப்ராப்யாத் ஸ்வாத்ம ஸ்வருபாத் உத்தம: அபரிச்சின்னதயா ச்ரேஷ்ட:" என்ற ஸ்ரீவசனபூஷண பாஷ்ய டீகையில் காணலாம். "நசதேன வினா நித்ராம் லபதே புருஷோத்தம:" என்று ஸ்ரீவால்மீகி பகவானும், "புருஷோத்தம: க:" என்று ஆளவந்தாரும் ப்ரயோகித்தார்கள். "ப்ரஹ்ம சப்தேன புருஷோத்தம அபிதீயதே" என்றிறே ஸ்ரீபாஷ்யம். ஆக நாராயணனே புருஷோத்தமன் எனவறிந்தோம்.

## நாராயணனே ஸ்ரீமான்

ஸ்ரீவேதவ்யாஸ பகவான் பரமாத்மாவை "அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா" "அத ஏவச ஸ ப்ரஹ்ம" என்று ப்ரஹ்ம சப்தத்தாலே நிர்தேசித்தார். நம்மாழ்வார் பரமாத்மாவை "மலர்மகள் விரும்பும்........அடிகள்" (1.3.1), "நம் திருவுடை அடிகள்" (1.3.8), "அருளாத திருமால்" (1.4.7); "செடியார் ஆக்கை அடியாரைச் சேர்தல் தீர்க்கும் திருமாலை" (1.5.7), "மலராள் மைந்தன்" (1.5.9), "திருமகளார் தனிக்கேள்வன்" (1.6.9), "திருவின் மணாளன்" (1.9.1), "பூமகளார் தனிக்கேள்வன்" (1.9.3), "உடனமர்....திருமகள்" (1.9.4), "மைந்தனை மலராள் மணவாளனை" (1.10.4), "செல்வ நாரணன்" (1.10.8), "நீயும் திருமாலால்" (2.1.1), "ஞாலம் படைத்

தவனைத் திருமார்வனை " (3.7.8), " திரு நாரணன் தாள் " (4.1.1), " மைய கண்ணாள்........உறை மார்பினன் " (4.5.2), " மணிமாமை குறைவில்லா மலர்மாதர் உறைமார்வன் " (4.8.2), "குடைந்தைத் திருமாலை" (5.8.7), " அகலகில்லேன் இறையும் என்று அலமேர் மங்கையுறை மார்பா" (6.10.10), "என் திருமகள் சேர் மார்பனே " (7.2.9) " எழில் மலர் மாதரும் தானும்" (7.10.1), " என் திருவாழ் மார்பன் " (8.3.7), " கமல மலர்மேல் செய்யாள் திருமார்பினில் சேர் திருமாலை " (9.4.1), " திருமங்கை தன்னேடும் திகழ்கின்ற திருமால் " (10.6.9), " உன் திருமார்பத்து மாலை நங்கை " (10.10.2), " கோலமலர்ப் பாவைக்கள் பாகிய என்னென்பேயோ " (10.10.7), என்று த்வய விவரணமான திருவாய்மொழியில் ஸ்ரீமானுக வர்ணித்தார். ஸ்ரீ வேதவ்யாஸர் அருளிய ப்ரஹ்மஸூத்ரமும் நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியும் ஏகார்த்த ப்ரதிபாதகம் (ஒரே பொருள் உடையது) எனவறிந்த ஸ்வாமி எம்பெருமானுர் ஸ்ரீபாஷ்ய மங்கள ச்லோகத்தில் " ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே " என்றருளிச் செய்தார். " பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ர வாக்கியங்களை ஒருங்கவிடுவர் " என்று அழகிய மணவாளப் பெருமாள் நாயனுரும், "புரா ஸூத்ரை: வ்யாஸ....விவவ்ரே.....வகுள தரதாம் ஏத்ய ஸபுன:. உபாவேதௌ க்ரந்தௌ கடயிதும்..... ராமாவரஜ:...." என்று ஆச்சான் பிள்ளையும் அருளியுள்ளார்கள். அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த ஆழ்வார்களுள் பொய்கையாழ்வார் பரனை,"உபய விபூதியுக்தன்" என்றும், பூதத்தாழ்வார் பரனை "நாராயணன்" என்றும், பேயாழ்வார் பரனை ' ஸ்ரீமான் " என்றும் நிர்ணயித்தார்கள் என்பர் பெரியவாச்சான் பிள்ளை. " ச்ரத்தயா தேவோ தேவத்வ மச்னுதே ", " ஹ்ரீச்சதே லக்ஷ்மீச்ச பத்ந்யௌ " என்று வேத புருஷனும் "திருவில்லாத் தேவரைத் தேறேன்மின் தேவு" என்று திருமழிசைப் பிரானும், "வேதாந்தா: தத்வசிந்தாம் முரபிதுரஸியத் பாதசிந்ஹை: தரந்தி " என்று ஸ்ரீபராசரபட்டரும் அறுதியிட்டார்கள். " க: ஸ்ரீ: ஸ்ரீய: " என்றிறே ஆளவந்தார் ப்ரச்னம். ஆக நாராயணனே ஸ்ரீமான் எனவறிந்தோம்.

## நாராயணனே ஸகலபலப்ரதன்

எம்பெருமானுர் தரிசனத்தில் "அசித்து சித்து ஈசுவரன்" எனத் தத்துவங்கள் மூன்று. அவற்றை பற்றி ஏற்படும் அனுபவமான புருஷார்த்தங்களும் மூன்று என அங்கீகரிக்கப்பட்டுளது. அவை முறையே "ஐச்வர்யம்" "கைவல்யம்" "பரமமோக்ஷம்" எனப்படும். இம் மூன்றையும் நம்மாழ்வார் " ஐங்கருவி கண்டவின்பம் —தெரிவரியவளவில்லாச் சிற்றின்பம்....திருமகளும் நீயுமே நிலா நிற்பக்கண்டசதிர்" (4.9.10) என்று குறிப்பிடுகிறார். இவற்றுள் முதலாவது போகம் என்றும் மற்றவையிரண்டும் அபவர்கம் (மோக்ஷம்) என்றும் குறிப்பிடுவர்கள் ஸம்ப்ரதாயம் வல்ல பெரியோர். போகா பவர்க ஸகல பல ப்ரதன் நாராயணனே என்றும் இவ்வர்த்தத்தை, " இறையவர் அவரவர் விதி வழியடைய நின்றனரே " " வீடுமுதல் முழுதுமாய் ", " வீடுமுதலாம் " என்று மாறனும், " பரஸ்மாதேவாஸ்மாத் புருஷாத் தத்ப்ராப்திரூபம் அபவர்காக்யம் பலம் இதி ஸம்ப்ரதி ப்ரூதே. துல்ய ந்யாயதயா சாஸ்த்ரீயம் ஐஹிகம் ஆமுஷ்மிகம் அபிபலம் அத ஏவ பரஸ்மாத் புருஷாத்பவதி இதி ஸாமான்யேன பலம் அத: இத்யுச்யதே" என்று மாறனடி பணிந்து உய்ந்த எம்பெருமானுரும் அருளிச் செய்தார்கள். ஆக ஸகல பலப்ரதன் நாராயணன் எனவறிந்தோம். ஆக (1) அகில ஜகத் காரணம் (2) ஸர்வ வ்யாபகன் (3) ஸர்வ நியந்தா (4) உபய விபூதியுக்தன் (5) திவ்ய விக்ரஹ யுக்தன் (6) உபயலிங்கம் (7) புருஷோத்தமன் (8) ஸ்ரீமான் (9) ஸகல பலப்ரதன் நாராயணனே என்று எம்பெருமானுர் தர்சனத்தில் பரதத்வம் பற்றி சில விஷயங்களை யனுபவித்தோம்.

இப்படிப்பட்டவன் பரமாத்மா என்றும் இவ்வர்த்தத்தை அறிவிக்கும் ப்ரமாணம் ஏது என்னில் வேதாந்தமாகிற சாஸ்த்ரமே. சாஸ்த்ரம் கொண்டேயறிய வேண்டும் ஒழிய ஸ்வதந்த்ரானுமானுதி

களாலே யறியக்கூடாது என்பது எம்பெருமானுர் தர்சனம். குடம் முதலான கார்யங்களுக்குக் குயவன் முதலான காரணம் உண்டானுற் போலே, ஜகத்துக்கு பரமாத்மா காரணபூதன் என்று, அனுமானத்தாலே ஈசுவரனை ஸாதிக்கப்புக்கால் ஸாதிக்கப்பட்ட ஈசுவரன் குயவனைப் போல் கர்மவச்யனுகவும், துக்கியாகவும்,அஜ்ஞனுகவும் தேறுமேயல்லது ஸமஸ்த வஸ்து விலக்ஷணமாகத் தேருன். அனுமானம் ஈசுவரன் காரணம் அல்லன் என்று விபரீதமாகவும் ஸாதிக்கக்கூடும். அனுமானம் ப்ரதிஷ்டிதம் அல்ல ஆகையாலும் ஸ்வதந்த்ர ப்ரமாணம் அல்ல. ஆகையால் பகவத் விஷயத்தில் சாஸ்த்ரமே ப்ரமாணம் என்று எம்பெருமானுர்,''தர்க்கஸ்ய அப்ரதிஷ்டிதத்வாதபி ச்ருதிமூல: ப்ரஹ்ம காரணவாத ஏவ ஆச்ர்யணீய:'' (ஸ்ரீ பாஷ்யம்) என்றும், ''அத: அதீந்த்ரியே அர்த்தே சாஸ்த்ரம் ஏவ ப்ரமாணம். தது பப்ரும்ஹணுயைவ தர்க்க: உபாதேய:'' (ஸ்ரீபாஷ்யம்) என்றும், ''ஏவம் சிதசித்வஸ்து சரீரதயா தத்விசிஷ்டஸ்ய ப்ரஹ்மண ஏவ ஜகதுபாதானத்வம் நிமித்தத்வம்ச நாநுமானகம்யம் இதிசாஸ்த்ரைக ப்ரமாண கத்வாத் தஸ்ய ''யதோவா'' இத்யாதி வாக்யம் நிகில ஜகதேக காரணம் ப்ரஹ்ம போதயதி இதி''(வேதாந்த ஸாரம்) என்றும் இத்யாதி வாக்யங்களால் வெளியிட்டருளினுர்.

பரதத்வ ப்ரஸங்காத் அவர தத்வங்களான சேதனு சேதனங்களைப் பற்றிச் சிறிது அனுபவிப்போம்.

**ஜீவதத்வம்**

ஜீவன் ஜ்ஞாதா (அறிவுடையவன்) ஆகையால் அசித்தை (தேஹாதிகளை)க் காட்டிலும் வேறுபட்டவன். பகவச்சேஷபூதன் ஆகையால் பரமாத்மாவை (சேஷியை)க் காட்டிலும் வேறுபட்டவன் என்பது எம்பெருமானுர் தரிசனம். கீதாசார்யன் ''இதம் சரீரம்....ஏதத்யோ வேத்தி,'' ''க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம்'' என்று ஜீவனை ஜ்ஞாதாவாகவும் பகவத்சேஷனுகவும் நிருபித்தான். மூலமந்த்ரத்தில் ப்ரணவத்தில் ஜ்ஞானவாசியான மகாரமும் லுப்த சதுர்த்தீவிசிஷ்ட அகாரமும் முறையே ஜீவனை ஜ்ஞாதா சேஷன் என்று கூறுகின்றன. ''பிறர் நன்பொருள்!' (கண்ணிநுண் சிறுத்தாம்பு) என்ற பதத்திற்கு நாயனுர் வ்யாக்யானம் இதனை விரிவாக உரைக்கிறது.

ஜீவாத்மாவுக்குள்ள ஜ்ஞாத்ருத்வ, சேஷத்வங்களானஇரண்டாகாரங்களுள் ஜ்ஞாத்ருத்வம் பஹிரங்கம் சேஷத்வம் அந்தரங்க நிருபகம் என்று ஸம்ப்ரதாயம் கூறும். ''அடியேனுள்ளான்'' நம். 8. 8.2.) என்ற பாசுரம் ஈட்டு வ்யாக்யானத்தில் இவ்விஷயம் வ்யக்தம். ஜீவாத்மாவுக்கு தேஹ இந்த்ரிய மந:ப்ராண தர்மபூத ஞான வைலக்ஷண்ய ஸாதகமான ஜ்ஞாத்ருத்வத்தைவிட ஈசுவர வைலக்ஷண்ய ஸாதகமான சேஷத்வம் அந்தரங்கம் என்பர் பெரியோர். தாஸ்யமிறே அந்தரங்க நிருபகம் என்பது ஸ்ரீ வசனபூஷண ஸூத்ரம். அனுதியான ஒற்றையெழுத்தான ப்ரணவம் முத்துற அகாரத்தாலே சேஷத்வத்தைச் சொல்லி, பின்பிறே மகாரத்தாலே ஜ்ஞாத்ருவத்தைச் சொல்லிற்று. ''மணத்தையும் ஒளியையும் கொண்டு பூவையும் ரத்தினத்தையும் விரும்புமா போலே சேஷம்என்று ஆத்மாவை ஆதரிக்கிறது. அல்லாத போது ''உயிரினுல் குறைவிலம்'' என்கிறபடியே த்யாஜ்யம். அது தோன்ற சேஷத்வத்தைச் சொல்லிப் பின்னை ஆத்மாவைச் சொல்லுகிறது'' (ப்ரணவம்) என்ற முமுக்ஷுப்படி ஸூத்ரம் நோக்கத்தக்கது. ஸ்ரீ வேதவ்யாஸர் ஜீவாத்மாவுக்கு பகவத்சேஷத்வத்தை முந்துற முதல் அத்யாயம் அந்தர்யாம்யதிகரணுதிகளில் அருளிச்செய்து பின்பிறே இரண்டாம் அத்யாயத்தில் ஜ்ஞாத்ருத்வத்தை அருளிச் செய்தார். ''அத ஏவ பாஷ்யகாரை: சேஷத்வே ஸதி ஜ்ஞாத்ருத்வம் சேதன லக்ஷணம் ஸம்ப்ரதாய பரம்பரா ப்ராப்தம் க்ருதம்''என்றும், 'அஹம் ப்ரத்யய வேத்யத்வாத். மந்த்ரே ப்ரதமம் ஈரணுத். பாஷ்யகாரஸ்ய வசனுத்....சேஷத்வ முக்யதாஸித்தே:'' என்றும் உள்ள ஸ்ரீ வசன பூஷண மீமாம்ஸா வாக்யமும் காண்க. ஜ்ஞாத்ருத்வ விசிஷ்ட சேஷத்வமே தாஸ்யம். இதிறே ஜீவனுக்கு அசிதீச்வர உபய வைலக்ஷண்ய ஸாதக

மாயிருப்பது. ஏதத் விஷய ஞானமில்லாத போது ஸத்தான ஜீவனும் அஸத்ப்ராயன் என்று உபநிஷத்து கூறுகிறது. ''தாஸபூதா: ஸ்வத: ஸர்வே ஹி ஆத்மான: பரமாத்மன:'' என்ற சாஸ்த்ர வசனம் இதனை வலியுறுத்தும். ''தாஸ்யேன லப்தஸத்தாகா: தாஸபூதா:— பூஸத்தாயாம் என்றிறேதாது'' என்று இவ்வசனத்திற்குப் பூர்வர்கள் வ்யாக்யானம் அமைந்துள்ளது. இவ்வசனத்தில் உள்ள தாஸ சப்தம் சேஷத்வத்தையும் ஆத்ம சப்தம் ஜ்ஞாத்ருத்வத்தையும் முறையே காட்டுவதைக் காணலாம். ஆக பகவத்தாஸ்யத்தாலே லப்தஸத்தாகம் ஜீவதத்வம் எனவறிந்தோம்.

அசித் தத்வம்

அறிவில்லாதது அசித் தத்வம் எனப்படும். இது ப்ரக்ருதி, காலம், சுத்த ஸத்வம், தர்மபூத ஜ்ஞானம் என நான்கு வகைப்பட்டது. இவற்றுள் ப்ரக்ருதி தத்வம் விரோதி எனப்படுகிறது. முமுக்ஷு அறிய வேண்டிய அர்த்தம் ஐந்து, பரமாத்மா, ஜீவாத்மா, உபாயம், உபேயம், விரோதி என. இவ்வைந்தினையுமே ஸகல சாஸ்த்ரங்களும் தெரிவிக்கின்றன. இவ்வர்த்த பஞ்சக ஜ்ஞானம் நிரதிசயானந்த (பரம மோக்ஷம்) காரணம், அர்த்த பஞ்சக அஜ்ஞானம் அனந்த க்லேச (ஸம்ஸாரம்) காரணம் என்னும் இவ்வர்த்தத்தை ''அனந்த க்லேச நிரதிசயானந்த ஹேது....ஜ்ஞாதவ்ய பஞ்சக ஜ்ஞாநாஜ்ஞானங்கள்'' என்று ஆசார்யஹ்ருதயத்தில் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிச் செய்தார். இப்படிப்பட்ட ஜ்ஞானம் ஏற்பட ஒட்டாமல் தடை செய்யும் விரோதி கர்மாநு குணமாக ஸம்பந்தித்துக் கிடக்கிற ப்ரக்ருதி. இதுவே ஆச்சர்யத்வம் பற்றி ''மாயா'' எனப்படுகிறது. அனாத்மாவான தன்னை ஆத்மாகவும், அபோக்யமான தன்னை போக்யமாகவும், அஸ்த்திரமான தன்னை ஸ்திரமாகவும் காட்டும் விசித்ர சக்தி இதற்குண்டு. ''மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத் மாயினம்து மஹேச்வரம்'' என்று உபநிஷத்தும், ''மம மாயாது ரத்யயா'' என்று கீதோபநிஷத்தும் இவ்வர்த்தத்தில் ப்ரமாணம். இதனைக் கழித்துக்கொள்ளவே முமுக்ஷுக்கள் பக்தி ப்ரபத்திகளைச் செய்கிறார்கள். ஆக ப்ரக்ருதி தத்வம் விரோதி தயாஜ்யம் எனவறிந்தோம்.

ஆக அசேஷ சிதசித்வஸ்து சேஷீ நாராயணன் பரதத்வம் என்றும், அவன் திருவடிகளில் தாஸபூதன் ஜீவாத்மா என்றும், கர்மாநுகுண ப்ராக்ருத அசித் ஸம்பந்தம் விரோதி என்றும் தத்வத்ரயத்தைப்பற்றி எம்பெருமானார் தர்சனம் அறிந்தோம்.

இனி ஹிதத்தைப்பற்றி விவரிக்கிறேன்.

பரமஹிதம்

ஓர் ஸம்ஸாரி சேதனன் ஆத்ம க்ஷேமம் அடைய உபாயம் க்ருபாவிசிஷ்டனான நாராயணனே என்று ஸகல சாஸ்த்ரங்களும் கூறுகின்றன. இதுவே எம்பெருமானார் தர்சனம். ப்ரபன்ன ஜன கூடஸ்தரான ஸ்வாமி நம்மாழ்வார் திருவாய்மொழியில் இவ்வர்த்தத்தையே வெளியிட்டிருக்கிறார் என்பதனை தேசிகன் ''ஸ்வப்ராப்தௌ ஸ்வயமிஹ கரணம் ஸ்ரீதர: ப்ரத்யபாதி'' என்று வெளியிட்டருளினர். 'உபபத்தே: ச'' என்ற ஸ்ரீவேதவ்யாஸ ஸூத்ர வ்யாக்யானத்தில் ''ப்ராப்யஸ்யைவ பரம புருஷஸ்ய ஸ்வப்ராப்தௌ ஸ்வஸ்யைவ உபாயத்வ ப்ரதீதே ''நாயமாத்மா....'' இதி அனன்யோபாயத்வ ச்ரவணாத் (ஸ்ரீ பாஷ்யம்) என்றும் ''ப்ராப்யஸ்யைவ பரமாத்மன: ப்ராபகத்வ உபபத்தே: யதாஹ ''நாயமாத்மா....'' இதி '' (வேதாந்தஸாரம்) என்றும் எம்பெருமானார் அருளிச் செய்தார். ''புல்லைக் காட்டியழைத்துப் புல்லையிடுவாரைப் போலே பல ஸாதனங்களுக்குப் பேதமில்லை'' ''ப்ராபகனும் அவனே'' என்று ஸ்ரீவசனபூஷணம் இதனை வலியுறுத்துகிறது. ஜகதுபதான காரணமே ஜகந்நிமித்த காரணம் ஆனாற்போலே ப்ராப்யமான ப்ரஹ்மமே ப்ராபகம் என்னக் குறையில்லை.'' அவச்சேதக பேதமே உள்ளது என்பர் பெரியோர். இவ்விஷயம் ''நல்குரவும்'' (நம் 6.3). திருவாய்மொழி ஈட்டு அவதாரிகையில் வ்யக்தம். ஆக பகவான்

உபாயம். உபாயதாவச் சேதகம் காருண்யம் எனவறிந்தோம். இனி புருஷார்த்தத்தை சற்று விவரிக்கிறேன்.

பரமபுருஷார்த்தம்

பகவன் முகோல்லாஸமே ஜீவாத்மாவுக்கு ப்ராப்யம் (பலம்) என்பது வேதாந்தஸாரம், ஜீவபரர்களுக்குள்ள ஒழிக்க ஒழியாத ஒன்பது ஸம்பந்த (நவ விதஸம்பந்தங்களில் பர்த்ரு பார்யா பாவம் ஒன்று.

இது ப்ரணவத்தில் உகாரத்தாலே நிர்ணீதம். அதற்குச் சேர நிருபித்தால் ஜீவனுன பார்யையைப் பார்த்து இச்சிப்பான், அடைவான், அனுபவிப்பான், நீண்ட அனுபவம் பெறுவான், ஆனந்திப்பான் பரமாத்மாவான பர்த்தா என வறியலாம். இதிறே பரமாத்மாவினுடைய ப்ரிய மோத ப்ரமோத ஆனந்தங்கள் இருக்கும்படி. மூலப்ரமாணமான ச்ருதியும் "ப்ரஹ்மவித் ஆப்னோதி பரம்" என்று பரஸ்மைபத நிர்தேசம் செய்து காட்டிற்று. ப்ராப்தி க்ரியாபலம் ஆனந்தம் பரஸ்மை (அன்யனுன பகவானுக்கே) சேரும் என்றிறே "ஆப்னோதி" என்று ச்ருதி ஓதிற்று. "அத்யர்த்த ஜ்ஞானினம் லப்த்வா" என்று எம்பெருமானரும் ஸ்ரீ பாஷ்யோ பஸம்ஹாரத்தில் அருளிச் செய்தார். "ஸ்வயம்து ருசிரே தேசே க்ரியதாம் இதி மாம்வத" என்று இளைய பெருமாளும், "தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே" என்று நம்மாழ்வாரும்,—மற்றை நம் காமங்கள் மாற்று, உனக்கே நாம் ஆட் செய்வோம்—என்று ஆண்டாளும்,—ஆம் பரிசு அறிந்து கொண்டு ஐம்புலன் அகத்தடக்கி—என்று தொண்டரடிப் பொடியாழ்வாரும் — ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாத ஜீவித:—என்று ஆளவந்தாரும் அஞ்சுருவாணியாக அருளிச் செய்தார்கள்.—ப்ர்ாப்திக்கு உகப்பானும் அவனே — என்று ஸ்ரீவசன பூஷண சூத்ரம் இதனை சித்தாந்தித்தது. ஆக பர்த்ருப்ரீதியே பத்னிக்கு ப்ராப்யம் ஆனுற்போலே பகவத்ப்ரீதியே ஜீவனுக்குப் புருஷார்த்தம் என்று தேறியது. ஆக பகவான் உபேயம் என்றும் அவன் உகப்பு உபேயதாவச்சேதகம் என்றும் அறிந்தோம்.

ஆக, எம்பெருமானர் தர்சனத்தில் தத்தவ ஹித புருஷார்த்த நிஷ்கர்ஷம் இருக்கும்படி யறிந்தோம்.

இனி யனுட்டானத்தைப் பற்றி சற்று விவரிக்கிறேன்.

கீதாசார்யன் ஷட்கத்வய சேஷமான சரமஷ்ட்கத்தில் முதல் மூன்று அத்யாயங்களால் தத்வத்தையும் இரண்டாவது மூன்று அத்யாயங்களால் அனுட்டானத்தையும் நிரூபித்தான் என்பர் தேசிகன். நம்மாழ்வார் "உயர்வற" திருவாய் மொழியால் தத்துவத்தையும் "வீடுமின்" திருவாய் மொழியால் அனுட்டானத்தையும் நிரூபித்தார் என்பர் நம்பிள்ளை. நாமும் தத்வ பரமாகக் கீழேயனுபவித்தோம். இனி சற்றே அனுட்டானத்தை அனுபவிப்போம். இதனை ஹிதத்திலும் அடக்குவர்கள்.

இப்படித் தத்வ ஹித புருஷார்த்தங்களைத் தெளிந்தவதிகாரி ப்ராப்யா பாஸங்களிலே (ஐச்வர்ய கைவல்யங்களில்) நசையற்று ப்ராபகா பாஸங்களை (கர்மஞான பக்த்யாதிகளை) விட்டு ஸ்வரூபானுரூபமான திவ்ய தம்பதீ கைங்கர்யத்தை யாசைப்பட்டு ஸ்வரூபானுரூபமாக அந்தப் பிராட்டியைப் புருஷகாரமாகப் பற்றி, பகவானை உபாயமாகப் பற்றக்கடவன். இதுவே ப்ரபத்தி மார்க்கம். இதுவே உயர்ந்த தவம். "தஸ்மாத்ந்யாஸம் ஏஷாம் தபஸாம் அதிரிக்தம் ஆஹு:" என்று ச்ருதி கூறுகிறது. இவனே ஸ்ரீ வைஷ்ணவ ப்ரபன்னன். இவன் சரணுகதி செய்த பிறகு மோக்ஷம் அடையும் வரை நடந்துகொள்ளவேண்டிய முறையெல்லாம் சாஸ்த்ரம் வகுத்துக் கூறும்.— இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே குணுனுபவ கைங்கர்யங்களே போது போக்காக வேணும்—மங்களா சாஸனமும் ஆர்த்தியும் அனுவர்த்தன நியதியும் ஆஹார நியதியும் அனுகூல ஸஹவாஸமும் ப்ரதிகூல ஸஹவாஸ நிவ்ருத்தியும்— வர்த்தித்திக்கொண்டு போரக்கடவன்— என்பர் பெரியோர். இவனுக்கு ஐந்து ஸ்பர்சம், பரிஹார்யங்கள். அவை

யாவன. சைவ ஸ்பர்சம், மாயாவாத ஸ்பர்சம், ஏகாயன ஸ்பர்சம், உபாயாந்தர ஸ்பர்சம், விஷயாந்தர ஸபர்சம் என்று. அவனுடைய பரத்வத்தை நினைத்தவாறே சைவ ஸ்பர்சம் அகலும் அவனுடைய உபயலிங்கத்தையறியவே மாயாவாத ஸ்பர்சம் அறும். ச்ரிய: பதித்வத்தையநுஸந்திக்கவே ஏகாயன ஸ்பர்சம் அறும். அவனுடைய நிரபேக்ஷ உபாயத்வத்தை யறியவே உபாயாந்தர ஸ்பர்சம் அறும். அவன் திவ்ய மங்கள விக்ரஹ போக்யதை யறியவே விஷயாந்தர ஸ்பர்சம் விலகும் என்பர் பெரியோர். —தேஹதாரணமான தக்கவளவு போஜனமும் பரமாத்ம ஸமாராதன ஸமாப்தியான ப்ரஸாத ப்ரதிபத்தி-என்கிற புத்தியோடே வர்த்திக்கடவன் என்கிறார் உலகாரியன். ப்ரதிபத்தி க்ரமம் இடா பக்ஷஞுதி உபயுக்த ஸம்ஸ்காரம் என்பர் மீமாம்ஸகர். ப்ரபன்னன் ஆஸனுதி அனுயாகாந்தமான பகவதாராதனத்தை பரமப்ரேமததோடே செய்து கொண்டு பகவத் பாகவதாசார்யா பசாரங்களை நெஞ்சாலும் நினையாதவனாய்—பின்னும் ஆக்கை விடும் பொழுது எண்ணே—என்கிறபடியே கரை குறுகும் காலம் எதிர்பார்த்திருப்பான். இதுவே இவன் அனுட்டானம். இவ்வர்த்தத்தை எம்பெருமானார் அருளிச் செய்த "கத்யத்ரயம்" நித்யம் இவற்றிலும் பிற பட்டார் க்ரந்தங்களிலும் காணலாம். இப்படியனுட்டானம் இருக்கும்படியறிந்தோம்.

இப்படித் தத்வபரமாக ஐந்து க்ரந்தங்களையும் அனுட்டானபரமாக நான்கு க்ரந்தங்களை நவரத்தினங்களாக எம்பெருமானார் அருளிச் செய்து ஸ்ரீ விசிஷ்டாத்வைத ஸித்தாந்த ரக்ஷணம் செய்தார் எனவறிந்தோம். ஆக விறே இது —எம்பெருமானார் தர்சனம்—என நம்பெருமாளாலே அபிமானிக்கப்பட்டது.

ஆக எம்பெருமானார் மதம் எம்பெருமானார் தர்சனம் என நிரூபிக்கப்பட்டது.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஆழ்வார்கள் வளர்த்த வைஷ்ணவம்

சென்னை அட்வகேட் D. ராமஸ்வாமி அய்யங்கார்

திருமாலடியிணையே திண்சரணக் கொண்டு
திருமாலடியிணையே சேர்வார்—ஒருமால்
அருளா லருளாத வானோர்கள் வாழ்ச்சி
அருளால் நமக்களித்தார் ஆய்ந்து.

ஸ்ரீ வைஷ்ணவப் பெரியார்கள் ஒருவருக்கொருவர் கடிதங்கள் எழுதும்போது "சாந்த சமதமாதி அனந்த கல்யாண குணவிசிஷ்டவ்ய எழுந்தருளியிருக்கும்" என்று நியமேந எழுதுவது வழக்கம். சாந்தம், சமம், தமம் முதலிய ஆத்ம குணங்கள் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு முக்கிய லக்ஷணங்கள். அந்த ஆத்ம குணங்களெல்லாம் தம்மிடத்தே நன்கு பொருந்தி விளங்கும் ஒரு ஸ்ரீவைஷ்ணவ ரத்தினத்தினுடைய மணி விழாவைப் பாராட்டு வதற்கென்றே இந்த மலர்— "ஸ்ரீ வைஷ்ணவ ரத்தின மாலை" —பல அழகிய வர்ணங்களுடன் இன்பகரமான தெய்வ மணம் கமழத் திகழ்கின்றது. ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்தையும், ஸம்ப்ரதாயத்தையும் அழகுபடச் சென்ற பல ஆண்டுகளாக இச்சென்னை மா நகரில்பொதுமக்களுள்ளத்தில் இடம் பெற்றுத் திகழும்படி வளர்த்து வரும் இம்மஹானுடைய மணிவிழா மலரில் "ஆழ்வார்கள் வளர்த்த வைஷ்ணவம்" என்ற மகுடத்தின் கீழ் ஒரு வியாஸம் வரைய வேண்டுமென்று அடியேனுக்கு ஆக்ஞையிட்ட இம்மலர்க்குழு வினருக்கு அடியேனுடைய நன்றி கலந்த பிரணமங்கள்.

வைஷ்ணவம் மிகப் பழமையான ஒரு சமயம் என்பது நிர்விவாதம். அந்தச் சமயத்திற்கு அழகும், மெருகும் கொடுத்து அதை நல்ல முறையில் வளர்த்தபெருமை ஆழ்வார்களுடையது என்பதும் மறுக்க வொண்ணா ஒரு உண்மை. வைஷ்ணவம் ஸ்ரீ வைஷ்ணவமாக மிளிர்வது ஆழ்வார்கள் அருளிச் செயல்களாலேதான். ஆழ்வார்கள் மகிழ்ந்து பாடிய செய்ய தமிழ் மாலைகளைத் தெளியவோதித்தெளியாத மறை நிலங்களையும், மறை தெளியாத நிலங்களையும் கூடத் தெளிந்து இன்புற்று வருகிறது தமிழுலகம். சுருங்கச் சொல்லில் உபநிடத உண்மைகளும், ப்ரம்மஸூத்ரங்களின் தாத்பர்யங்களும் விளக்கம் பெற்று மெய்ப்பொருளைக் காட்டுகின்றன என்றால் அது அருளிச் செயல்களின் பேருதவி கொண்டுதான் என்பது ஸ்ரீ வைஷ்ணவ ஆசார்யச் ரேஷ்டர்கள் கண்டுரைத்த பேருண்மை.

ஆழ்வார்கள் வைஷ்ணவத்தைப் பல அம்சங்களில் வளர்த்திருக்கிறார்கள். அவற்றுள் முக்கியமான மூன்று விஷயங்களைப் பற்றி மட்டும் இங்கே சுருக்கமாகத் தெரிவிக்கிறேன்.

மன்னு மனைத் துற வாய் மருள்
மாற்றருளாழியுமாய்
தன்னினை வால் அனைத்தும் தரித்
தோங்கும் தனியிறையாய்
இன்னமுதத் தமுதா லிரங்கும்
திருநாரணனே
மன்னி யவன்சரண் மற்றோர்
பற்றின்றி வரிப்பவர்க்கே.

முதற்கண் காட்ட விரும்புவது மேலே குறிப்பிட்டபடி வைஷ்ணவத்தை ஸ்ரீ வைஷணவமாக்கிய பெருமை. பரதத்துவம் நாராயணனென்று மட்டும் ஆழ்வார்கள் காலத்துக்கு முன்னால் உலகம் அறிந்திருந்தது. ஆழ்வார்கள்தோன்றியபிறகு

தான் ஸ்ரீமானுன நாராயணன் தான் பர தத்துவம் என்று விளங்கியது. ''நிற்கின்ற தெல்லாம் நெடுமால்'' என்று மட்டும் தெரிந்துகொண்டிருந்த உலகம் திருவில் லாத்தேவரைத் தேறேன் மின் தேவு'' என்ற உபதேசத்தைப் பெற்றுத் திரு மாலைப் பரதத்துவமாக அறிந்து வழிபடத் தொடங்கியது. தத்துவம், ஹிதம், புரு ஷார்த்தம் மூன்றுமே திருமால் என்பது ஸ்ரீவைஷ்ணவத்தின் அடிப்படையான முக்கிய கொள்கை. ''என் திருமகள் சேர் மார்வனே என்றும் என்னுடைய ஆவி'' என்றும் ''ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலா நிற்பக் கண்ட சதிர் கண்டு.......... அடைந்தேன் உன் திரு வடியே'' என்றும், ''கோலத் திருமா மகளோடு உன்னைக்கூடாதே'' என்றும் அனுஸந்தித்து, மகிழ்மாறன் (நம்மாழ் வார்) முறையே தத்துவ, ஹித புருஷார்த் தம் மூன்றும் ஒருமிதுனமே என்று காட்டியருளுகிருர். ''திருமாலால் அருளப்பட்ட சடகோபன்'' அன்றே அவர்! ''இங்குமங்கும் திருமாலன்றி இன்மை கண்டு அங்ஙனே'' வெளியிட்ட தில் வியப்பென்ன? ஏனைய ஆழ்வார் களும் இதே கொள்கையைத்தான் பின் பற்றியவர்கள் என்பது அவர்களது அரு ளிச் செயல்களினின்று விளங்குகிறது. திருமாலிடத்தில் திருமால் தலைகொண்ட வர்களே அனைவரும்.

*மாறுய தானவனை வள்ளுகிரால், மார்விரண்*
*டூறுகக் கீறிய கோளரியை—வேறுக [டு*
*ஏத்தி யிருப்பாரை வெல்லுமே, மற்றவரைச்*
*சார்த்தி யிருப்பார் தவம்.*

இரண்டாவதாக ஆழ்வார்கள் விசே ஷித்து வற்புறுத்தியுள்ள விஷயம் பாகவதர்கள் பெருமை. பகவானுடைய பெருமையைக் காட்டிலும் பன்மடங்கு அதிகப்பட்ட பெருமை யுடையவர்கள் பகவானிடத்தில் மெய்யன்பு செலுத்தும் பாகவதோத்தமர்கள். இந்த அர்த்த விசேஷத்தைப் பதிகம் பல பல பாடிக் காட்டியிருக்கிருர்கள் ஆழ்வார்கள். பெரியாழ்வார் திருமொழி (4–4) நாவகா ரியம்; குலசேகராழ்வாருடைய பெருமாள் திருமொழி (2) ''தேட்டருந்திறல்'' திரு மங்கை மன்னன் பெரிய திருமொழி (7-4) ''கண்சோர'' இந்த மூன்று திருமொழி களிலும் விஸ்தாரமாகப் பார்க்கலாம் பாகவதர்களுடைய பெருமையை, ''நாதனை நரசிங்கனை நவின்றேத்துவார் களுழக்கிய பாததூளி படுதலால் இவ் வுலகம் பாக்கியம் செய்ததே'' என்பர் பெரியாழ்வார். ''மெய்யடியார்கள் ஈட்டம் கண்டிடக்கூடுமேல் அது காணும் கண் பயனாவதே'' என்று பாடி ''த்ருஷ்டவ்ய:'' (பார்க்கத்தகுந்தவர்) என்ற சொல் எம்பெருமானைக் காட்டிலும் அவ னடியார் விஷயத்திலே சேர்க்கப்பட்டு பொருள் கொள்ளப்பட வேண்டும் என்று காட்டியருளுகிருர். திருமங்கை மன்ன னும் ''தண்சேறை எம்பெருமான் தாள் தொழுவார் காண்மின் என் தலை மேலாரே'' என்று அனுஸந்தித்து ஹ்ருஷ்டராகிருர். பெரிய திருமொழியை அறியக் கற்ற ஒரு ரஸிகர் திருச்சேறைப் பெருமாளை ஸேவிக்க மறுத்தாராம். ''நான் அந்தப் பெருமாளை ஸேவிக்கவு மில்லை; திருமங்கையாழ்வார் சிரஸ்ஸில் அடியிடவுமில்லை'' என்று சொன்னதாகச் சரித்திரம் ஒன்று உண்டு.

பாகவதர்கள் பெருமையை அழகாக ஸித்தாந்தித்துப்போரும் அருளிச்செயல் களுள் நம்மாழ்வார் பாடிய ''பயிலும் சுடரொளி''த் திருவாய் மொழி (3-7) யும், ''நெடுமாற்கடிமை'' திருவாய் மொழி (8–10)யும் ஸாரதமங்கள். பாகவதர்களே ப்ராபகர்கள் (அடைவிக்குமவர்கள்). அவர்களே ப்ராப்யர்கள் (அடையப்பட வேண்டியவர்கள்) என்று முறையே அவ்விரு திருவாய் மொழிகளும் நமக்குக் காட்டிக் கொடுக்கின்றன. எம்பெருமான் தான் ப்ராபகம் (உபாயம்) அவன் தான் ப்ராப்யம் (உபேயம்) என்ற சித்தாந்தம் மாறி, இரண்டும் பாகவதர்களே என்று நிஷ்கர்ஷிக்கப்படுகிறது. ''மொய்ம்மாம் பூம்பொழில்'' திருவாய் மொழியிலும் (3-5) எம்பெருமானிடத்தில் ஈடுபட்டு நிற்கும் தீர்ந்த அடியவரைப் பற்றி வெகு அழகாக அனுபவம் காணப்படு கிறது. ''சயமே அடிமை தலை நின்ருர்'' என்றும் ''சிறுமாமனிசர்'' என்றும் ''கோதில் அடியார்'' என்றும், ''நீக்க மில்லா அடியார்'' என்றும் பலவிதமாக அடியார்கள் பெருமை வெகுவாகக் காணப்படுவது ''நெடுமாற்கடிமை'' யில்தான்.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.


பாகவதர்கள் பெருமை ஆழ்வார் களால் காட்டப்பட்டு இருப்பதால் பின் தோன்றிய ஆசார்ய ச்ரேஷ்டர்கள் பக வத்கைங்கர்யத்துக்கும் மேற்பட்ட தான புருஷார்த்தமொன்றுண்டு; அது பாகவத கைங்கர்யம் என்று அறுதியிட்டு வைத் தார்கள். பாகவத கைங்கர்யந்தான் புரு ஷார்த்த காஷ்டை. அதாவது புருஷார்த் தத்தின் எல்லை நிலம்.

பாகவத பக்தியையும் பரிஷ்கரித்து, அது ஆசார்யபக்தியாகவிளங்கும்போது அதிலும் மேம்பட்டதொரு உபாயமோ புருஷார்த்தமோ இலது என்று காட்டி யருளியவர் மதுரகவியாழ்வார். "அன் பர்க்கே அவதரிக்கும் ஆயன் நிற்க அருமறைகள் தமிழ் செய்தான் தாளே கொண்டு துன்பற்ற மதுரகவி தோன்றக் காட்டும் தொல்வழியே நல்வழிகள் துணிவார்கட்கே" என்ற அரும் பெரும் அர்த்த விசேஷம் வெளியானது அவரது கண்ணிநுண் சிறுத்தாம்பு ப்ரபந்தத்தால் தேவுமற்றறியேன் ஆழவாரைத் தவிர. அவரேஎனக்கு அன்னை, அத்தன் என்னை ஆண்டிடும் தன்மையன், என்று பகவத் விஷயத்தையும் புறக்கணித்து ஆசார்ய பக்தியை அதற்கும் மேம்பட்டதாகச் சிந்தாந்தித்துக் கொடுக்கும் அப்பிரபந் தம் திவ்யப்ரபந்தத்தில் இடம் பெற்றுத் திகழ்வதில் வியப்பென்ன? அதே முறை யைப்பின்பற்றி பகவத் பாஷ்யகாரர் விஷயத்தில் தேவு மற்றறியேன் என்று அத்யவஸித் திருந்த திரு வரங்கத்த முதனாது இராமானுச நூற்றந்தாதி யும் திவ்யப்பிரபந்தங்களுள் ஒன்றாகவோ திவ்யப் பிரபந்தங்களுக்குத் துல்ய மாகவோ மாபெரும் மதிப்பைப் பெற்றி ருக்கிறது ஸ்ரீ வைஷ்ணவர்கள் உள்ளத் தில். ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தம் ஒன் றில் மட்டும் காணப்படும் இந்த அம்சம் ஆழ்வார்கள் வைஷ்ணவத்தை எப்படி வளர்த்துப் போஷித்துப் பயன்படச்செய் திருக்கிறார்கள் என்பதற்கு ஒரு உயர்ந்த எடுத்துக்காட்டு.

இங்கே திரிந்தேற் கிழுக்குற்றென்;
இருமாநிலம் முன்னுண் டுமிழ்ந்த
செங்கோலத்த பவளவாய்
செந்தாமரைக் கண்என் அம்மான்
பொங்கேழ் புகழ்கள் வாயவாய்,
புலன்கொள் வடிவு மனத்ததாய்
அங்கேய் மலர்கள் கையவாய்
வழிபட் டோட அருளிலே.

காமத்தை முக்கிய புருஷார்த்தமாக்கி இவ்வுலக வாழ்க்கையையே பேரின்ப வாழ்க்கையாக மாற்றிக் கொடுத்துப் பொதுமக்களுக்கு ஆழ்வார்கள் செய் திருக்கும் பேருதவி மதிப்பிடவொண்ணா தது. "ஊன் வாட உண்ணாது உயிர் காவலிட்டு உடலில் பிரியாப் புலனைந் தும் நொந்து தாம் வாட வாடத் தவம் செய்ய வேண்டா" என்று அவர்களுக் குச் சொல்லி "மூண்டாலும் அரியதனில் (செய்ய முடியாத காரியத்தில்) முயல வேண்டா, முன்னமதில் ஆசை விடுகை திண்மை" என்று உபதேசித்து அவர் களிடையே காணப்படும் ஆசையொன் றையே பற்றாகக் கொண்டு, அவர்களைக் கடைத்தேறும்படி செய்த பெருமை ஆழ் வார்களுடையது. பாச நெஞ்சை மடை மாறி அவன் சேவடிக்கே பாய்ச்சி உய்ய லாமேயன்றி வேறு உய்வுபாயம் இலது என்று உபதேசத்தாலும் அனுஷ்டானத் தாலும் ஆழ்வார்கள் காட்டினமையால் நமக்கில்லாப் பெருமைகளைச் சம்பாதித் துக்கொண்டு வீடு பெற முயல்வதிலும் நம்மிடத்தில் அளவுபடாது என்றும் இருக்கும் நம் ஆசையையே உபாய மாக்கி அதுவே வீடு என்று நாம் உணா ரும்படி செய்து வைக்கின்றன அருளிச் செயல்கள். ஆசைவாய்ச் சென்ற சிந்தையை இறைவன்பால் திருப்பி அன்பே தகளியா, ஆர்வமே நெய்யாக இன்புருகு சிந்தை இடு திரியா நன்புருகி ஞானச் சுடர் விளக்கேற்றி வைத்து, நம் இருளனைத்தும் மாற்றின ஆழ்வார் களுக்கு ஒருகைம்மாறு மாயனும் காண கில்லான். "கண்ணனுக்கே யாமது காமம் அறம் பொருள் வீடு இதற்கு" என்று புருஷார்த்தங்களில் ருசியை மாற்றி வைத்தார்கள் ஆழ்வார்கள். என்பதை பகவத் ராமானுஜன் வெகு அழகாக சித்தாந்தித்து வைத்துள்ளார்.

"அதனில் பெரிய என்னவா" என்று எம்பெருமானைச் சூழ்ந்து வளைத்து வைத்து அவனது அருள்பெறும் உபாயம்

போல் அவனை இங்கேயே இப்பிறவியிலேயே அணுகி இம்மைக்கின்பம் பெற்ருேம் என்றும் இம்மையே அருள் பெற்ருேம் என்றும் திருப்தர்களாகி புருஷார்த்த அனுபவம் பெறக்கூடிய வழியையும் நமக்குக் காட்டியிருக்கிருர்கள் ஆழ்வார்கள். ''நின் புகழில் வைகும் தம் சிந்தையிலும் மற்றினிதோ நீ அவர்க்கு வைகுந்தம் என்றருளும் வான்'' என்று வினவுவர் நம்மாழ்வார். ''கோவிந்தற்கோர் குற்றேவல் இம்மைப் பிறவி செய்யாதே, இனிப் போய்ச் செய்யும் தவந்தான் என்?' என்று ஆண்டாளும், ''ஏரார் முயல்விட்டுக் காக்கைப்பின் போவதோ'' என்று கலியனும் பரிஹஸித்துப் பேசுவார்கள் பரம பதத்தைக் குறித்து. ''விண்ணவர் வேண்டி விலக்கின்றி மேவும் அடிமையெல்லாம் மண்ணுலகத்தில் மகிழ்ந்தடைகின்றனர் தமிழ் வேதமறிந்த மஹான்கள்'' என்று வேதாந்த தேசிகன் இந்தப் பெருமையை எடுத்துரைத்ததிலிருந்து இவ்வழியில் வைஷ்ணவத்தை ஆழ்வார்கள் வளர்த்த விஷயம் நமக்குப் புலனுகிறது. ''இப்பிறவி வேண்டேன்'' என்றனுசந்தித்தவர்களே, 'அச்சுவை பெறினும் வேண்டேன்'' என்று அனுஸந்திப்பதைக் காண்கிருேம். ஸ்ரீவைஷ்ணவத்தில் மட்டும் காணப்படும் தனிச் சிறப்பு இம்மனேபாவம்.

அர்ச்சாவதார எம்பெருமான்களைப் பாராட்ட அந்த வேதமே அருளிச்செயல் வடிவத்தில் தன்னை ஆக்கிக் கொண்டது. அருளிச் செயலை நமக்குத் தந்த ஆழ்வார்கள் பிரபத்தி என்னும் உபாயத்தையும் நமக்குத் தந்து அபகரித்திருக்கிருர்கள். ஆழ்வார்கள் அருள் பெற்று அவர்களது அருளிச் செயலில் திளைத்து அவர்கள் காட்டிய பிரபத்தி மார்க்கத்தை உபாயமாகக் கைக்கொண்டு இங்கும், அங்கும் எங்கும் திருமால் திருவருள் பெற்று இன்புற நமக்கெல்லாம் ஒரு நல் வாய்ப்பைத் தருகிறது ஸ்ரீவைஷ்ணவம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச் செயல் வாழி
தாழ்வாது மில் குரவர்தாம் வாழி-ஏழ்பாரும்
உய்ய அவர்களுரைத் தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம

# நம்பிள்ளை நல்கிய நன்மதம்

ஆழ்வார் திருநகரி ஸ்ரீ திருமலை நல்லான் ராமகிருஷ்ணையங்கார் ஸ்வாமி

ச்ரிய: பதியான ஸர்வேசுவரன் பாற் கடலில் பள்ளி கொண்டுள்ளான். அந் நிலையைக் காணவல்லார் அறிவில் முதிர்ந்து பரிவில் மிகுந்த சிலரேயாவர். ஏனையோர் கேட்பதன்றிக் காணவிய லாதவரே. பாற்கடலிற்போலப் பரமன் நூற்கடலிலும் விளங்குகின்றான். அவனை நுண்ணறிவு படைத்தவர் காண லாமேயன்றி ஏனையோர் காணகில்லார். "சங்கோதப் பாற்கடலான பாம்பணை யின் மேலான் பயின்றுரைப்பார் நூற் கடலான் — நுண்ணறிவினன்" என்றார் பேயாழ்வாரும். இறைவன் அருள்பெற் றுக்காணும்திறன் படைத்த மேலோர் கூறுவதுகொண்டே நூற்கடலின் கண் உள்ள அரும்பொருளை நாம் அறிய வேண்டியவர்களாய் இருக்கின்றோம். நாமாக முயன்று சாஸ்திர ச்ரவணம் செய்து இறைவனைப் பெறவிரும்புவது இயலாததொன்றே. "கேட்பார்க்கு அரும்பொருள்" என்கிறார் திருமழிசைப் பிரான். —ந பஹுநா ச்ருதேந— என் றது உபநிடதம்.

நூற்கடலின் கண் உள்ள அரும் பொருள் நாமுமுணர்ந்து எளிதில் எய்து வதற்குறிய வழிகாட்டுகிறார் காருண்ய பூர்ணரான கலிவைரிதாஸர் எனப்படும் நம்பிள்ளை. ஆசார்யரான நஞ்ஜீயர் இவரது உயர்ந்த அறிவின் திறத்தைக் கண்டு வியந்தவராய் நம்பிள்ளை என்று பேர் பெறும்படி அபிமானித்தலின் நமக்கு வழி காட்டியாய் விளங்கும் வீறு டைமை இவருக்கு வாய்த்தது. ஆசாரிய அநுக்ரஹத்தால் எல்லாப் பொருளும் தோன்றுமன்றோ? ஆசாரிய பக்தி வாய்ந்தவர்களுக்கு சொல்லாத பொருள் களும்கூட ப்ராகசிப்பதாக ஓதுவதும் காண்க.

நஞ்ஜீயர் அருளிச் செய்யாத அர்த்த விசேஷங்கள் நம்பிள்ளைக்குத் தோற்றி, அவற்றை மனமுவந்து நஞ்ஜீ யர் ஏற்றுக் கொண்டுள்ளதை நாம் பல இடங்களிலே காணலாம். "ஆவியே அமுதே என நினைந்து" என்ற பெரிய திருமொழிப் பாசுரப் பகுதிக்கு நஞ் ஜீயர் அருளிச்செய்யாத பரம ரஸமான பொருளை நம்பிள்ளை அருளிச்செய்தார். "என-என்று சொல்லி, நினைந்து-இப் புடைகளிலே அநேகத்தை நினைத்து" என்று நஞ்ஜீயர் பொருள்கூறினார். நம் பிள்ளையோ "என நினைந்து" என்ப தற்கு வாய்விட்டுப் பேச மாட்டாமல் இங்ஙன் நினைந்து என்று பொருள் கொண்டு பகவத்விஷயத்தில் "நினை தொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந் துகும்" என்று நம்மாழ்வாருக்கு உண் டான அநுபவம் இதர விஷயத்தில் தமக்கு ஏற்பட்ட படியைத் திருமங்கை மன்னன் சொல்லுவதாக வியாக்யாநம் செய்து "இங்ஙனே சொல்லலாமோ?" என்று ஜீயருக்கு விண்ணப்பம் செய்தார் நம்பிள்ளையினுடைய ரஸிகத் தன்மை யைக் கண்டு நீர் இவரிலும் (ஆழ்வார்) பக்தராய் இருந்தீர்" என்று ஜீயர் அரு ளிச்செய்தார்.

மற்றொன்றும் காட்டுதும்:—

பின்துரக்கும் காற்றிழந்த சூல்கொண்டல் [பேர்ந்தும் போய்
வன்திரைக்கண் வந்தணைந்த வாய்மைத்தே- [அன்று
திருச்செய்ய நேமியான் தீஅரக்கி மூக்கும்
பருச்செவியு மீர்ந்த பரன் —

என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரத் திற்கு நஞ்ஜீயர் வியாக்யாநம் செய்யும் போது 'வாய்மைத்து' என்பதை வாய் மையன் என்று மாறுடி பரன் வாய்மை யன் என்று கூட்டிப்பொருள் கொள்ள வேண்டும், இன்றேல் 'படி' என்னும் சொல்லை வருவித்து பரன்படி வாய்

மைத்து என்று கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும் என்று அருளிச் செய்தார். மாறுடுவதோ. வருவிப்பதோ இன்றி இருந்தபடியே கூட்டிப் பொருள் கூறலாமென்று நம்பிள்ளை ஜீயரிடத்தில் விண்ணப்பம் செய்தார். பின்துரக்கும் காற்றிழந்த சூல்கொண்டல் அன்று திருச்செய்ய நேமியான் தீயரக்கி மூக் கும் பருச்செவியும் ஈர்ந்தபரன் பேர்ந் தும் போய் வன் திரைக்கண் வந்து அணைந்த வாய்மைத்து என்பது நம் பிள்ளை கூட்டிப் பொருள்காட்டினபடி. இங்ஙன்பல உண்டு. கண்டு கொள்க.

இத்தகைய நம்பிள்ளை நல்கியதே நன் மதம் என்க. கீழ்க்காட்டிய பாசுரப் பொருள்கள் நல்லவைகளாய் அமைந் ததுபோல அவர் நல்கியமதமும் நல்லதா கவே அமையும் என்றுணர்க. நல்குதல் விரும்புதல்; கொடுத்தலுமாம். முதலில் அவர் விரும்பிய மதத்தைப் பார்ப்போம்.

“நம் தர்சனம்'' என்று வைதிகமான எம்பெருமானுர் தர்சனத்தைக் குறிப் பிட்டுச் சுருக்கமாக அதனைக்காட்டுகிருர் ஈட்டின் தொடக்கத்திலே நம்பிள்ளை. நம் தர்சனத்துக்கு தத்வங்கள் மூன்று. அவையாவன சித்தும், அசித்தும், ஈசுவர னும். ப்ரகாரப்ரகாரிகள் ஐக்யத்தாலே ஒன்றென்னலாய் ஸ்வரூப பேதத்தாலே பல என்னலாயிருக்கும்.'' இதனுடைய விவரணமே; மேலுள்ளபகுதி: ஏன் ஈடு முழுவதுமே. “சித்' என்று அறிவுடை மையைக்காட்டி, “அசித்'' என்று அறி வின்மையைக்காட்டி 'ஈச்வரன்'' என்று இவற்றை அந்தர்யாமியாய் நியமிப்ப தைக் காண்பிக்கையாலே இவற்றிற் குள்ள பேதம் தெரிகிறது. சித்-எனப் படும் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் அறிவு டைமையில் இங்கு வேறுபாடு தோற்ற வில்லையாயினும் நியமிக்கப்படுமவன் ஜீவன் என்றும், நியமிக்கிறவன் ஈச் வரன் என்றும் பேதம் தோற்றுவது காண்க. என்றும் நியமிப்பது ஆத்மா வாய், நியமிக்கப்படுவது சரீரமாயிருத்த லின் நியமநத்தைக்கூறும் ஈச்வர சப்தத் தாலே சரீர சரீரிபாவ ரூபமான ஸம்பந்தம் இங்கே கருதத்தக்கது.

கருதவே ப்ரகாரமான சரீரமும் ப்ரகாரி யான ஆத்மாவும் ஒன்றென்னலாம்படி ஒன்றியிருக்கையாலே ஐக்யமும் தெரி கிறது. ப்ரகாரமாவது தனித்து இராது ஒடுங்கி நிற்பது. ஆத்மாவை விட்டுத் தனித்து இராது, அதில் ஒடுங்கி நிற்ற லின் ஆத்மாவுக்குச் சரீரம் ப்ரகாரமா யிற்று. சரீரம் ஒடுங்குதலாவது, ஆத்மா வினுடைய 'நான்' என்ற அபிமாநத்துக் குள்ளே அடங்குகை. ஈசுவரனுடைய நான் என்ற அபிமாநத்தில் அடங்கிய சித்தும் அசித்தும் அவனுக்கு ப்ரகாரமா கின்றன. ஆக போக்தா (சித்) போக்யம் (அசித்) ப்ரேரிதா (ஈசுவரன்) என்று பேதம் கூறும் ச்ருதிக்கும் “ஏகம்''என்று அபேதம் கூறும் ச்ருதிக்கும் முரண்பாடு தவிர்க்கப்படுகிறது.

நது த்ருஷ்டாந்த பாவாத் என்கிற ஸூத்ர ஸ்ரீ பாஷ்யத்தில்,“எந்த சேதந னுக்கு எந்தப் பெருமாள் எல்லா நிலை யிலும் தன் விஷயத்தில் (ஸ்வார்த்தே) அதாவது சரீரத்துக்கு இயன்ற அளவில் தாங்கப்படுவதற்கும் நியமிக்கப்படுவதற் கும் தக்கதாய் சேஷப்பட்டதாகவே உள் ளதோ, அந்தப் பொருள் அந்தச் சேதந னுக்குச் சரீரம்'' என்று சரீரத்திற்கு லக்ஷணம் சொல்லப்படுகின்றது. இந்த லக்ஷணத்தை நம் சரீரத்தில் ஸமந்வயப் படுத்திக் காட்டுகிருர் நம்பிள்ளை. (1.1.7) ஈட்டில்:-“இந்த சரீரத்துக்கு இந்த ஆத்மா தாரகனாய் நியாமகனாய் சேஷி யாய் இருக்கிருப்போலே''என்று. இங்கு ஆத்மா தாரகனென்னவே, சரீரம் தார்ய மென்பது பெர்ரும் இங்ஙனமே மற்றை இரண்டுக்கும் கொள்க. லக்ஷணத்தில் எல்லா நிலையிலும் (ஸர்வாத்மநா) என் றது அந்தப் பொருள் உள்ள வரை யிலும் என்றபடி.

ஆக, சரீரத்துக்கு— தார்யம்—நியாம யம்—சேஷம் என்னும் இம்மூன்றும் சேர்ந்து ஒரு லக்ஷணம் என்று சிலர் கூறுவர். ஜகஜ்ஜன்மாதிகள் மூன்றும் சேர்ந்துபிரம்மத்திற்குலக்ஷணம் என்பது போல இம்மூன்றும் சேர்ந்து சரீரத் துக்கு லக்ஷணம் என்று கொள்ள வேண் டும் என்பது அவர்கள் கருத்து. 'ஜந்மத் துக்குக் காரணம் பிரம்மம்' என்பதை மாத்திரம் லக்ஷணமாகச் சொன்னுல், ரக்ஷணத்துக்குக் காரணம் வேறென் றுளதோ என்று தோன்றும். அது

தோன்ருமைக்காக ஜகஜ்ஜந்மாதிகள் மூன்றும் சேர்ந்து லக்ஷணமாகக் கொள்வது அவச்யமாகிறது. அதேபோல் தரிக்கிற சேதநனுக்கு எந்த நிலையிலும் தரிக்கப்படுகிற பொருள் சரீரம் என்பதை மாத்திரம் லக்ஷணமாகச் சொன்னல் நியமிக்கிற சேதநன் வேறு உளனே என்று தோன்றும், அது தோன்ருமைக்காக மூன்றையும் சரீர லக்ஷணமாகக் கொள்ள வேண்டும் என்று இதற்கு விளக்கம் காண்க.

ஜகஜ்ஜந்மாதிகள் ப்ரம்மத்துக்கு லக்ஷணமாக ச்ருதியில் சொல்லப்பட்டுள்ளன. ஜந்ம காரணத்வம் சொன்னல் ஸ்திதி காரணத்துவம் சொல்லப்படாமையின் ப்ரம்மத்வம் (பெருமை) தோன்ருது. சரீர லக்ஷணமோ அங்ஙனன்று. "அந்த: ப்ரவிஷ்ட: சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" என்று நியமிக்கப்படுதல் மாத்திரம் சரீர லக்ஷணமாக சுருதியில் ஓதப்படுகிறது. ஆதலின் ஒவ்வொன்றுமே தனித்தனி லக்ஷணமாக அமையத்தக்கது. ஆக மூன்று லக்ஷணங்கள் என்று கொள்வதே முறை. பட்டர் நியாம்யத்வத்தை மாத்திரம் சரீர லக்ஷணமாய் உபபாதித்தலின் மூன்று லக்ஷணங்கள் என்னும் பக்ஷத்தையே ஸூசிபிப்பிக்கிறதாக ந்யாய ஸித்தாஞ்ஜனத்தில்கூறப்பட்டிருக்கிறது நம்பிள்ளையும் பரமாசாரியரான பட்டரைப் பின்பற்றி தார்யத்வத்தை மாத்திரம் எடுத்து உபபாதிப்பதனல் மூன்று லக்ஷணங்கள் என்ற பக்ஷத்தையே ஸூசிப்பிக்கிறதாகக் கொள்ள இடமிருக்கிறது. ஸர்வாத்மநா சேதநனுக்குத் தார்யமான த்ரவ்யம் சரீரம் என்பது ஒரு சரீர லக்ஷணம். இந்த லக்ஷணத்துக்கு, அதி வ்யாப்தி இல்லாமையைக் காட்டுகிருர். "வ்ருக்ஷத்திலே தேவதத்தன் நின்ருனென்ருல் அங்கு சரீராத்ம பாவமில்லை. ஜாதி குணங்கள் வ்யக்தியிலே கிடந்ததென்ருல் அங்கு சரீராத்ம பாவமில்லை. விசிஷ்டத்திலேயிறே சரீராத்ம பாவமும் கொள்ளலாவது." ஸர்வாத்மநா தார்யன் அல்லாமையாலே தற்காலத்தில் மரத்தில் நிற்பவன் சரீரமாக மாட்டான். இயைபின்மைக்கு, அருகதை அற்றுக் கூடியுள்ள இடத்திலேயே அதாவது அப்ருதக் ஸித்த விசேஷண விசிஷ்டத்திலேயே சரீர ஆத்ம பாவம் கொள்வது. இனி, ஜாதி குணங்கள் வ்யக்தியிலேயே இயைபின்மைக்கு அருகதையின்றிக் கிடத்தலின் தார்யமாயினும், ஜாதி குண விசிஷ்டத்ரவ்ய மல்லாமையாலே அவையும் சரீரமாகமாட்டா. ஆக, அப்ருதக் ஸித்த விசேஷண ஸ்தலத்திலும் ஜாதி குண விசிஷ்ட த்ரவ்ய ஸ்தலத்திலுமே சரீரராத்ம பாவம் கொள்வது என்றதாயிற்று. சேதநனுடைய இயைபின்றியிருத்தல் ஆற்ருத திரவியம் சரீரம் என்பது முடிபு. விருக்ஷம் என்பது சரீரகமான சேதநன் என்றபடி. ஈசுவரனுக்குச் சரீரமாகிய ஜீவாத்மாவினிடமுள்ள த்ரவ்யமான தர்மபூத ஞானமும் ஜீவனுடைய சரீரமும் ஈசுவரனுக்குச் சரீரமாவதுபோல, வ்ருக்ஷாபிமானியான ஜீவனுக்குச் சரீரமான விருக்ஷத்திலுள்ள த்ரவ்யமான தேவதத்தன் ஜீவனுக்குச் சரீரமாகமாட்டான்; ப்ருதக் ஸ்தித்யர்ஹனுகையாலே. இது போல் வ்யக்தி என்பது வ்யக்தி சரீரக ஜீவன் என்றபடி. இங்ஙனம் சொல்லாதபோது ஆத்ம பாவமில்லை என்று அப்ரஸக்தமாய்க் கூறுவது பொருந்தாதன்ருே?

"அப்ராணி மத்ஸு ஸ்வல்பா ஸா ஸ்தாவரேஷு ததோதிகா" என்றபடி மரத்திலும் வ்யக்தியிலும் அற்பமான சைதந்யம் உண்டென்று உணர்க. நாம ரூப வ்யாகரணத்துக்கு ஜீவத்வாரா பரமாத்மாவின் அநுப்ரவேசத்தைச் சொல்லும் சுருதி இதற்கு மூலம். வேதார்த்த ஸங்க்ரஹத்தில் "தேவோ மநுஷ்யோ யக்ஷோ ராக்ஷஸ: பக்ஷீ வ்ருக்ஷோ லதா காஷ்டசிலா த்ருணம் கட: பட: இத்யாதய:.... சப்தா: லோகே தத்தத் வாக்யதயா ப்ரதீயமாந தத்தத் ஸம்ஸ்தான வஸ்து முகேந ததபிமானி ஜீவ ததந்தர் யாமி பரமாத்ம பர்யந்த ஸ்யைவ வாசகா:" என்று ஸ்வாமி அருளிச் செய்திருப்பது கொண்டும் விருக்ஷம் கடபடாதி வ்யக்திகள் இவற்றைச் சரீரமாகக் கொண்ட ஜீவர்களும் உண்டு என்பது தெளிவு. தயிர்த்தாழிக்கு மோக்ஷம் கொடுத்த வ்ருத்தாந்தம் இதனை வலியுறுத்தும்.



திருநாராயணபுரம் ஸ்ரீ செல்வப்பிள்ளை

கீழ்க்காட்டிய வேதார்த்த ஸங்க்ரஹ ஸ்ரீஸூக்திப்படி சொற்களெல்லாம் அந்தர்யாமி பர்யந்தம் சொல்லுமாகையால் ப்ரகாரியான பரப்ரம்மமே எல்லாச் சொற்களுக்கும் பொருளாதல் பற்றி தத்வம் ஒன்றே என்னலாம் படியிருக்கின்றது. ஆனால் ப்ரகார ப்ரகாரிகளினுடைய ஸ்வரூபம் வேறுபட்டவை ஆதலின் தத்வங்கள் பல என்னலாம் படியுமிருக்கின்றது. இதனையே "அசேஷ சிதசித் ப்ரகாரம் ப்ரஹ்ம ஏகமேவ தத்வம். தத்ர ப்ரகார ப்ரகாரிணோ: ப்ரகாராணாம்ச மிதோத் யந்த பேதேபி விசிஷ்டைக்யாதி விவக்ஷயா ஏகத்வ வ்யபதேச: ததிதர நிஷேதஸ்ச" என்றார் வேதாந்த தேசிகன்.

சேதநா சேதந விசிஷ்டத்துக்கு அபேதம் சொல்கிற காரணத்தினால் தான் நம் தர்சனம் விசிஷ்டாத்வைதம் என்று பேர் பெற்றது.

வேதாந்தத்தில் தேர்ச்சி பெற்றவர் தாம் நாராயணன் என்ற சொல் போன்றவையே ஏனைய சொற்களும் என்கின்ற உண்மையை யுணர்ந்து ரஸிக்க முடியும். நம்மாழ்வார், "கண்ணனைக் கூவுமாறு பொருவில் சீர்ப்பூமி என்கோ" என்கிறார். கண்ணன் என்கிறதும் பூமி என்கிறதும் ஒரே மாதிரி ரஸிக்கின்றன நம்மாழ்வாருக்கு. "அர்ஜுநன் ஹே! க்ருஷ்ண என்றத்தோடு தாம் பொருவில் சீர்ப்பூமி என்றத்தோடு வாசியற்றிருக்கிறதாயிற்று இவர்க்கு" என்பது அவ்விடத்தில் காணும் ஈட்டு ஸ்ரீஸூக்தி.

நாராயண நாமம் பரமாத்மாவைக் காட்டுவது போல ஏனைய சொற்களும் அவனையே காட்டும் முறையை வேதார்த்த ஸங்க்ரஹ ஸ்ரீஸூக்தியை அடியொற்றி நம்பிள்ளை இங்ஙனம் அருளிச் செய்கிறார் :

"விபூதியில் அவ்வோபதார்த்தங்களுக்கு வாசகமான சப்தங்கள் அசித்தையும், அசித்துக்கு அபிமானியான ஜீவனையும் காட்டுகிற கணக்கிலே ததந்தர்யாமியான பரமாத்மாவையும் காட்டி, இஸ்ஸங்காதத்துக்கு வாசகங்களாய் அவன் பக்கலிலே பர்யவஸித்திருக்கையாலே அஸாதாரண நாராயணாதி சப்தங்களோடு விபூதி வாசகமான சப்தங்களோடு வாசியற ஸர்வ சப்தங்களும் அவனையே சொல்லுகிறனவாயிருக்கிற படியையும், இவ்விபூதிதான் புறம்பாய் விஞ்சிக் காட்டுகையன்றிக்கே தோளில் தோள்மாலையோபாதி தகுதியாய் அநுபாவ்யத்திலே அந்தர்பூதமாயிருக்கிற படியையும் அநுஸந்தித்து க்ருதார்த்தராய் (ஈடு 3:4-ப்ரவேசம்)

பரமாத்மாவிடம் மேவிய குணங்கள் போன்றும் திருமேனி போன்றும், திருமாலை முதலிய அலங்காரங்கள் போன்றும் பூமி முதலிய விபூதிகளும் வேறுபட்டுத் தோன்றுவாய் இணைந்து இன்பம் தருகின்றன நம்மாழ்வார் போல்வாருக்கு. அதனால்தான்—புகழு நல்லொருவனென் கோ—என்று குணங்களுடன் விளங்கும் நிலையினையும் அடுத்து அவற்றோடக்க,—பொருவில் சீர் பூமியென்கோ—என்று விபூதிகளுடன் சேர்த்தியையும் கண்டுகந்துபாடி, இறுதியில் கூடி வண்டறையும் தண்டார்க் கொண்டல் போல் வண்ணன் தன்னை சொன்ன பாடல்—என்று மாலையும் திருமேனியுமான பகவானைத் தாம் பாடியதாக அருளிச் செய்கிறார் நம்மாழ்வார். விபூதியும், பரமாத்மாவுமாக இணைந்த நிலை, மாலையும் மேனியுமாயிசைந்த நிலை போன்று இனிக்கிறது என்பது குறிப்பு—கீழ் பரக்கச் சொன்ன விபூதியடைய தோளில் தோள் மாலையோ பாதி அவனுக்குத் தகுதியாய் இருந்தபடியைச் சொல்லுகிறது—என்பது ஈடு. (3:4:11)

விபூதிகளுமவனுடையவையாகையாலே உத்தேச்யமாகின்றன. அவற்றைத் தனியாக அனுபவியாமல் அந்தப் பரமாத்மாவின் ஸ்வரூபத்தோடுசேர்த்து ப்ரகாரமாய் ஸாமாநாதிகரண்யத்தாலே அனுபவிப்பதில் ஒப்பற்ற இன்பம் காண்கிறார்கள் பரம ரஸிகர்கள். அவனோடு சேர்ந்த குணங்கள் போலே விபூதிகளும் இவருக்கு உத்தேச்யமாயிருக்கின்றன. மணிகளையும் பொன்னையும் தனித் தனியே பார்ப்பதிலும், இணைத்து ஒரே பொருளாய்ப் பார்ப்பதில் இன்பம் அதிகமன்றோ?

இவ்விஷயத்தை நம்பிள்ளை குரலிலே கேட்போம். அது எவ்வளவு ஆநந்தமாயிருக்கிறது பாருங்கள். "அவை தன்னைக் கண்ட கண்ட இடங்களிலே அநுபவிக்கையன்றிக்கே மாணிக்கத்தையும், வயிரத்தையும், முத்தையும் ஓராரத்திலே சேர்த்து அநுபவிப்பாரைப் போலே அவற்றை அடைய அவன் பக்கலிலே சேர்த்து அநுபவிக்கிறார். இவர்க்கு அவன் குணங்களோடு விபூதியோடு வாசியின்றிக்கேயிறே இருப்பது. குணங்களுக்குப் பிரித்து ஸ்திதியாதல், உபலம்பமாதல் இல்லாதாப் போலே, விபூதிக்குமவனை யொழிய ஸ்திதியாதல், உபலம்பமாதல் இல்லாதபடியும் (ஈடு: 3:4) ப்ரவேசம்.

இனி நம்முடைய சரீரத்தில் ஜீவாத்மா இருப்பதற்கும் ஸமஸ்த சேதநாசேதநங்களில் பரமாத்மா இருப்பதற்கும் வாசியுண்டு. ஜீவாத்மா சரீரத்தில் ஓரிடத்திலே இருந்து ஞானத்தாலே சரீரமெங்கும் வியாபித்திருப்பான். பரமாத்மாவோ ஸ்வரூபத்தாலே எங்கும் வியாபித்திருப்பான். ஏனெனில் ஜீவஸ்வரூபம் அணுவானது, பரமாத்ம ஸ்வரூபம் விபுவானது. இது (1-1-10) ஈட்டின் கண் உள்ளது.

அங்கேயே மற்றொரு விஷயத்திலும் நமக்குத் தெளிவு தருகிறார் நம்பிள்ளை. ஜீவாத்மஸ்வரூபம் அணுவாகையாலே அதற்கு உட்புறம் இருத்தல் இயையாது பகுக்க முடியாத நுண்ணிய நிலை அன்றோ அணுவாயிருப்பது. எனவே இவ்வாத்மாவுக்குள்ளே பரமாத்மா வியாபித்திருப்பதென்பது கூடாத தொன்றே என்பது சிலருடைய வாதம். நம்பிள்ளை மதம் ஜீவாத்மாவுக்குள் பரமாத்மா வியாபித்திருக்கிறான் என்பதே. எல்லாம் வல்ல எம்பெருமானிடம் கூடாததொன்றுமில்லை. கூடாததும் கூடும்படியான தன்மையவனிடமுண்டு. அதுவே அகடித கடநா சக்தி எனப்படுவது. சிறிய வயிற்றில் 'ஜகந்தி யஸ்யாம் ஸவிகாஸ மாஸத" என்று மாகமஹாகவி கூறியபடி, உலகனைத்தும் நெருக்கடியின்றி அடங்கியிருந்தது மெய்யென்பர். அவ்விதம் அடக்கியவன் சிறியதிலேதான் இருக்கமாட்டானோ? இவ்வாறு நம்பிள்ளை நம்மைக் கேட்கும் போது ஆம்! இருப்பான், என்ற தெளிவு நமக்குப் பிறக்கிறதன்றோ?

தயிருண்ட பொன் வயிறு இவ்வேழுலகுமுண்டு இடமுடைத்தாம்படி அடக்கினது போல ஒவ்வொரு பொருளிலும் பரமாணுக்களிலும் உட்பட எம்பெருமான் தான் பூர்ணமாய்எழுந்தருளி மேலும்இடமுடைத்தாம்படி வியாபித்திருக்கிறான் என்கிற உண்மையும் உணர்தற்பாற்று. எம்பெருமான் ஒவ்வொரு வஸ்துவிலும் பூர்ணமாய் வியாபித்திருக்கும் நிலையை நம்பிள்ளை, விளக்கி நமக்குத் தெளிவு பிறப்பிக்குமழகு காண்க. "அவற்றிலே வ்யாபிக்குமிடத்தில் பல தூணுக்காக ஒரு உத்தரம் கிடக்கிறாற் போலன்றிக்கே, ஜாதி வ்யக்தி தோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமா போலே எல்லா வற்றிலும் தனித்தனியே குறைவற வியாபித்து நிற்கும்." (1-1-7 ஈடு)

"ஸகலேதர விஸஜாதீயம் ச்ருத்யேக ஸமதி கம்யம் ஸர்வ சக்தி யுக்தம் ப்ரஹ்ம நிரவயவமபி கார்யம்ச பவத்ய நந்தம்ச பவதீதி பரிமித சக்தி வஸ்து சோத்யம் ந தத்ர ப்ரஸஜ்யதே | யதா ஜாதி வாதினோ ஜாதிரேவாமூர்த்தா கண்ட முண்டாதிஷு அத்யந்த விலக்ஷணேஷு அநந்தேஷ்வபி பரிஸமாப்ய வர்ததே, ந தத்ர இதர வஸ்து சோத்யம் இதி ஜகத் காரணத்வம் ஸம்பவதி" என்று க்ருத்ஸ்ன ப்ரஸக்தி ஸூத்ர தீபத்தில் எம்பெருமானார் அருளிச் செய்ததை அடியொற்றி இங்ஙனம் அருளிச் செய்யப்பட்டது. ஓரிடத்தில் ஸர்வேச்வரன் இருந்தால் மற்றோரிடத்தில் பூர்ணமாக அவன் இருப்பது யாங்ஙனம்? அநந்தன் (அளவு படாதவன்) ஆகையால் மற்றோரிடத்தில் அவன் இல்லை என்னலாகாது. தூண்களில் உத்தரம்போல மற்ற இடங்களிலுமவன் ஸம்பந்தப்பட்டிருக்கிறானென்னில், நிரவயவனான அவனை ஸாவயவனாக ஒப்புக் கொள்ள நேரிடும். என்ன செய்வது? அநந்தனாகவும் வேதம் ஓதுகிறது. நிரவயவனாகவும் வேதம் ஓதுகிறது. கண் கொண்டு காண இயலாத ஸர்வேசுவரனை வேதம் கொண்டுதான் தெரிந்து கொள்ள

வேண்டியிருக்கிறது. வேத நூல் ஓதுகின்ற துண்மையல்லதில்லை. வேதப் ப்ராமாண்யத்தாலே முரண்பட்டவைகளாய்க் கருதப்படுகின்ற அநந்தனுயிருத்தலும் நிரவயவனுயிருத்தலும் ஸர்வேச்வரனிடம் முரண்பாடின்றியமைந்துள்ளன என்றுதான் கொள்ள வேண்டும். நிரவயவனுயிருந்தாலும், அநந்தனுய் இருத்தல் எல்லாம் வல்ல ஸர்வேச்வரனிடம் கூடும். ஏனைய அற்ப சக்தி படைத்த இடங்களில் பொருந்தாமை கொண்டு ஸர்வேச்வரன் விஷயத்திலும் வாதிப்பது தகாது என்பது எம்பெருமானுரின் ஸ்ரீஸூக்தியின் கருத்து. ஜீவனுக்குள் வியாபித்திருப்பது அகடித கடநா ஸாமர்த்தியத்தால் பொருந்துமென்பது போல, வஸ்துக்கள் தோறும் வியாபித்திருப்பதும் அகடித கடநா ஸாமர்த்தியத்தாலே பொருந்தும் என்றதாயிற்று.

நம்மாழ்வார் இவ்விரண்டு விஷயத்தையும் ப்ரஸ்தாவித்து இவ்வொரே சமாதானத்தை அருளிச் செய்யும் அழகு கவனிக்கத்தக்கது.

''பரந்ததண் பரவையுள் நீர்தோறும்
பரந்துளன்
பரந்தவண் டமிதென நிலவிசும் பொழிவற
கரந்தசி லிடந்தொறும் இடந்திகழ்
பொருள்தொறும்
கரந்தெங்கும் பரந்துளன் இவையுண்ட
கரனே,''

(நீர் தொறும்—ஜல பரமாணுக்கள்
தோறும்
அண்டம் இது என அண்டம் இது
என்று சொல்லும்படி

அதாவது அண்டத்திலிருப்பதுபோல சில் இடம்—அற்பமான இடம் அதாவது க்ஷேத்ர சரீரம். இடம் திகழ் பொருள் அந்த க்ஷேத்ர சரீரத்தில் ப்ரகாசிக்கிற ஆத்மாக்கள். கரந்த-கண்ணுக்குத் தெரியாத) இப் பாசுரத்தில் ஜல பரமாணுக்கள், கரந்த சில் இடம், இடம் திகழ் பொருள் இவைகளில் பெரியதோர் அண்டத்தில் நெருக்குப் படாதிருப்பது போல ஸௌகரியமாக வியாபித்திருப்பது சொல்லப்படுவதால் அந்தர் வியாப்தி கூறப்பட்டிருக்கிறது. வெளியிலிருப்பதை நெருக்கமின்றி அண்டத்திலிருப்பது போன்றதாகச் சொல்ல வேண்டியதில்லையே. ஒவ்வொரு வஸ்துவிலும் அண்டத்திலிருப்பதுபோல வியாபித்தமை கூறப்படுவதால் பூரண வியாப்தியும் பேசப்படுகிறது. வேதாந்த தேசிகனும் ரத்நாவளியில் ''ஸர்வதத் வேஷு பூர்த்தே'' என்று இப் பாசுரத்தில் பூர்ண வ்யாப்தி கூறப்படுவதாக அருளிச் செய்தமையும் காண்க. அந்தர் வ்யாப்தி பூர்ண வ்யாப்தி இரண்டுமுள்ளவன் ''இவையுண்ட கரன்'' என்னவே அகடிதகடநா ஸாமர்த்ய முடையவன் இவ்விரண்டு வகையிலும் வியாபித்திருப்பது தகும் என்றகருத்துத் தோற்றுவது காண்க. வியாப்தியில், பூர்ணத்வமாவது ஒவ்வொரு வஸ்துவிலும் ஷாட்குண்ய முடையவனுக எம்பெருமான் புத்திக்கு விஷயமாகும் தன்மை.

ஆத்மாவுக்குட் புகுந்து ஈச்வரன் நியமிக்கவில்லை என்றுல் ஆத்மா ஈசுவரனுக்குச் சரீரமாகாமற் போய்விடும். வெளி நியமநத்தைப் பொறுத்தே சரீரமாகும் என்னில் அரசனுக்கு உலகு சரீரமாக நேரிடும்.

''அந்தப்ரவிச்ய நியாம் யத்வம் ஹி சரீர
லக்ஷணம்''

உட்புக்கு, நியமிக்கப்படுதலன்றே சரீர லக்ஷணம் என்றுர் ச்ருதப்ரகாசிகாசார்யர். ப்ரமாண பலத்தாலே ஈச்வரன் மாத்திரம் உட்புகத்தக்க நிலை அணு ஸ்வரூபமான ஆத்மாவுக்கு உண்டென்று ஒப்புக்கொள்ள வேண்டும்.

"ஆத்மந: அந்தரோ யமயதி'' என்று ஆத்மாவுக்குள் நியமிப்பதாக அந்தர்யாமி, ப்ராஹ்மண சுருதி கூறுகிறது. இது இந்த சுருதி வ்யாக்யாந ச்ருத ப்ரகாசிகையில் ஸ்பஷ்டம்.

அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் ய: ப்ருதிவ்யாம்திஷ்டந் யோ அப்ஸு திஷ்டந் என்று தனித் தனியே எடுத்தோதுவது ப்ருதிவி முதலிய ஒவ்வொன்றிலும் ஈச்வரன் பரிபூர்ணமாக நியமித்துக் கொண்டு எழுந்தருளி இருப்பது தோற்றுவதற்காக என்று உபநிஷத் பாஷ்யத்தில் ஸ்ரீ ரங்கராமானுஜ ஸ்வாமி அரு

ளிச் செய்துள்ளார். பூர்ண வ்யாப்தியை ரத்நாவளியில் அருளிச் செய்ததோடு ந்யாய ஸித்தாஞ்ஜநத்திலும், வேதாந்த தேசிகன் விளக்கியுள்ளார்.

"பரந்த அண்டம் இதென" என்று ஒடுக்கமின்றிப் பரமாத்ம ஸ்வரூபம் வியாபிக்கிற ஸௌகர்யம் சொல்லப்படுவதால் வியாபிக்கப்படும் பொருளின் ஸம்பந்தத்தால் ஏற்படும் தோஷம் தட்டாமை கருதப்படுகிறது. ஜீவாத்மாவுக்கு அசித்தின் ஸம்பந்தத்தாலே ஸ்வபாவ பரிணமம் அதாவது தர்மபூத ஞானத்துக்கு ஸங்கோசம் ஏற்படுகிறது. அத்தகைய தோஷம் பரமாத்மாவுக்கு இல்லை என்றுணர்க. இதன் விளக்கத்தைத் திருவாய் மொழி 3: 4: 10 பாசுரத்திலும் அதன் ஈட்டு வியாக்யாநத்திலும் கண்டு கொள்க.

இதுகாறும் திவ்யாத்ம ஸ்வரூபத்தின் வியாப்தி கூறப்பட்டது. இனி, திவ்ய மங்கள விக்ரஹத்தின் வ்யாப்தியைப் பற்றி நம்பிள்ளை அருளிச் செய்வதைக் காண்போம். ஒரு நாள் நஞ்ஜீயர் பிள்ளானைக் கண்டு ஈச்வரனுக்கு ஸ்வரூப வ்யாப்தியேயோ உள்ளது? விக்ரஹ வியாப்தியுமுண்டோ என்று கேட்க பாஷ்யகாரர் தோற்றவருளிச் செய்து கொண்டு போந்து ஸ்வரூப வ்யாப்தியாயிருக்கும். ஆகிலும் எம்பார் ஒருநாள் —உபாஸகாநுக்ரஹார்த்தமாக ஆச்ரிதருடைய நெஞ்சிலே விக்ரஹத்தோடே வியாபித்திருக்கும்—என்று அருளிச்செய்யக் கேட்டேன்—என்று அருளிச் செய்து ஸர்வ விஷயமாக ஸ்வரூப வ்யாப்தியே உள்ளது. உபாஸகர் விஷயத்தில் அவர்கள் பக்கல் அனுக்ரஹத்தாலே அவர்கள் சுபாச்ரயமாகப் பாவித்த விக்ரஹத்தோடே எழுந்தருளி இருக்கும்: இனி ஸ்வரூப வ்யாப்திக்கு ப்ரமாணங் கண்ட இடம் ஸாமாந்ய விஷயமாகிறது. விக்ரஹ வ்யாப்திக்கு ப்ரமாணங் கண்ட இடம் விசேஷ விஷயமாகிறது என்று பணித்தாரென்று (5-5-7); (7-3-1) ஈடுகளில் காணப்படுகிறது. — அங்குஷ்ட மாத்ர: புருஷ:—என்று ச்ருதியில் உபாஸகர்களுக்கு அனுக்ரஹம் செய்யவேண்டும்—என்று ச்ருதியில் உபாஸகர்களுக்கு அனுக்ரஹம் செய்ய வேண்டும். என்பதற்காக கட்டை விரல் அளவில் திருமேனியுடன் ஈச்வரன் ஹ்ருதயத்தில் எழுந்தருளி இருப்பதாக ஓதப்படுகிறது.

பரப்ப்ரும்மத்துக்கு விக்ரஹம் கிடையாது. அது கற்பிதமே என்பது சிலர் கொள்கை. உபாஸிப்பவர்களுடைய மனம் பற்றி நிற்பதற்கேற்ப அமைந்துள்ளது திவ்யமங்கள விக்ரஹம் த்யானம் செய்யப்படுவது திருமேனியே.

—தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே
தநூம் ஸ்வாம்—

என்று பரமாத்மாவினால் அத்திருமேனியே விளக்கி அன்பருக்குக் காட்டப்படுவதாயுமுள்ளது. பலமாகக் கொடுக்கப்படுவதும் அத்திருமேனியே. 'கண்டேன் ஸீதையை' என்ற அநுமனுக்கு காகுத்தன் கொடுத்தது திருமேனியன்றோ? முக்தி நிலையிலும் ஸதா தர்சநத்துக்கு விஷயமாகும் அத்தகைய திருமேனி உண்மையானதன்று என்று அவர்கள் எங்ஙனம் கூறுகின்றனரோ! ப்ராக்ருத சரீரம் இல்லையே அன்றி, அப்ராக்ருத திவ்ய மங்கள விக்ரஹமில்லை என்னப்போமோ என்கிறார் நம்பிள்ளை. பிறகு அவர்கள் எக்கேடு கெட்டால் நமக்கென்ன? நாம் விக்ரஹமுண்டென்கிற நல்லோர் விழிபட்டோம் என்றவர் கூறும்போது உண்மையில் நமக்குப் பெருமிதம் ஏற்படுகின்றது. நம்பிள்ளையின் நல்லுரையைக் கேளுங்கள்:—புறம்புள்ளார் சொன்னபடி சொல்லுகிறார்கள். நம், ஆழ்வார்கள் போனவழி இதுக்கு (விக்ரஹத்துக்கு) மேற்பட இல்லை. இதுக்கும் உள்ளே ஒன்று (திவ்யாத்ம ஸ்வரூபம்) உண்டு என்று சொல்லுகிறவர்கள் ஸ்வரூப ஸத்பாவம் சொல்கிறார்களித்தனை. விக்ரஹமில்லை என்றான்று" இதன் பொருளைச் சிறிது விளக்குவாம்:- விக்ரஹமில்லை என்பார் என்ன வேணுமானாலும் சொல்லிவிட்டுப் போகட்டும். உண்மையைக் கண்டறிந்தவர்களான, நம்முடைய ஆழ்வார்கள் போனவழியே நமக்கு உத்தேச்யம். தத்வதர்சிகளாகையாலே அவர்கள் சொல்வதே சாஸ்திரார்த்தத்தை நிர்ணயிப்பதாய் இருக்கும். அவர்கள் பரம ப்ராப்யமாய் நிஷ்கரிஷித்தது திருமேனியே. காரார் திரு

மேனி காணுமளவும் போமவர்கள் அவர்கள். அதற்கு மேற்பட்டு ப்ராப்யம் ஒன்று மில்லை. திவ்யாத்ம ஸ்வரூபம் அதற்கு மேல் இருப்பது, பேசப்பட்டாலும் இருப்பதைப் பேசினதாகுமேயன்றி திருமேனியைவிட அது சிறந்தது என்ற காரணம் பற்றியன்று என்பதாம். திருமங்கை மன்னனை ஈசுவர விஷயத்தில் தேஹாத்மவாதி என்பர் நம் ஆசார்யர்கள்.

நம்பிள்ளையினுடைய ஆசார்யரான நஞ்ஜீயர் "ஈசுவரனுக்கு விக்ரஹமில்லை; விபூதி இல்லையென்கிறவர்கள் முன்பே ஆப்ததமரான இவர் (நம்மாழ்வார்) 'திரு உடம்பு வான்சுடர்' என்னப்பெறுவதே! ஈசுவரனுக்கு விக்ரஹமில்லை; குணமில்லை என்கிறவர்கள் பண்ணிவைக்க மாட்டாத பாபமில்லை. அவர்களை அநுவர்த்தித்து அதுகேட்க, இராதபடி பெருமாள் நமக்குப்பண்ணின உபகாரமென்! என்று ஈடு படுவாராம். 2: 5; 2 ஈடு "மயர்வற மதி நல மருளப் பெற்றவர் துவக்குண்கிற திருமேனியிறே" என்று அவ்விடத்தில் நம்பிள்ளை ஈடுபடுகிறார்.

இதனால் நம்பிள்ளைக்கு ஆழ்வார்கள் கண்ட வழியில் அசைக்க முடியாத நம்பிக்கை புலனாகின்றதன்றோ? சாஸ்திர ப்ரமாணத்தாலறிவதைப் பார்க்கிலும் முக்தர் போலக் கண்ணுற் கண்டறிவது, தெளிவாயிருக்குமன்றோ? ப்ரமாணத்தாலே காண்பவர் நம்பிள்ளை. ப்ரத்யக்ஷஸமாநாகார ஞானத்தாலே காண்பவர்கள் ஆழ்வார்கள். ஆதலின் அவர்களின் வழி நம்பத்தக்கது என்று நம்பிள்ளை நம்புகிறார். "பிரமாணத்தில் பிறக்கும், ப்ரதிபத்தி போலன்றிறே கண்ணுக்கிலக்காயிருப்பது:" என்ற (5: 9: 1) ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்க.

இதுகாறும் நம்பிள்ளை ப்ரமாணத்தாற் கண்டறிந்து கூறிய விஷயங்களை அறிந்த அளவில் விளக்கினோம். இனி, ஆழ்வார்கள் தெளியக் கண்டதையறிந்து நம்பிள்ளை நமக்களிக்கும் நன்மதப் பொருள்களை காண்போம். இதுகாறும் கூறியவை சாஸ்திரார்த்தம்; இனிக் கூறுமவைகள் சாஸ்த்ர ஸாரார்தம். முன்னர் கூறியவை வேதாந்தார்த்தம். பின்னர்க் கூறுமவை மந்திரார்த்தம். முன் சொன்னவை ப்ரம்ம ஸூத்திரத்தால் விளக்கப் பெற்றவை. பின் சொல்பவை ஆழ்வார் ஸூக்தியால் விளக்கம் பெற்றவை. முன்னதை விளக்கும் முக்கிய நூல் ஸ்ரீபாஷ்யம். பின்னதை விளக்கும் முக்கிய நூல் பகவத் விஷயமெனும் ஈடு. "இத்தால் நம் மாசார்யர்கள் ரஹஸ்யத்தில் பதத்வயத்தாலும் அருளிச் செய்து கொண்டு போருமர்த்தத்திற்கு அடி இவ்வாழ்வாராயிருக்கும் என்றதாயிற்று என்ற முதல் ஸ்ரீய:பதிப்படி ஸ்ரீஸூக்தி காண்க.

மந்திரம் ஸாரதமமான சாஸ்த்திரமெனப்படுகிறது. நமக்கு வேண்டிய ஸ்வரூப, உபாய புருஷார்த்தங்களின் உண்மை நிலையை விளக்குவதற்கென்றே வந்தது இந்த சாஸ்த்ரம். இதனையே ரஹஸ்யத்ரயம் என்ற பேரில் ஆசார்யர்கள் நமக்கு உபதேசித்து வருகிறார்கள். ஈச்வரனுக்குச் சேதநன் சரீரமாயிருத்தலின் தனக்கும் பிறர்க்குமின்றி ஈச்வரனுக்கே பரதந்திரப்பட்டிருத்தல் ஸ்வரூபத்தின் உண்மை நிலை என்க. "தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே" என்று பாரதந்த்ரிய ஸ்வரூபத்தை நிஷ்கர்ஷித்தார் நம்மாழ்வார்.

வைஷ்ணவ ஸர்வஸ்வமுமாய் ஸர்வேச்வரன் பக்கலிலே அபேக்ஷித்துப் பெறுமதாய் இவ்வாத்மாவுக்கு வகுத்ததுமான பாரதந்த்ரியத்தை அவன் பக்கலிலே அபேக்ஷிக்கிறார் என்பது அவ்விடத்திய ஈடு. சூடும் பூப் போலவும் பூசும் சாந்து போலவும் உபயோகிக்கும் ஈச்வரனுக்காகவே இருக்கவேணும். தனக்கின்பத்தைக் கருதலாகாது. சேதநன் ஆதலின் எம்பெருமான் திருமுக மலர்த்தியையே கருதிப் பணிபுரியும் தன்மையே பாரதந்த்ரியம் என்றதாயிற்று.

இனி ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தம் தனக்கேயாகக் கொள்ளும் உயர்நலமுடையவனாய் அப்பொழுதைக்கப் பொழுது ஆரா அமுதாய் விளங்கும் திருவின் மணாளனுக்கே உகந்து பணி செய்கை. இங்ஙனம் குணாநுபவ ஜநித

ப்ரீதி காரிதமான கைங்கர்யம் எம் பெருமானுடைய முகமலர்த்தி ஒன்றையே உத்தேசிக்கும். தன்போகம் உத்தேசிக்கப்படாது சேதநன் ஆதலின் தவிர்க்கவொண்ணுது நேரும் தன் போகம் எம்பெருமான் நன்கு ரஸிப்பதற்காயது என்று கருத வேண்டும். அனுபவ வேளையில் தனக்கு நேரும் இன்பத்தைக் காண்பியாது சேதநன் பொம்மை போலிருந்தால், ஈசுவரனுக்கு ரஸிக்கா தன்றே? ஆக பகவானுடைய முகோல்லாஸ மொன்றையே. உத்தேசித்த சேஷ வ்ருத்தி ஆகிற கைங்கர்யமே ஸ்வரூபாநுரூப புருஷார்த்தம் என்றதாயிற்று.

இந்தப் பாரதந்த்ரிய ஸ்வரூபத்துக்கும் புருஷார்த்த ஸ்வரூபத்துக்கும் தக்க உபாயம் இவனை உபயோகப்படுத்திக் கொள்ளும் ஈசுவரனே. அவன், என் உடம்பில் அழுக்கை நானே போக்கிக் கொள்ளேனே என்று முயலும்போது, அதாவது ஈசுவரனே ஹிதத்திற்குக் கடவன் என்று உணர்ந்து வாளாயிருக்கும் தன்மையைத்தான் ப்ரபத்தி என்கிறோம். அது உபாயமாக மாட்டாது. -எண்ணிலும் வரும் என்னினி வேண்டுவம்—என்ற இடத்து அவன் இவன் பக்கல் அப்ரதி ஷேதத்துக்கு அவஸரம் பார்த்திருந்து முகம் காட்டுவானை பின்பு இவனுக்கு ஹிதாம் சத்திற் செய்ய வேண்டுவதுண்டோ? இப்படி இருக்கிற பகவத் ஸ்வரூபத்தை புத்தி பண்ணுகையிறே இவன் ப்ரபந்நனுகை யாவது. அப்ரதிஷேதமே பேற்றுக்கு வேண்டுவது. அதுக்குப் புறம்பான யோக்யதா யோக்யதைகள் அகிஞ்சித்கரம் என்னும் ஈட்டு ஸ்ரீஸூக்திகள் கொண்டு இவ் விஷயத்தில் தெளிவு பெறுக. இந்த ஸ்ரீஸூக்திகளை அடியொற்றியே பிள்ளை லோகாசார்யர் பலத்துக்கு ஆத்ம ஞானமும் அப்ரதிஷேதமுமே வேண்டுவது— என்றருளிச் செய்தார்.

சரமபதத்தில் 'நாராயணுய) சொல்கிற பதத்துக்கு ப்ரதம பதத்தில் (ப்ரணவத்தில்) சொல்கிற ஆத்ம ஞானமும் மத்யம பதத்தில் (நம:) சொல்கிற அப்ரதிஷேதமுமே வேண்டுவது என்பது மணவாள மாமுனிகள் வியாக்யாநம்.

பேற்றுக்கு அப்ரதிஷேதமே வேண்டுவது, எனினும் பெருமாள் கடலைச் சரண் புகுகிற இடத்தில், பல நியமங்களைக் கைக்கொண்டார். அதற்குக் காரணம் அவர் ஆசார ப்ரதா நராயிருந்தமையன்றி இவை இருந்தாக வேண்டும் என்கிற நியதி அன்று. ராக்ஷஸ ஜாதியனுன விபீஷணன் நின்ற நிலையிலேயே சரண் புக்கான். ஆகையாலே ஸர்வாதிகாரம் இவ்வுபாயமென்று நம்பிள்ளை அருளிச் செய்தது ப்ரஸித்தம். வேல் வெட்டி நம்பியாருக்கு நம்பிள்ளை இங்ஙனம் அருளிச் செய்ததாக ஐதிஹ்யம் பல இடங்களிலும் காணப்படுகிறது. யாவரும் எவ் விதத்திலும் ப்ரபத்தியை அனுஷ்டிக்கலாம் என்றபடி.

அப்ரதிஷேதமே அமையுமோ பேற்றுக்கு இவனும் சில செய்ய வேண்டாவோ என்று சிலர் கேவலக்ரியா மாத்திரத்தையே பல ஸாதநமாகப் பற்றி இருப்பது பகவத் ப்ரபாவத்தை அறியாமையாலே என்க. "ஸமர்த்தே ஸர்வஜ்ஞே ஸஹஜ ஸுஹ்ருதி ஸ்வீக்ருத யதர்த்தம் கர்த்தவ்யம் நபுநரிஹ யத்கிஞ்சிதபி ந: பரே" அறிந்தால் என்றபடி இதுவே அமையும். வேறெதுவும் இதுவும் செய்ய வேண்டியதில்லை என்று தோற்றும்.

உண்மையில் ஸாதநமாகச் சொல்லத்தக்க தொன்றும் சேதநனிடம் கிடையாது. இருக்கும் எதுவும் பெரும் பேருகிய முக்திக்குத் தக்க ஸாதநமாக மாட்டாது என்பதை நம்பிள்ளை அழகாக விளக்குகிருர்:- இத்தலையில் ஏதேனு முண்டாகப் பார்த்தாலும் அத்வேஷமாதல் ஆபி முக்யமாதலிறே உள்ளது; அத்தை ஸாதநமாகச் சொல்லப் போகாதே. இத்தலையிலே பரப்பக்தி பர்யந்தமாகப் பிறந்தாலும் பேற்றின் கநத்துக்கு, இத்தை ஒரு ஸாதநமாகச் சொல்லப் போராதே, ஒருவன் ஓர் எலுமிச்சம் பழங் கொடுத்து, ராஜ்யத்தைப் பெற்ருல் இது விலையாயிராதே. ஸர்வேச்வரனடியாக வரும் பேற்றுக்கு, இத்தலையால் ஓரடி நிருபிக்கலாயிராதே. வரவாறென்

றில்லையால் வாழ்வினிதால் என்னும்படியிறே இருப்பது என்ற (1-10) ப்ரவேச ஈட்டு திவ்யஸூக்திகள் நிரந்தரம் நினைக்கத்தக்கன.

"கண்ணனல்லால் இல்லை கண்டீர்" என்ற பாசுரத்தின் வ்யாக்யாநத்தில், "பல ஸித்திக்கீடான ஸாதநமும் அவனை ஒழிய இல்லை." என்று முடிபு கட்டினார் நம்பிள்ளை. "அதபாதக பீதஸ்த்வம்" என்ற ப்ரமாணத்துக்கு வியாக்யாநம் செய்து ஸாதநாந்தரங்களைப் பாதகமாகக் காட்டி அருளினார் 5. 5; 7: ஈட்டிலே.

"யாதவங்களும் சேர் கொடேனென்று" என்ற விடத்து உன்னை யாதொரு தபஸ்ஸிலும் (உபாயாந்தரத்திலும்) புக்குக் கிலேசிக்க விடேனென்று என ரஸகநமானதொரு வியாக்யாநம் செய்து உபாயாந்தரங்களின் அநர்த்த ஹேதுத்வத்தை இங்ஙனம் காட்டுகிறார்: அம்மி துணையாக ஆறிழிகையிறே இவனை விட்டு உபாயாந்தரத்தைப் பற்றுகை என்று. ஈடு (2: 7: 3)

ஸித்தோபாயம் இதர நிரபேக்ஷமானது ஆதலின் ஸாதநாந்தரங்களை விட்டே அதனைப்பற்ற வேண்டும். விடும் முறை யாது? அதனை நிஷ்கரிக்கிறார் நம்பிள்ளை. கர்த்தவ்யங்களை அநுஷ்டிக்கும்போது உபாயபுத்தி பிறக்கிறதோ என்று துணுக்கென்ன வேண்டும்படியிருக்கும் உபேயம் (பெறும்பேறு) என்று பார்க்கும்போது, விடலாவதொன்றில்லையாய் இருக்கும். சோம்பிக் கர்த்தவ்யாம்சத்தை உபாய விரோதியாகையாலே விட்டுவிடுவது சரி அன்று. ஆக உபாய புத்தி நடையாட இடம் கொடாது கைங்கர்ய புத்தியுடன் கர்தவ்யாம்சங்களை அநுஷ்டிக்கவேண்டும். இதுவே தியாகம். இதற்கு சிஷ்டாசாரம் காட்டுகிறார் "லௌகிக ரோபாதி கர்த்தவ்யமடைய அநுஷ்டியா நிற்கச் செய்தே அவற்றில் உபாய புத்தி பண்ணாதே போரும் நம் முதலிகளுடைய யாத்திரையிருக்கும்படியிறே இது. ஈடு (5: 5: 7)

ஈச்வரன் உபாயமாய்க் காரியம் செய்வதற்கு வாத்ஸல்யம் முதலியன குணங்கள் தலையெடுக்கும்படி செய்கிற பிராட்டியின் ஸம்பந்தமும் அநுஸந்திக்கத் தக்கது. ஆச்ரயிக்கும் போது, புருஷகாரமாகப் பிராட்டியை அநுஸந்திக்க வேண்டும். உபாயத்வத்தில் அந்வயம் அவளுக்கு இல்லை. ப்ராப்யத்வத்தில் அந்வயம் உண்டு. "ஆச்ரயண வேளையோடு போக வேளையோடு வாசியற ஒரு மிதுநமே உத்தேச்யம்" என்பது நம் பிள்ளையின் ஸ்ரீஸூக்தி.

ஸ்ரீய: பதியான ஸர்வேச்வரனே உபாயமென்று பற்றுகிற ப்ரபத்திக்கு வேறு நியமங்கள் இல்லை. ஆயினும் விஷய நியமம் மாத்திரம் உள்ளது. குணபூர்த்தி உள்ள இடமே விஷயம்: பூர்த்தி உள்ளதும் அர்ச்சாவதாரத்திலே ப்ரபத்திக்கு மிகவும் தேவைப்படுவது ஸௌலப்யம். கண்டு பற்றுகைக்கு அது உடலன்றோ? ஆழ்வார்கள் பல இடங்களில் ப்ரபத்தி பண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே. "உபாயங்களில் ப்ரபத்தி போலே ஸௌலப்யங்களில் அர்ச்சாவதார ஸௌலப்யம்" என்பது நம்பிள்ளையினுடைய அருமையான ஸ்ரீஸூக்தி ஈடு (3.6) பிரவேசம். ப்ரபத்தியே நம் ஸ்வரூபத்துக்குத் தக்கது. அர்ச்சாவதார ஸௌலப்யமே நாம் பற்றுதற்கேற்றது.

நம்பிள்ளை முடிவு கட்டி நமக்குத் தரும் விஷயம் இதுவே :— ஆச்ரிதன் ஒரு உரு அமைத்தால் அதையே தனது அப்ராக்ருத திவ்யமங்கள விக்ரஹமாக அபிமானித்தெழுந்தருளி இருக்கும் எம்பெருமானே தஞ்சம். நான் அமைத்ததொரு வடிவந்தானே என்று கருதக் கூடாது. பெண்ணினத்தைச் சேர்ந்தவள்தான் தாயானாலும் அவள் செய்யும் உபகாரத்தை நேரே காண்கையாலும் சாஸ்த்திரஞ் சொல்லுகையாலுமன்றோ அவளைக் கௌரவிக்கிறது "அப்படியே ப்ராமாணிகனானவனுக்கு ஆச்ரயணீய ஸ்தலம் அர்ச்சாவதாரம் போக்கி இல்லை."

எம்பெருமான் நமக்குப்பிறக்கும் ஆபி முக்யத்தையே பார்த்துத் தன் நீர்மையினாலேயே காப்பாற்றுகிறான் எனினும்

இவனுக்கு மஹா விச்வாஸம் உண்டாக வேணும். "ஒரு சிருயை (ஓடம்) விச்வஸித்து ஆறுமாஸத்துக்கு வேண்டிய சோறும் தண்ணீரும் ஏற்றிக்கொண்டு கடலில் இழியா நின்ருன். அவ்வோபாதி விச்வாஸமாகிலும் வேண்டாவோ பகவத்விஷயத்தைப்பற்றுமவர்களுக்கு" (ஈடு 3:6:8) என்று நம் நெஞ்சை உரமேற்றி அதில் மஹா விச்வாஸத்தை ஏற்றுமதி செய்யும் நம்பிள்ளையின் திறத்தை என்னன்பது.

பகவானிடம் செலுத்துமன்பு அவனடியார்களளவும் பெருக்கெடுக்கும் இவனிடம் பகவான் புரியும் பரிவு ஸம்பந்த ஸம்பந்திகளளவும் வெள்ளமிடும்." இரண்டு தலைக்கும் ரஸமதிசயித்தால் ஸம்பந்தி ஸம்பந்திகளளவும் செல்லுமிறே (2 : 6 ப்ர) என்பது ஈடு. பகவத் ஸம்பந்தப்ரபாவத்தாலே பாகவதர்களுக்கு ஏற்றம். இன்றேல் ஒரு சேதநனனுக்கு மற்ருெரு சேதநன் உத்தேச்யனுவதெங்ஙனம்?

"ஒட்டையோடத்தோடு ஒழுகலோடமிறே (3:7 ப்ர) என்கிருர் நம்பிள்ளை." நின் திருவெட்டெழுத்து என்று அவன தான திருமந்திரத்தைக் கற்றுத்தாம் அடியவர்க்கடிமை உற்றதாக அவனையே நோக்கித் திருமங்கை மன்னன் கூறுகிருர்.

ஓர் ஐதிஹ்யம்: "உன்னளவில் நின்றவனல்லேன் என்றபோது" அவன் திருவுள்ளமென் படுகிறதோ என்று நஞ்ஜீயர் அருளிச்செய்ய (நம்) பிள்ளை 'அல்லிக் கமலக் கண்ணன்' ஆகிருன் என்றருளிச் செய்தார் என்பது (8:10:3) பெரிய திருமொழி வ்யாக்யாநத்தில் காணக்கிடக்கிறது. நீக்கமிலா அடியார் தம் அடியார் அடியார் எங்கோக்கள் என்று இவர் பாகவத சேஷத்வத்தளவிலே நின்றவாறே அவன் அல்லிக் கமலக்கண்ணன் ஆனுன், என்பது அதன் விளக்கம். இதனுல் பாகவத சேஷத்வம் பகவானுக்குப் பரம ஸந்தோஷகரமாக இருக்கும் என்பதை நம்பிள்ளை பரம ரஸமாகக் காட்டியதைக் காண்கிருேம்.

குற்றம் புரியினும் பாகவதர் திறத்து நாம் பணிந்துபோக வேண்டும். இதுவே நமக்குப் பரமோத்தமமாக நம்பிள்ளை நல்கிய நன்மதமாகும். இதனை அநுஷ்டானத்தாலும் நமக்கு நல்கி இருக்கிருர் நம்பிள்ளை. காரணமின்றிச் செவி சுடப்பேசிய தோழப்பர் விஷயத்தில் நம்பிள்ளை நடந்து கொண்டவிதம் நம் நெஞ்சை உளுக்குகிறது

இவ்வுலகிற்கு ஸ்ரீ வைஷ்ணவர்களேற்றமறிந்து ஸத்கரிக்கத் தெரியவில்லையே என்பது நம் பிள்ளை திருவுள்ளத்திலுள்ள குறைபாடு "இங்கு வைஷ்ணவர்களென்றதுவே ஹேதுவாகப் பங்கு பெருதே திரியுண்ட வைஷ்ணவர்களை அங்குள்ளார் எதிர் கொண்டு இருப்பிடங்கள் கொடுக்கிறபடி "(10-10-4 ஈடு) என்ற ஸ்ரீ ஸூக்தியில் அக்குறைபாட்டை நாம் காண்கிருேம். அக் குறைபாட்டை நீக்குவது நம் கடமை. நம் வேங்கடாசார்ய ஸ்வாமியை இம் மஹோத்ஸவ சமயத்தில் விசேஷமாக கௌரவிப்பதே நம் பிள்ளை நல்கிய நன்மதமாகும்.

நம் பிள்ளையை அறிய நஞ்ஜீயர் அல்லது பெரிய வாச்சான்பிள்ளை வர வேண்டும். அவர்கள்தான் அறிந்து பேசியிருக்கிருர்கள். "ஒருநாள் நம்பிள்ளையை ஜீயர் கோஷ்டியிலே வைத்துப் போரக் கொண்டாடியருளித் தன் சிஷ்யனைத்தான் கொண்டாட நின்ருன் என்றிராதே கிடிகோள்" கணபுரம் கைதொழும் பிள்ளையைப் பிள்ளை என்றெண்ணப் பெறுவதே என்று பங்கு சொன்னுரும் உண்டு. என்று அருளிச்செய்தார் (6-7-9) என்ற ஈட்டில் ஆசார்யரான நஞ்ஜீயர் கொண்டாடிப் பேசியதைக் கேள்விப்படுகிருேம். சிஷ்யரான பெரிய வாச்சான்பிள்ளை" முற்பட த்வயத்தைக்கேட்டு இதிஹாஸ புராணங்களையும் அதிகரித்துப் பரபக்ஷப்ரதி க்ஷேபத்துக்குடலாக ந்யாய மீமாம் ஸாதிகளும் அதிகரித்து போது போக்கும் அருளிச்செயலிலே யாம்பாடி பிள்ளையைப் போலே அதிகரிப்பிக்க வல்லவனையிறே ஒருத்தன்" என்பது (பெரியதிரு மொழி 5:8:7) வியாக்யா நத்திற் கொண்டாடிப் பேசுவதைக் காண்கிருேம்.

---

# உலகார்யன் காட்டும் உய்வுபாயம்

ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் B.A.,B.L., அட்வகேட்
(ஆசிரியர்: ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்)

லோககுரும் குருபி: ஸஹ பூர்வை:
ஜ்ஞானவிரக்தியுதம் ப்ரணிபத்ய |
தத்க்ருதஸத்க்ருதிபி: பரிவேத்யம்
மோக்ஷகதிம் ஸரஸம் ப்ரவதாமி ||

[ஜ்ஞாந வைராக்கியங்கள் நிரம்பிய பிள்ளையுலகாசிரியரைப் பூர்வாசார்யர்களோடு கூட வணங்கி, அவர் அருளிய நல்ல ரஹஸ்யக்ரந்தங்களினின்றும் ஆராய்ந்து அறியப்படும் மோக்ஷோபாயத்தைச் சுவைபடப் பேசுகிறேன்.]

இவ்வுலகிற் பிறந்த ஸம்ஸாரி சேதனன், 'பரமபதம்' என்றும், 'வைகுந்தம்' என்றும் சாஸ்திரங்களில் கோஷிக்கப்படும் அப்ராகிருதமான உலகிற்குச் சென்று, நித்யமுக்தர்களோடு கூடி நின்று பரமபுருஷனை ஸ்ரீமந் நாராயணனுக்கு ஸர்வவித கைங்கர்யங்களையும் செய்வதே "மோக்ஷம்" என்றும், "வீடு" என்றும், "உஜ்ஜீவநம்" என்றும், "உய்வு" என்றும் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தில் கூறப்படுகிறது. துன்பம் நிறைந்த இவ்வுலக வாழ்வு "ஜீவநம்" (வாழ்வு) என்றும், துன்பமற்றதாய், பேரின்பம் நிறைந்ததான அவ்வுலக வாழ்வு "உஜ்ஜீவநம்" (உயர்ந்த வாழ்வு) என்றும் கூறப்படுகிறது என்று உணரத்தக்கது. இந்த உஜ்ஜீவநத்தை அடைய உலகாரியன் காட்டும் உபாயம் யாது என்பதைச் சுருக்கமாகக் காண்போம் இங்கு.

"அய கதௌ" என்ற தாது கதியாகிற ப்ராப்யத்தை (அடையத்தக்க பொருளை) சொல்லுகிறது. 'உப' என்னும் பதம் ஸமீபம் என்னும் பொருளை உடையது இவ்விரண்டின சேர்த்தியால் உண்டான உபாய சப்தம் 'ப்ராப்யத்துக்கு ஸருபத்திலிருப்பது' அதாவது,—'ப்ராப்யத்தை அடைவிக்கும் வழியாயிருப்பது' என்னும் பொருளைத் தருகிறது.

ப்ராப்யப் பொருள்கள் "ஜீவநம்" (இவ்வுலக வாழ்வு) என்றும், "உஜ்ஜீவநம்" (மோக்ஷலோக வாழ்வு) என்றும் இருவகைப் பட்டிருக்கையாலே, உபாயங்களும் "ஜீவநோபாயம்" (இவ்வுலக வாழ்வுக்கு வழிகள்) "உஜ்ஜீவநோபாயம்" மோக்ஷலோக வாழ்வுக்கு வழிகள், என்ற இருவகைப்பட்டிருக்கின்றன. நாம் கண்ணெதிரே காணும் ஜீவநோபாயங்களை ஆராய்ந்தோமானால், உஜ்ஜீவநோபாயங்களையும் ஓரளவுக்கு உணரலாமாகையாலே, முதலில் ஜீவநோபாயங்களைப் பற்றிச் சிறது ஆராய்வோம்.

உலகில் ஜீவநோபாயமானது 'ஸித்தோபாயம்' என்றும், 'ஸாத்யோபாயம்' என்றும் இருவகைப்பட்டிருப்பதைக் காண்கிறோம். இதைச் சிறிது விவரிப்போம். ஒரு ஸ்வாமியிடம் ஒரு ப்ருத்யன் (வேலைக்காரன்) வேலை செய்கிறான். வேலை செய்யும் வேலைக்காரனுக்கு, வேலை வாங்கிக் கொள்ளும் ஸ்வாமியானவன் கூலி கொடுத்து, அவனை ரக்ஷிக்கிறான். ஆகையால் வேலைக்காரனுக்கு ஸ்வாமி ஜீவநோபாயமாகிறான். இந்த ஸ்வாமியானவன், வேலைக்காரனால் ஸாதிக்கப்படாதவனாய், ஏற்கனவே ஸித்தனாயிருப்பதால், ஸித்தோபாயம் எனப்படுகிறான். 'பலப்ரதன்' (கூலியாகிற பலனை அளிப்பவன்) என்றும் கூறப்படுகிறான். ஸ்வாமியானவன் வேலைக்காரனை ரக்ஷிக்கும்போது வேலை செய்தால்தான் வேலைக்குத் தக்க கூலி கொடுத்து ரக்ஷிக்கிறான். வேலை செய்யாவிட்டால் அவனை ரக்ஷிப்பதில்லை. ஆக, இவ்வண்ணமாகக் கூலி வாங்கிக் கொடுத்து வேலைக்காரனுக்கு ரக்ஷணத்தைச் செய்வது அவனுடைய வேலையே என்று அந்வயவ்யதிரேகங்களாலே அறி

கிரேமமாகையாலே, வேலேயும் ப்ருத்ய னுக்கு ஜீவநோபாயமாகிறது. இந்த வேலேயானது ஏற்கனவே ஸித்தமாயிரா மல் வேலேக்காரனால் ஸாதிக்கப்படுவதா யிருக்கையாலே, 'ஸாத்யோபாயம்' எனப் படுகிறது. பலருக்குக் கூலிகொடுக்கும் பொதுக்காரண ஸ்வாமியைப் போலல் லாமல், இந்த வேலேக்காரனுக்குக் கூலி யாகிற பலனை ஸாதித்துக் கொடுக்கும் அஸாதாரண காரணமாய் (தனிக் காரணமாய்) இருப்பதால் 'பலகரணம்' (பல னுக்குத் தனிக் காரணம்) என்றும் கூறப் படுகிறது.

பக்தியோகம் முதலான உபாயாந் தரங்களுக்குப் பரம புருஷன் பலனளிக் கும்போது முற்கூறிய ஸ்வாமிக்கும் வேலேக்காரனுக்கும் உள்ள தொடர்பே காணப்படுகிறது. வேலேக்காரன் தான் செய்யும் வேலே தனக்கு உபாயமாக (பல கரணமாக) ஆகிறது என்னும் நினை வுடன் அவ்வேலேயைச் செய்வது போலே, உபாயாந்தர நிஷ்டர்கள் தாம் அநுஷ்டிக்கும் உபாயாந்தரம் எம்பெரு மானிடமிருந்து தாம் தாம் விரும்பும் பலனை ஸாதித்துக் கொடுக்கும் என்னும் நினைவுடன் அவ்வுபாயாந்தரத்தை அனுஷ்டிக்கிருர்கள். வேலேக்காரன் வேலேயைப் பத்தும் பத்தாக (பரிபூர்ண மாக) அனுஷ்டித்த பின்பே ஸ்வாமியான வன் வேலேயின் அளவுக்குத் தக்கபடி கூலி கொடுப்பதுபோலே, எம்பெருமா னும் இவ்வுபாயாந்தர நிஷ்டர்கள் உபா யாந்தரங்களேப் பத்தும் பத்தாக அனுஷ் டித்தபின்பே பலனேக் கொடுக்கிருன். ஆகையால் எம்பெருமான் உபாயாந்தர நிஷ்டர்களுக்கு ஸித்தோபாயமான பலப்ரதனுகிருன். அவர்கள் அனுஷ்டிக் கும் உபாயாந்தரமானது ஸாத்யோபாய மான பலகரணமாகிறது. இவ்வுபாயாந் தர நிஷ்டர்களும், இவ்வுலகப் பலன் களாகிற ஜீவனத்தை விரும்புகிறவர்கள் என்றும், மோக்ஷலோகப் பலனுகிற உஜ் ஜீவனத்தை விரும்புகிறவர்கள் என்றும் இருவகைப்படுவர். திருநாம ஸங்கீர்த் தனம் முதலான உபாயாந்தரங்கள் ஜீவ நோபாயமாம்போது பெறுவிக்கும் பலன் களான வஸ்திரம் முதலானவை க்ஷுத்ர பலன்களேயாகையாலே, அப்பலங்க ளுக்கு ஸமமாகவும், மேலாகவுங்கூட உள்ள உபாயங்களாகின்றன. அவ் வுபாயாந்தரங்கள் உஜ்ஜீவநோபாய மாம்போது பெறுவிக்கும் பலமான மோக்ஷமானது எல்லேயற்ற சிறப்பை யுடையதாயிருக்கையாலே, அப்பலத் துக்கு ஸத்ருசமல்லாத உபாயங்களா கின்றன; அதாவது வியாஜ மாத்திரமே யாகின்றன வென்றபடி.

உலகில் ஜீவநோபாயம் 'ஸித்தோபா யம்' என்றும், 'ஸாத்யோபாயம்' என் றும் இருவகைப்பட்டிருப்பதாகச் சொன் னேம். சிலருக்கு ஸித்தோபாயமே ஸாத் யோபாயத்தின் பொறுப்பையும் ஏற்றுக் கொள்வதை உலகில் காண்கிறேம். அதாவது,—பலப்ரதனே பலகரணமாவ தைக் காண்கிறேம். இதையும் ஒரு திருஷ்டாந்தங்கொண்டு தெளிவாக அறியலாம். ஒரு குடும்பத் தலேவன் தன் குடும்பத்தினரை ரக்ஷிக்கும்போது, அவர்களிடம் ஒரு வேலேயை எதிர் பார்த்து ரக்ஷிப்பதில்லே. உதாரணமாக, உத்தமனை ஒரு தந்தை தன் மகனே ரக்ஷிக்கும்போது மகனிடமிருந்து ஒரு கைம்மாறை (பிரதிப் பிரயோஜனத்தை) எதிர்பார்த்து அவனே ரக்ஷிப்பதில்லே. தனக்கும் அவனுக்குமுள்ள உறவையே பார்த்து ரக்ஷிக்கிருன். மகனும், முற் கூறிய வேலேக்காரனேப்போலே, தான் செய்யும் வேலேக்காகத் தந்தை தன்னேக் காப்பாற்றுவதாக நினேப்பதில்லே. வேலே ஏதாவது செய்தாலும், 'உறவுடையவ ரான தந்தைக்கு நாம் செய்யவேண்டிய கடமையிது' என்று கைங்கர்ய புத்தி யுடனே செய்கிருன். இவ்விடத்தில் பலப்ரதனை தந்தை பலகரணமாகவு மாகிருன் என்று அறிகிறேம்.

சரணுகதி எனப்படும் ப்ரபத்தியால் பிரீதியடைந்து பரமபுருஷன் பலங் கொடுக்கும்போது, முற்கூறிய தந்தைக் கும் தனயனுக்குமுள்ள தொடர்பே காணப்படுகிறது. தனயன் தான் தந் தைக்குச் செய்யும் வேலேகளே உபாயமாக எண்ணுமல் கைங்கர்யமாகவே எண்ணு வதுபோல், ப்ரபன்னனும் பரமபுருஷ னுக்குத் தான் செய்யும் ஆராதனங்களே உபாயமாக எண்ணுமல் கைங்கர்யமா கவே எண்ணுகிருன். உத்தமனை

தந்தை, தனயன் செய்யும் கைங்கர்யங்களைப் பார்த்து அவைகளுக்காக அவனை ரக்ஷிக்காமல் தனக்கும் அவனுக்குமுள்ள உறவையே பார்த்து ரக்ஷிப்பதுபோல் எம்பெருமானும் தனக்கும் ப்ரபன்னனுக்குமுள்ள உறவையே பார்த்து ரக்ஷிக்கிருன். ஆகையால், தந்தை தனயனுக்குபோலே, பகவான் ப்ரபன்னனுக்கும் பல ப்ரதனுகவும் பலகரணமாகவுமாகிருன். உபாயாந்தர நிஷ்டர்களைப் போலே ப்ரபன்னர்களும் ஜீவனத்தை விரும்புகிறவர்களென்றும், உஜ்ஜீவனத்தை விரும்புகிறவர்களென்றும் இருவகைப்படுவர். இருவர்க்கும் பகவானே பலப்ரதனுகவும் பலகரணமாகவுமாகிருன்.

உத்தமனுன தந்தையாயிருந்தபோதிலும், தன்னேடு உறவை முறித்துக் கொண்டு அவ்வுறவைப்பற்றிய அறிவில்லாமல் திரியும் தனயனையும், 'தனக்குத்தானே ரக்ஷகன்' என நினைத்துத் தன் முயற்சியிலே ஊன்றித் திரியும் தனயனையும் தானே உபாயமாகி ரக்ஷிப்பதில்லை. அதுபோலவே ஸர்வலோக பிதாவான நாராயணனும், தன்னேடு இயற்கையிலேயே உள்ள உறவை உணராமலிருக்கும் ஸம்ஸாரிகளையும், ரக்ஷணத்துக்குத் தாம் முயலும் உபாயாந்தர நிஷ்டர்களையும் தானே உபாயமாய் நின்று உஜ்ஜீவிக்கச் செய்வதில்லை. 'ஸர்வேச்வரனுக்கே உடைமையாகவும் அவனுலேயே ரக்ஷிக்கத் தக்கவனுகவுமிருக்கிறேன் அடியேன்' என்னும் அறிவுடைய ப்ரபன்னனையே தானே உபாயமாய் நின்று உஜ்ஜீவிக்கச் செய்கிருன். தனயனுக்குத் தந்தையோடுள்ள உறவுபற்றிய அறிவானது அதிகார விசேஷணமாய், தனயனின் ஸ்வரூபத்தில் சேர்ந்திருக்கையாலே அதை உபாயமென்பதில்லை. அதுபோலவே ப்ரபன்னனுக்கு எம்பெருமானேடுள்ள ஸம்பந்தத்தைபபற்றிய அறிவும் அது காரணமாக வரும் ரக்ஷ்யத்வாநுமதியும், எம்பெருமான் செய்யும் ரக்ஷணத்தை விலக்காமையும் அதிகாரி விசேஷணமாய் ஸ்வரூபத்திற் சேர்ந்திருக்கின்றன. இந்த ஸம்பந்த ஜ்ஞானமே ப்ரபத்தியாகும். ஸ்ருஷ்டி அவதாரம் முதலான பகவானுடைய முயற்சிகளாலேயே இதுவும் இச்சேதனனுக்கு விளைந்ததாகையாலே, 'அவனே நமக்கு ரக்ஷேபாயம்' என்னும் நினைவாயிருக்கும். இதை உபாயமாக நினைப்பது தந்தையிடம் தனயன் 'என்னை நீ ரக்ஷிக்கவேணும்' என்று எழுத்துவாங்குவதை ஒக்கும். தான் அவனைப் பற்றுவது ஸர்வ முக்திப்ரஸங்க பரிஹாரத்தின் பொருட்டும், புத்தி ஸமாதானத்தின் பொருட்டும், சைதந்யகார்ய மாகவும், ராகப்ராப்தமாகவும், ஸ்வரூபநிஷ்டமாகவும், விலக்காமையைக் காட்டுவதாகவுமேயிருக்கிறதேயொழிய உபாயமாயிருப்பதில்லையென்றும், தன்னுடைய ஸ்வீகாரம் இல்லாவிடிலும் அவன் கார்யம் செய்வான் என்றும் இவன் நினைக்கவேண்டும்.

மகனிடம் உள்ள தோஷங்களைக் கண்டு தந்தை சீறும்போது, தாயானவள் சிபாரிசு செய்து தகப்பனுடைய சீற்றத்தை ஆற்றித் தனயனை ரக்ஷிக்கச் செய்கிருள். அப்படியே ஸர்வலோக மாதாவான பெரிய பிராட்டியார், புருஷகாரமாய் நின்று, இவனிடமுள்ள தோஷங்கண்டு சீற்றமடையும் ஸர்வேச்வரனுடைய சீற்றத்தை ஆற்றிப்ரபன்னனை ரக்ஷிக்கும்படி செய்கிருர். உலகில் தாய் பிரியத்தைநேரே செய்பவளாகவும் ஹிதத்தைத் தந்தையைக் கொண்டு செய்விப்பவளாகவுமிருப்பது போலே, ப்ரபன்னனுக்கு ஐச்வர்யாதிகளைத்தான் நேரே கொடுப்பவராகவும், மோக்ஷத்தை எம்பெருமானிடம் புருஷகாரம் செய்து கொடுப்பிப்பவராகவுமிருக்கிருர் பெரிய பிராட்டியார்; மோக்ஷப்ரதான ஸங்கல்பத்தை ஹிதபரனுன ஸர்வேச்வரன் ஸஹாயாந்தர நிரபேக்ஷனுகத் தானே செய்கிருன். தாயினுல் சிபாரிசுசெய்து சேரவிடப் பெற்றபின் தந்தையானவன் தனயனிடமுள்ள தோஷங்களைக்கண்டுவெறுக்காமல், அவற்றையே பச்சையாக ஏற்றுக்கொள்ளுவதற்குறுப்பான உபஹாரமாகக் கொள்ளுவது போலே, பெரிய பிராட்டியாரால் புருஷகாரம் செய்யப்பெற்ற சேதனரிடம் அநாதிவாஸனையாலுள்ள தோஷங்களையும் பச்சையாகக் கொள்ளுகிருன் பக்தவ,

ஸலனை பரமபுருஷன். ஆகையாலே, ஸ்ரீய:பதியான அவனையொழியத் தான் தனக்கு நன்மையைத் தேடிக் கொள்ளுகையானது, கைக்குழந்தையைத்தந்தையர் கையிலிருந்து வாங்கிக் கொலைபுரியும் ஆட்டுவாணியன் (கசாப்புக் கடைக்காரன்) கையிலே கொடுப்பதைப் போன்றது.

உத்தமனை குடும்பத் தலைவனைவன் மனைவி முதலான தன் குடும்பத்தினரை ரக்ஷிப்பதோடன்றியில், அவர்களுடைய உறவினர்களையும் ரக்ஷிக்கிருன். அவ்வுறவினர் தன்னிடம் ஈடுபாடற்றவர்களாயினும், தன் மனைவி முதலானுரிடம் அவர்களுக்குள்ள ஈடுபாட்டைக் கண்டு அவர்களை ரக்ஷிக்கிருன். தன் மனைவி முதலானுரிடமும் அவர்களுக்கு ஈடுபாடில்லாவிடிலும் மனைவி முதலானுர்க்கு அவர்களிடம் இருக்கும் அபிமானத்தையும் உறவையும் பார்த்தே ரக்ஷிக்கிருன். இவ்வண்ணமாகவே ஸர்வேச்வரனும், தன்னிடம் ஈடுபட்டவர்களாய், பரமஸாத்விகர்களாய், ப்ரபன்னர்களில் தலைவர்களாயிருக்கும் ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமியைப் போன்ற பரம பாகவதர்களிடமும், ஆசாரியர்களிடமும் ஈடுபட்டவர்களையும் ரக்ஷிக்கிருன். இவர்களுடைய நிலை பாகவதநிஷ்டை என்றும், ஆசார்யநிஷ்டை என்றும் கூறப்படுகிறது. அந்தப் பரம பாகவதர்களிடமும், ஆசார்யர்களிடமும் உண்மையான ஈடுபாடில்லாவிடிலும், அவர்களுடைய அபிமானத்துக்கு விஷயமாயிருக்கும் நம்மைப் போன்றவர்களையும் ரக்ஷிக்கிருன். அதனாலேயே, பிரபத்தி நிஷ்டைக்குரிய மஹாவிச்வாஸாதிகளும், பரமபாகவதர்களிடமும், ஆசார்யர்களிடமும் உண்மையான ஈடுபாடுமற்ற நமக்கு பாகவதாபிமானமும், ஆசார்யாபிமானமுமே உத்தாரகமாகின்றன. குடும்பத் தலைவன் தன்னை அவமதிப்பவர்களைக் காட்டிலும் தன் மனைவி முதலானவர்களை அவமதிப்பவர்களையே மிகவும் வெறுக்கிருன். அவ்வண்ணமே ஸர்வேச்வரனும் தன் விரோதிகளைக் காட்டிலும் தன் அடியார்களுக்கு விரோதம் செய்பவர்களையே மிகவும் வெறுக்கிருன். குடும்பத் தலைவன் தன் உறவினர்களுக்குவேண்டியவர்களைத் தானே பலகரணமாகவும், பலப்ரதனைகவும் நின்று ரக்ஷிப்பதுபோல, பாகவத நிஷ்டர்களுக்கும், ஆசார்யநிஷ்டர்களுக்கும், பாகவதர் களுடையவும், ஆசார்யர் களுடையவும் அபிமானத்துக்குப் பாத்திரமானவர்களுக்கும் பலகரணமாகவும், பலப்ரதனைகவும் நின்று ரக்ஷிப்பவன் ஜகத்குடும்பியான ஸர்வேச்வரனேயாகையாலே, பாகவத நிஷ்டை முதலானவையும் ப்ரபத்திநிஷ்டையின் வகைகளாகவே கருதப்படும். ஆக, ஒரு குடும்பத் தலைவனிடம் குடும்பத்தினர் இருக்க வேண்டிய நிலைபோன்ற ப்ரபத்தி நிஷ்டையானது, எஜமானனிடம்வேலைக்காரன் இருக்க வேண்டிய நிலைபோன்ற உபாயாந்தர நிஷ்டையைக் காட்டிலும் மிகச் சிறந்தது என்று விளங்குகிறது.

உபாயாந்தரநிஷ்டையைக்காட்டிலும், ப்ரபத்திநிஷ்டை பல வகைகளில் சிறந்தது. அவ்வகைகளைக் காண்போம் இனி :—

(1) ஆழ்வார்களாலும், ஆசார்யர்களாலும் விரும்பப்பட்டது ப்ரபத்தி நிஷ்டையேயாகும். உபாயாந்தர நிஷ்டையை எந்த ஆழ்வாரும், ஆசார்யரும் விரும்பவில்லை. அவர்களிடமுள்ள பக்தி, கர்மம், திருநாமஸங்கீர்த்தனம் முதலானவையெல்லாம் ஸ்வயம் பிரயோஜனமாகவும், கைங்கர்ய ரூபமாகவும் காணப்படுகின்றனவேயொழிய, உபாய புத்தியுடன் அனுஷ்டிக்கப்பட்டவையாகக் காணப்படவில்லை.

(2) ப்ரபத்தியானது ஸ்த்ரீசூத்ராதிகளையுள்ளிட்ட அனைவரையும் உய்விக்க வல்லது; கர்மஜ்ஞாந பக்திகளாகிற உபாயாந்தரங்கள் முதல் மூன்று வருணத்தைச் சேர்ந்த புருஷர்களையே உய்விக்க வல்லவை.

(3) ப்ரபத்தியானது விஷய நியமம் தவிர வேறு எந்த நியமத்தையும் எதிர்பாராதது; கர்மஜ்ஞாந பக்திகளான உபாயாந்தரங்கள் தேசநியமம், கால நியமம், ப்ரகார நியமம் முதலான நியமங்களை அபேக்ஷிப்பவை.

(4) ப்ரபத்திநிஷ்டர்களுக்கு ஸஞ்சித கர்மத்தையும், இந்த ஜன்மத்தில் அனுபவிக்க வேண்டிய ப்ராரப்தகர்மம்

தவிர்த்த மற்ற ப்ராரப்தகர்மப்பகுதியை
யும் எம்பெருமான் கழித்துவிடுகிறானா
கையாலே, இந்த ஜன்மத்தின் முடிவி
லேயே மோக்ஷம் உண்டு என்பது நிச்
சயம். ஸம்ஸாரத்தில் அடிக்கொதிப்பா
லும், பகவத் விஷயத்தைவிரைவில் பெற
வேண்டும் என்னும் த்வரையாலும்
மேலான ஆர்த்தியோடுசரணம்புகுகின்ற
ஆர்த்த ப்ரபன்னர்களுக்கு ஆர்த்தியின்
கனத்துக்குத் தக்கவாறு, இந்த ஜன்
மத்தில் அனுபவிக்கவேண்டிய ப்ராரப்த
கர்மத்திலும் பெரும்பகுதியைக் கழித்து,
விரைவிலேயே மோக்ஷத்தைக்கொடுத்து
விடுகிறான் பரமபுருஷன். பக்தி முத
லான உபாயாந்தரங்களைப் பற்றினவர்
ளுக்கோவெனில் ஸஞ்சிதகர்மத்தைமாத்
திரமே கழிக்கிறான். ப்ராப்தகர்மம் பத்
தெட்டு ஜன்மங்களிலேயே முடியுமதா
யிருந்தால், அத்தனை ஜன்மங்களையும்
இவன் எடுத்தேதீரவேண்டும். பிராரப்த
கர்மம் எந்த ஜன்மத்தில் முடிகிறதோ,
அந்த ஜன்மத்தில் தான் இவனுக்கு
அந்திமஸ்ம்ருதி பர்யந்தமான உபாயா
நுஷ்டானம் நிறைவடையும். அப்போது
தான் இவனுக்கு மோக்ஷம் கிடைக்கும்.

(5) ப்ரபத்திநிஷ்டனுக்கு சரீரம் முடி
யும்போது பரம புருஷனைப் பற்றிய
நினைவு (அந்திம ஸ்ம்ருதி) இருந்தால்
தான் மோக்ஷம் என்னும் நியமமில்லை.
உபாயாந்தர நிஷ்டனுக்கு அந்த நியமம்
உண்டு.

(6) ப்ரபன்னனுக்கு உபாயமாகும் பரம
புருஷன் பரம சேதனனாய், எற்கனவே
ஸித்தனாயிருப்பவன்; (ப்ரபத்தியாகிற
அதிகாரி விசேஷணத்தோடு கூடியிருப்
பவர்களையே ரக்ஷிப்பேன் என்னும் நியம
முடையவனாகையாலே ஸித்தஸாதன
தோஷமில்லை) உபாயாந்தரங்கள் அசே
தனமாய், நிஷ்டர்களுக்குப் பலகரணோ
பாயமான உபாயாந்தரங்கள் அசேதன
மாய், ஸாத்யமாயிருப்பவை.

(7) பகவானுடைய ரக்ஷணப்ரவ்ருத்
திக்குத் தடையான தன் முயற்சியை
விடுகையேயான சரணாகதி செயற்கெளி
யது; ப்ரபலமான வ்யாபாரங்களால்
ஸாதிக்கவேண்டிய உபாயாந்தரங்கள்
அனுஷ்டிக்க அரியவை.

(8) ப்ரபன்னனுக்கு உபாயமாகும்
பரம புருஷன் மற்றொன்றைத் தனக்குத்
துணையாயிருக்கப் பொறாதவன்; (ஸஹா
யாந்தர நிரபேக்ஷன்). பக்தி முதலான
உபாயாந்தரங்கள் கர்மயோகம்,ஜ்ஞான
யோகம் முதலான பல அங்கங்களை
அபேக்ஷிக்கின்றன.

(9) ப்ரபன்னனுக்கு உபாயமான பரம
புருஷனுக்குள்ள உபாயத்வம் இயற்கை
யானது; உபாயாந்தரங்களுக்குள்ள
உபாயத்வம் பரம புருஷனின் இச்சை
யாலே செயற்கையாய் ஏற்பட்டது.
இதைக் கருதியே, "தன்னால் வரும்
நன்மை விலைப்பால்போலே; அவனால்
வரும் நன்மை முலைப்பால்போலே"
என்று பிள்ளான் அருளிச் செய்வராம்.

(10) அசேதனப் பொருளைப்போலே
ஸர்வேச்வரனுக்குப் பரதந்திரமான
ஆத்மவஸ்துவுக்கு, பகவத் ப்ரவ்ருத்திக்
குத் தடையான தன் முயற்சியனைத்தை
யும் விட்டு அவன் கையையே பார்த்திருக்
கையான ப்ரபத்திநிஷ்டை ஸ்வரூபாநு
ரூபமானது; தன் முயற்சியில் இழிகை
யான உபாயாந்தரம் ஸ்வரூபத்திற்குத்
தகாதது. ஸ்வயம்பிரயோஜனமான பர்த்
தாவின் யோகத்துக்கு விலை பேசும் குல
மகளின் செய்கை போன்றது.

(11) பசுவைப் புல்லைக்காட்டி அழைத்
துப் புல்லையிடுமிடத்திற்போலே ப்ரபன்
னனுக்கு உபாயமானது ப்ராப்யத்திலும்
வேறுபடாததாய், பாலே மருந்தாமாப்
போலே, பரமபோக்யமாயிருப்பது. உபா
யாந்தரநிஷ்டனுக்கு உபாயம் ப்ராப்யத்
தைக்காட்டிலும் வேறுபட்டதாய், செயற்
கரிதாயிருக்கையாலே வியாதி தீருவதற்
குக் குடிக்கும் கசப்பு மருந்து போன்றது.
உண்மையை ஆராயப்புகில், இதை மருந்
தென்று சொல்லுவதற்குமில்லை. குழந்
தைகளுக்கு வாய் ருசிப்பதற்காக மாதா
பிதாக்கள் மருந்தோடு சேர்த்துக்
கொடுக்கும் அனுபானம் போன்றதே
யிது. ஸம்ஸார மஹா வியாதியைத்
தீர்க்கும் நச்சுமாமருந்தான எம்பெரு
மானை, தன் முயற்சியைக் கைவிட்டு
மருந்தாகக் கொள்ளும்படி உபதேசித்
தால், அநாதியாயுள்ள ஸ்வயத்ந வாச
னையாலே அதுக்கு இசையாத சேதன

ரையும் விடமாட்டாமல், அவர்கள் விரும்பும் ஸ்வயத்நரூபமாயிருக்கும் உபாயாந்தரமான அனுபானத்தோடு, அதுக்குப் பல ப்ரதனக ஈச்வரனுகிற மருந்தைக் கலந்து ஆயிரம் தாய் தந்தையரைக் காட்டிலும் வாத்ஸல்யம் மிக்க சாஸ்திரம் உபாயாந்தர நிஷ்டர்களுக்கு விதிக்கிறது. குழந்தைகளுக்கு அனுபானம் வியாதியைத் தீர்ப்பதில்லை. மருந்தே வியாதியைத் தீர்க்கிறது. அதுபோலே உபாயாந்தர நிஷ்டர்களுக்கு ஸாத்யமான உபாயாந்தரம் ஸம்ஸார மஹா வியாதியைத் தீர்ப்பதில்லை. ஸித்தோபாயமான ஈச்வரனே அந்த வியாதியைத் தீர்க்கிருன். வாத்ஸல்யம் மிக்க சாஸ்திரமானது, சேதனரனைவரும் படிப்படியாக முன்னேறி உய்வு பெறவேணுமென்னும் கருத்தாலே, பலவிதமான ஸத்வாதி குணச் சேர்த்தியையும், அதுகாரணமாக ஏற்படும். பலவிதமான மனப்பக்குவத்தையுமுடைய பலவிதமான அதிகாரிகளுக்குத் தக்கபடி பல புருஷார்த்தங்களையும், அவற்றுக்குரிய ஸாதனங்களையும் உபதேசிக்கிறது. தமோகுணம் மிக்கவர்களாய், நாஸ்திகராயிருக்கும் அதிகாரிகளுக்கு ஆஸ்திக்யம் உண்டாவதற்காக, விரோதிகளை அழிக்கவல்ல ச்யேநயாகத்தை விதிக்கிறது. ஆஸ்திக்யமுண்டாகி ரஜோகுணம் மிக்கவர்களைக் குறித்து, அவர்கள் விரும்பும் ஸ்வர்க்கம் முதலான புருஷார்த்தங்களையும், அவற்றுக்கு ஸாதனமான காம்யகர்மங்களையும் உபதேசிக்கிறது. ஆஸ்திகர்களில் சிறந்தவர்களாய், ஸத்வ குணம் மிக்கவர்களாய், ஸ்வாதந்திரியமும், அந்ய சேஷத்வமும் நீங்கப்பெற்று, பகவச்சேஷத்வத்தில் ஊன்றக்கூடியவர்களைக் குறித்து மோக்ஷ புருஷார்த்தத்தையும், அதற்கு ஸாதனமாக உபாயாந்தரங்களையும் உபதேசிக்கிறது. ஆஸ்திகர்களில் தலைசிறந்தவர்களாய், பரம ஸத்வ நிஷ்டர்களாய், பாரதந்த்ரியஜ்ஞானம் பிறந்து பரப்பனை பகவான் ஒருவனையே உபாயமாகக் கொள்ளக்கூடிய மிகச் சிறந்த பரிபக்குவ நிலையை அடைந்த பரமைகாந்திகளுக்கு அவனையே பலகரணமாகவும் விதிக்கிறது.

ஆகவிப்படிப் பலவிதங்களிலும் உபாயாந்தரங்களைக் காட்டிலும் சிறப்புற்றிருக்கும் ஸித்தோபாயத்தைப் பற்றி நிற்கும் ப்ரபன்னர்க்கு உபாயாந்தரங்கள் அபாயமாகவேயிருக்கும். இவ்வுபாயாந்தரங்களான நெறிகளை (வழிகளை) ஸர்வேச்வரனே உபதேசித்தபோதிலும், தமயந்தியைக் கைவிட்டுப் போவதற்காக அவளுக்கு நளன் காட்டிய வழிகளைப்போலே, தன்னை விட்டு நீங்குவதற்கு அவன் காட்டிய வழிகளாகவே அவையிருக்கும் என்று "நெறி காட்டி நீக்குதியோ" (பெரிய திருவந்.) என்று தொடங்கும் பாசுரத்திலே அருளிச் செய்தார் ஆழ்வார். "[illegible]" என்று ஜிதந்தையில் உபாயாந்தரங்களைக் கண்டு எனக்குப் பெரும் பயமுள்ளது என் கையாலே, ஞானிகளுக்கு இவை பயத்தை விளைவிப்பவை; "மா சுச:" என்று கீதாசரமச்லோகத்தில் கண்ணன் 'உபாயாந்தரங்களைக் கண்டு சோகமடையாதே என்று கூறுகையாலே, இவை சோகத்தை விளைப்பவை. இதனாலேயே லக்ஷ்மீதந்த்ரத்தில் ப்ரபன்னனுக்கு அபாயப்ரவருத்திகள் ஏற்பட்டதுபோலே, உபாயாந்தர ப்ரவ்ருத்திகள் ஏற்பட்டபோதும் புந: ப்ரபத்தியாகிற பிராயச்சித்தம் விதிக்கப்பட்டது. இதனாலேயே, "பொன்னாலேயேயான ஒரு குடத்திலே பரமபாவனமான தீர்த்தத்தை நிறைத்து வைத்து, அதில் ஒரு துளி கள்ளைக் கலந்தது போலேயிருப்பது அஹங்காரத்தோடு கலந்த உபாயாந்தரம்" என்று திருக்குருகைப்பிரான் பிள்ளான் அருளிச் செய்வராம். ஒரு சோழியைக் கொடுத்து ஓர் இரத்தினத்தைப் பெறுவது போலும் ஓர் எலுமிச்சம் பழத்தைக் கொடுத்து ஓர் இராச்சியத்தைப் பெறுவதுபோலும் இருக்கிறது உபாயாந்தரங்களைக்கொண்டு மோக்ஷத்தைப் பெறுவது. உண்மையில் இவ்வுபாயாந்தரமும் இவனால் வந்ததில்லை. அவனுடைய ஸ்ருஷ்டி அவதாரம் முதலான முயற்சிகளின் பலனுகவே இவனுக்கு வந்தது. ஆகையால், அவனால் வந்த இதை அவனிடமே மோக்ஷத்திற்கு விலையாக (உபாயமாக) கொடுப்பது தகாது. 'உபநயனத்தில் கோதான வ்ரதத்தின் போது, தந்தைக்கு பிள்ளை தக்ஷிணை கொடுப்பது போலே கொடுக்கலாமே' எனில், அவனுடையது என்று அறிந்து

கொடுத்தானாகில் அபாயமாகாது. அவனுடையது என்று அறியாமல் தன்னுடையது என நினைத்துக் கொடுத்தானாகில், அவனுடையதையே திருடி அவனிடமே கொடுப்பதை ஒக்கும்.

ஸர்வேச்வரன் ப்ரபன்னனுக்குப் பலகரணமாகவும், பலப்ரதனாகவும் உபாயமாம்போது, நிரபேக்ஷமான உபாயமாய், வேறெந்தச் சேதனனையும் உபாயமாக அபேக்ஷிக்காமையாலும், பல ப்ரதான வேளையில் பிராட்டி செய்வதொரு கார்யமில்லாமையாலும், அப்பெரிய பிராட்டியாரும் புருஷகாரமாய் நிற்கிறாரே யொழிய உபாயத்வத்தில் அந்வயிப்பதில்லை.

"ஆசார்யாபிமானந்தான் ப்ரபத்தி போலே உபாயாந்தரங்களுக்கு அங்கமுமாய், ஸ்வதந்த்ரமுமாயிருக்கும். பக்தியில் அசக்தனுக்கு ப்ரபத்தி; ப்ரபத்தியில் அசக்தனுக்கு இது" (ஸ்ரீ வசந பூஷணம் 461, 462) என்று பிள்ளையுலகாசிரியர் அருளுகையாலே ஆசார்யனுக்கும் உபாயத்வமுள்ளதாகத் தோற்றுகிறதே? எனில் ஆசார்யன் செய்யும் சிபாரிசை எம்பெருமான் தட்டமாட்டான் என்னும் உறுதியை இந்த ஸூத்ரங்கள் காட்டுகின்றனவாகையாலும், ஸர்வேச்வரனுடைய மோக்ஷப்ரதாந ஸங்கல்பத்தை விளக்காமல் ஆசார்யனாலே நேரே மோக்ஷமளிக்க முடியாதாகையாலும், இந்த ஸூத்ரங்களுக்கும் ஆசார்யனுடைய புருஷகாரத்வத்திலேயே நோக்கு. ஆகையாலே ஆசார்யனுக்கும் பலப்ரதாபயித்ருத்வமாகிற புருஷகாரத்வமுண்டேயொழிய, நேரே மோக்ஷப்ரதத்வமில்லை. ஆக, பெரிய பிராட்டியாரும், ஆசார்யர்களும் பரம்பரயா மோக்ஷோபாயமாகின்றார்களேயொழிய நேரே மோக்ஷோபாயமாவதில்லை என்றதாயிற்று.

பகவத் குணங்கள் சிலவும், பரம புருஷனுடைய திருமேனியும் பரம புருஷன் பலப்ரதானம் செய்வதற்கு உதவுகின்றனவாகையாலே, அவற்றுக்கு உபாயத்வம் உண்டு. இவை தனியாகப் பலப்ரதானம் செய்யத் தகுதியுடைய சேதன த்ரவ்யங்களல்லாமையாலே, இவற்றுக்கு உள்ள உபாயத்வத்தாலே, 'ஸர்வேச்வரன் நிரபேக்ஷமான உபாயமாகிறான்' என்னும் பெருமைக்குக் குறையேற்படுவதில்லை. குணங்களிலும், ஆச்ரயணவேளையிலோ பலப்ரதான வேளையிலோ உபயோகப்படாத ஜ்ஞானம், ஆனந்தம் முதலான ஸ்வரூப நிரூபக குணங்களுக்கும், நிரூபித ஸ்வரூப விசேஷணங்களுக்கும், பிராட்டியைப் போலே ஆச்ரயண வேளையில் மாத்திரம் உதவுகிற வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம் என்னும் குணங்களுக்கும் உபாயத்வமில்லை. பலப்ரதான வேளையில் ஆச்ரிதனுடைய கார்யத்தை ஸாதித்துக் கொடுப்பதில் உதவும் (தர்மபூத) ஜ்ஞாநம், சக்தி, பூர்த்தி (அவாப்தஸமஸ்த காமத்வம்), ப்ராப்தி (ஸர்வ ஸ்வாமித்வம்), இரக்கம் என்னும் ஐந்து குணங்களுக்கே உபாயத்வமுண்டு. அடியானுக்கு நன்மை தீமைகளை அறிவதற்கு ஸர்வஜ்ஞனாக வேண்டும். அறிந்தபடியே கார்யம் செய்ய ஸர்வசக்தனாக வேண்டும். ஸர்வசக்தனானாலும் இவனிடம் ஒரு கைம்மாறை எதிர்பாராமலிருக்கப் பூர்ணனாக வேண்டும். தன் பேறாகக் கார்யம் செய்வதற்கு ப்ராப்தி வேண்டும். ஜ்ஞாந சக்தி பூர்த்தி ப்ராப்திகளாகிற இந்த நாலு குணங்களும் அநாதி காலமாக இச்சேதனனை ஸம்ஸாரத்தில் வைத்து வாட்டியெடுப்பதற்கே கருவியாயிருந்தன. அப்படியல்லாமல், இவையே இவனுடைய உஜ்ஜீவனத்திற்கு உறுப்பாவதற்கு இரக்கம் என்னும் மஹாகுணம் வேண்டும். ஆக, இவ்வைந்து குணங்களுக்கும் பலப்ரதான வேளையில் இவ்வண்ணமாக உபயோகமிருக்கிறதாகையாலே இவற்றுக்கும் உபாயத்வம் உண்டு.

இடக்கையும், வலக்கையுமறியாத இடைச்சி (சிந்தயந்தி), போக்யமான பூவை விற்று வயிறு வளர்க்கும் மாலாகாரர், முதலானார்க்குத் தன்னிடம் தலைசிறந்த ஈடுபாட்டை விளைத்து, அதுவே கருவியாக இதர விஷய விரக்தியையும், விளைத்தும், "பல பல நாழஞ் சொல்லிப் பழித்த சிசுபாலனுக்கும் அந்திமஸமயத்

தில், 'அலவலமை தவிர்த்த அழகன்'' [பெரியாழ். திரு 4-3-5) என்கிறபடியே தன் அழகாலே துவேஷம் நீங்கும்படி திருத்தி, "திருவடி தாட்பால் அடைந்த'' (திருவாய் 7-5-3) என்கிறபடியே சேர்த்துக் கொண்டும் ஸர்வேச்வரன் மோக்ஷமளிப்பதற்குத் திருமேனி உதவுவதைக் காண்கிறோமாகையாலே, திருமேனிக்கும் உபாயத்வமுண்டு. இதையே "வண் புகழ் நாரணன் திண்கழல்'' (திருவாய் 1-2-10) என்றும், "ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்'' (திருவாய் 5-7-10) என்றும், "கழல்களவையே சரணாகக் கொண்ட குருகூர்ச் சடகோபன்" (திருவாய் 5-8-11) என்றும், உய்வுபாயம் மற்றின்மை தேறிக் கண்ணன் ஒண்கழல்கள் மேல்'' (திருவாய் 4-3-11) என்றும் ஆழ்வார் அருளிச் செய்தார். இவற்றைத் திருவுள்ளத்திற் கொண்டே, "பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது. நின் கழலாயிருக்கும்'' (முமுக்ஷுப்படி 146) என்று பிள்ளையுலகாசிரியர் அருளிச் செய்தார். இவ்விடங்களில் திருவடிகள் என்றது திருமேனிக்கு உபலக்ஷணம். அதனாலேயே, "திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்களும், வைத்து அஞ்சல் என்ற கையும், கவித்த முடியும், முகமும் முறுவலும், ஆஸநபத்மத்திலே அழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம்' (முமுக்ஷுப்படி 145) "(சரணௌ என்னும்) இத்தால் பிராட்டிக்கு இருப்பிடமாய், குணப்ரகாசகமுமாய், சிசுபாலனையுமகப் படத் திருத்திச் சேர்த்துக் கொள்ளும் திருமேனியை நினைக்கிறது'' (முமுக்ஷுப்படி 148) என்று பிள்ளையுலகாசிரியர் அருளினார்.

ஆக, ப்ரபன்னனான சேதனனுக்கு ஆசார்யர்களாலும், பெரிய பிராட்டியாராலும் புருஷகாரக்ருத்யம் செய்யப் பெற்ற பின், திருமேனியோடும், ஜ்ஞாந சக்தி பூர்த்தி பிராப்தி க்ருபைகளோடும் கூடிய பரமபுருஷனே உஜ்ஜீவனோபாயமாகிறான் என்றதாயிற்று. இதுவே உலகாசிரியன் உலகுக்கு உணர்த்தும் உய்வு பாயமாகும்.

ஸ்ரீ க்ருஷ்ண ஸ்வாமி தாஸேன ஸுதர்சனப்ருதா மயா ।
லோகார்யோக்ததிசா மோக்ஷஸது
பாய: ப்ரதர்சித: ॥

['ஸுதர்சன'த்தை தரித்து நிற்கும் ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமிதாஸனான அடியேனாலே உலகாரியன் உணர்த்தும் உய்வுபாயமானது நன்கு விளக்கப் பெற்றது.

---

ஸ்ரீ:

ஸ்ரீவைஷ்ணவரத்னமாலா : 10

# தேசிகன் வளர்த்த உபய வேதாந்தம்

## திருக்கள்ளம் நரஸிம்ஹராகவாசார்யர்ஸ்வாமி

பகவான் என்கிற சப்தமானது ஸ்ரீய:பதி யான நாராயணனைத்தான் சொல்லும். ராம: என்கிற சொல்லும் ஈரரசுபடாதபடி சக்ர வர்த்தித் திருமகனையே குறிக்கும். மற்றவர்களை வ்யவஹரிக்கும்போது பலராமன், பரசுராமன் என்று ஒரு அடைமொழியிட்டே வ்யவஹரிக் கின்றோம். ஆழ்வார் என்கிற சப்தமும் நம்மாழ் வாரையே ப்ரதிபாதிக்கும். மற்றை ஆழ்வார் களைச் சொல்லும்போது பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார் என்றிங்ஙனேயன்றோ சொல்லு கின்றோம். இவ்விதமே தேசிகன் என்கிற நிருப மபதமான சப்தமும் கவிதார்க்கிக சிங்கமான நிகமாந்த மஹா தேசிகனையே குறிக்கும். தேசிகன் என்ற சப்தத்திற்கு ஆசார்யன் என்று பொருள். ஆசார்யனுக்கு வேண்டிய எல்லா லக்ஷணங்களும் ஒருங்கே அமையப் பெற்றவர் தேசிகனே என்பதை ஸ்ரீ அண்ணன் ஸ்வாமி, ஆசார்யத்வோபயுக்தா : முனிகணகதிதா : தேசிகை : ஸ்வேனசோக்தா : ஸர்வைபத்ர குணா : ஸ்யு : ஸமுதித விபவா : ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரே'' என்கிற ச்லோகத்தில் மிகத் தெளிவாக அருளிச் செய்தார். தேசிகன் அருளிச் செய்த க்ரந்தங்கள் பலபல. அவை கள் யாவற்றையும் எவனால் எண்ண முடியும். அவைகளிலொன்றே இம்மைக்கும் மறுமைக் கும் தஞ்சமாகும் என்பதையும் "பரச்சதம் வாபி பர : ஸத்ருசம் வேதாந்தாசார்ய க்ருதா : ப்ரபந்தா :| தத்ராலமேக : கலு புக்தி முக்த்யோ : கார்த்ஸ்யேனகஸ்தான்கணயேத் ஸமஸ்தான்'' என்கிற ச்லோகத்தினால் உத் கோஷித்தார். "ஓரொன்றுதானே அமை யாதோ'' என்கிற ஸ்வாமி தனியனிலும் இப் பெருமையைக் காணலாம். தேசிகனால் உபய வேதாந்தமும் நன்கு வளர்க்கப்பட்டதென்பதை ஸ்ரீ வைஷ்ணவ ஸமூஹமனைத்தும் ஏற்றுப் போற்றி வருகின்றது.

நாராயணனுடைய பெருமையை ஒப்புக் கொண்டு அவனால் மோக்ஷம் பெறவேணு மென்று எண்ணுவோரனைவருமே வைஷ்ண வர்கள்தான். ஆனால், ஸ்ரீவைஷ்ணவர்கள் என்கிற சப்தமானது நம்மாழ்வார், நாதமுனி கள், ஆளவந்தார், எம்பெருமானார் முதலிய ஆசார்யச்ரேஷ்டர்கள் ஸிந்தாந்தித்து,போதித்த மதத்தை அவலம்பித்து, திருமாலே தத்வம், திருமாலே உபாயம், திருமாலே புருஷார்த்தம் என்கிற த்ருடாத்யவஸாயமுள்ளவர்களையே ப்ரதிபாதிக்கின்றது என்பது முக்கியமாக உணரத்தக்கது. வடமொழி வேதமானது அனைவருக்கும் பொதுவானது. ஆழ்வார்களால் அருளப்பட்ட தமிழ் மறையானது ஸ்ரீவைஷ்ண வர்களுக்கே அஸாதாரணமாக ஏற்பட்ட நிதி யாகும். இரண்டு பாஷைகளிலுமுள்ள மறைக ளிரண்டும் ஏககண்டமாய் ஒரே பொருளைத் தான் காட்டுகின்றன என்று பறைசாற்றுகின்ற ஸ்ரீவைஷ்ணவர்களே உபய வேதாந்திகள் எனப்படுகின்றனர். உபய வேதாந்தமென்றால் தனித்தனி கருத்துடைய இரண்டு வேதாந்த மென்று பொருளல்ல; ஒரே பொருளைச் சொல்லக்கூடியதாயும், தமிழ், ஸம்ஸ்க்ருதம் என்கிற இருமொழியிலுள்ளதுமான (இருவடிவி லுள்ள) ஒரே வேதாந்தமென்றுதான் நிஷ்க்ருஷ் டமான பொருள்.

அருமறை தமிழ் செய்தான் என்றும், வேதம் தமிழ் செய்த மாறன் என்றும் சொல்லப்படுவ தால் ஸம்ஸ்க்ருத வேதமே, நம் போன்றவர் களின் வாழ்விற்காக ஆழ்வார்களின் வாக்கி லிருந்து தமிழ்வேதமாகப் பரிணமித்தது என் றன்றோ புலனாகிறது.

உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யர்களில் அக்ரகண்யராயிருப்பவர் ஸ்ரீமந்நாதமுனிகள். இம்மஹானால் ப்ரகாசப்படுத்தப்பட்ட உபய வேதாந்த ஸித்தாந்தத்தை இம்மஹானின் திருப்பேரனான ஆளவந்தார் தனது பல க்ரந்தங்களால் நன்கு போஷித்தார். இப்படி வளர்த்த ஸித்தாந்தத்தை எம்பெருமானார் இதர மத நிரஸந பூர்வகமாக நன்கு ரக்ஷித்து உலகத்தில் நிலைநாட்டியருளினார். இக்கருத்தை "நாதோ பஜ்ஞம் ப்ரவ்ருத்தம் பஹுபிருபசிதம் யாமுனேய ப்ரபந்தை : த்ராதம் ஸம்யக் யதீந்த் ரைரிதமகிலதம : கர்சனம் தர்சனம் ந:'' என்று ஸ்ரீதேசிகன்வெளியிட்டருளினார். ஸ்ரீமணவாள மாமுனிகளும், "எம்பெருமானார் தரிசன மென்றே இதற்கு நம்பெருமாள் பேரிட்டு

நாட்டி வைத்தார்'' என்று இந்த ஸித்தாந்தத்தின் தனிப் பெருமையை உலகறியச் செய்தார்.

எம்பெருமானுர், திவ்ய ப்ரபந்தங்களுக்கு வ்யாக்யானம் அருளிச் செய்யவில்லையே, தாம் அருளிச் செய்த க்ரந்தங்களில் ப்ரமாணமாகக் (மேற்கோளாக) கூட எடுக்கவில்லையே, ஆகையால் உடையவருக்குத் தமிழ் மறையில் ஈடுபாடில்லை என்று ஏற்படவில்லையா என்று சிலர் சங்கிக்கலாம். அக்காலத்தில் அத்வைதம் முதலிய இதர மதங்கள் பரவியிருந்தபடியால் அவைகளைக் கண்டித்து விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை ஸ்தாபிக்கவேண்டிய பரம் எம்பெருமானுருக்கு ஏற்பட்டது. அவர்களைக் கண்டிக்கும்போது அருளிச் செயல் விரோதத்தைக் காட்டிக் கண்டிக்க முடியாது. அவர்கள் அதற்கு ப்ராமாண்யத்தை இசையாமையால். ஆதலால் அவர்களும் ப்ரமாணமாக அங்கீகரித்த உபநிஷத், சூத்திரம், பகவத்கீதை முதலியவைகளின் விரோதத்தைக் காட்டியே நிரஸநம் பண்ண வேண்டியிருந்தபடியால் அவைகளுக்கு ஸரியான பொருளைக் கூறி, மற்றவர்கள் சொல்லும் பொருளைக் கண்டித்து விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை ஸ்தாபித்தார். தனது சிஷ்யர்களைக்கொண்டு திவ்ய ப்ரபந்தத்தின் மஹிமையை உலகறியச் செய்தார். ஆழ்வார்களின் அருளிச் செயல்களை மனத்தில் கொண்டுதான் ஸூத்திரங்களுக்கு ஸர்வ ச்ருதி மனோஹரங்களான பொருள்களை அருளிச்செய்தார். "பாஷ்யகாரர் இதுகொண்டு சூத்திர வாக்கியங்கள் ஒருங்க விடுவர்'' என்கிற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தியானது இவ்வர்த்தத்தை நமக்கு மிகத் தெளிவாக ப்ரகாசப்படுத்துகிறது. "பண்டருமாறன் பசுந்தமிழானந்தம் பாய்மதமாய் விண்டிட எங்கள் இராமானுச முனிவேழம்'' என்கிற நூற்றந்தாதிப் பாசுரத்தினுலும், எம்பெருமானுருக்கு அருளிச் செயலிலுள்ள ஈடுபாட்டை உணரலாம். இவ்வர்த்தங்களை மனதில் பதிய வைத்துக்கொண்டால், முன்பு உதித்த ஸந்தேஹத்திற்கு ப்ரஸக்தியே யில்லையென்பது மிகத் தெளிவு.

எம்பெருமானுர் தாமருளிச் செய்த ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களை ப்ரவசந மூலமாகவும் வ்யாக்யான க்ரந்தங்களை இயற்றுவதன் மூலமாகவும் உலகத்தில் நன்ருகப் பரவச்செய்ய வேண்டுமென்கிற பரம கருணையினுலே மறுபடியும் நிகமாந்த மஹாதேசிகனுக அவதரித்தார் என்பதை, "ஸ்ரீபாஷ்யம் விரசய்ய ஸம்யமிவர : ஜித்வாஸ்வயம் வாதிந : பாஹ்யாம்ச்சாபி குத்ருஷ்டிகாங்புவிபுந : பாஷ்ய ப்ரதிஷ்டாசயா | ஸ்ரீமத் வேத தேசிக; சிரோர த்நாத்மனு விர்பாவை: இத்யேவம் ச வதந்தி ஹந்தக்ருதிந: த்ரைகாலி கஜ்ஞாநிந:'' என்கிறச் ச்லோகத்தில் ஸ்ரீ அண்ணன் அருளிச்செய்தார்.

ஸ்ரீதேசிகன் உபய வேதாந்தங்களையும் பலபடிகளால் வளர்த்தார். ச்ருதப்ரகாசிகை என்கிற க்ரந்தமில்லாமற் போனுல் ஸ்ரீபாஷ்யத்தின் அர்த்தங்களை உள்ளதுள்ளவாறு எவராலும் அறிய முடியாது. ஸ்ரீபாஷ்யத்தின்அர்த்தங்களை உள்ளவாறு அறிய முடியாமற் போனுல் சூத்திரத்தின் உட்கருத்தை உணர முடியாது. சூத்திரத்தின் உட்கருத்தை உணர முடியாமற்போனுல், உபநிஷத்துகளின் பரம தாத்பர்யத்தை நாம் எவ்விதம் அறிய முடியும் ? ஆகையால்மிக முக்கியமாக அபேக்ஷித மானது, ச்ருதப்ரகாசிகைதான்.

துருஷ்க யவநாதிகளால் ஏற்பட்ட ஆபத்காலத்தில் ச்ருதப்ரகாசிகை என்கிற க்ரந்தம் அழியாதபடி மிக ச்ரமப்பட்டு காப்பாற்றினவர் ஸ்ரீதேசிகனே. "ச்ருதப்ரகாசிகா பூமௌ யேநாதௌபரிரக்ஷிதா'' என்கிற ச்லோகத்தைக் காண்க. தத்வடீகை என்கிற அதிகம்பீரமான ஒரு வ்யாக்யானத்தை இயற்றியும் ஸ்ரீபாஷ்யத்தின் பல ஆழ்ந்த கருத்துக்களை உலகறியச் செய்தார். தாத்பர்ய சந்திரிகை என்னும் சிறந்த உரையினுல் ஸ்ரீகீதா பாஷ்யத்தின் உட்கருத்தை மந்தமதிகளும் எளிதில் உணரச் செய்தார். ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் என்கிற க்ரந்தத்தில் முதல் பாகமான அர்த்தாநுசாஸந பாகத்தில், தத்வஹித புருஷார்த்தங்கள் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தில் ப்ரதிபாதிக்கப்படும் நிலையை மிகத் தெளிவாக அருளிச் செய்தார். உபநிஷத்துக்களில், 'தத்வமஸி' 'ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம' அயமாத்மா ப்ரஹ்ம' இத்யாதி வாக்யங்கள் ஜகத்திற்கும் ப்ரஹ்மத்திற்கும் அபேதத்தைக்காட்டுகின்றன. 'போக்தா, போக்யம் ப்ரேரிதாரம் ச மத்வா, ''ப்ரதகாத்மாநம் ப்ரேரிதாரம் ச மத்வா'' க்ஷரம் ப்ரதானம் அம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநௌ ஈசதே தேவஏக: இத்யாதி வாக்யங்கள் ஜகத்திற்கும் ப்ரஹ்மத்திற்கும் பேதத்தை போதிக்கின்றன.

அத்வைதிகள்அபச்சேதாதி கரண ந்யாயத்தாலே பூர்வம் பாத்யம் பரம் பாதகம் என்று கொண்டு பேத ச்ருதிகளை பாதித்து அபேதத்தை ஸ்தாபித்தார்கள். த்வைதிகள் பேதத்திற்கு முக்யத்வத்தை அங்கீகரித்து அபேதத்தை சொல்லுகின்ற ச்ருதிகளை "யததீநா

யஸ்ய சத்தா தத் ததித்யேவபண்யதே'' என்கிற ந்யாயத்தாலே, ப்ரஹ்மாதீநமான ஜகத்தானது ப்ரஹ்மமென்று பேசப்படுகிறது என்று அமுக்கியமாக நிர்வஹித்தார்கள். எம்பெருமானுர் ''ய:ப்ருதிவ்யாம்திஷ்டந், ய:ஆத்மநி திஷ்டந்'' முதலிய கடக ச்ருதிகளேயும், ஜகத் ஸர்வம் சரீரம்தே, இத்யாதி வாக்யங்களேயும், 'உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்' என்கிற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியையும் திருவுள்ளத்திற்கொண்டு, ப்ரஹ்மத்திற்கும் ஜகத்திற்கும் சரீராத்ம பாவத்தை ஸ்தாபித்து பேதா பேத ச்ருதிகள் இரண்டையும் முக்யார்த்தங்களாகவே நிர்வஹித்தருளினுர். ஸ்ரீதேசிகன், ப்ரதாந பிரதிதந்த்ராதிகாரத்தில் ''ஆதேயத்வ ப்ரப்ருதி நியமை: ஆதிகர்த்து: சரீரம் ஸத்தா ஸ்தேம ப்ரயதந பலேஷ் வேத்தாயத்தமேதத் | விச்வம் பச்யந் இதி பகவதி வ்யாபகாதர்ச த்ருஷ்டே கம்பீராணும் அக்ருதக கிராம்காஹதே சித்தவ்ருத்திம்'' என்கிற ச்லோகத்தில் சரீர லக்ஷணத்தையும், இதை உணர்ந்தவன்தான் ஆழ்ந்த பொருள்களேக் கொண்ட நித்யங்களான வேத வாக்கியங்களின் பரம தாத்பர்யத்தை விரோதமில்லாதபடி ஸமஞ்ஜஸமாக நிர்வஹிக்க முடியுமென்பதையும் மிகத் தெளிவாக அருளிச் செய்தார். சேதநாசேதநாத்மகமான ஜகத்தானது, ப்ரஹ்மத்திற்கு சரீரமென்றபடியினுலேயே பேதம் ஸித்தம். சரீரத்தைச் சொல்லக்கூடிய தேவ:மனுஷ்ய: என்கிற சப்தங்கள் ஆத்ம பர்யந்தம் சொல்லக்கூடிய நிலேயை ஜீவன் தனது கர்மத்தினுல் தேவனுயும், மனுஷ்யனுயும் பிறக்கிருன் என்கிற விடத்தில் காண்கின்றபடியால், ப்ரஹ்ம சரீரமான சேதநத்தையும் அசேதநத்தையும் சொல்லக்கூடிய சப்தங்கள் ப்ரஹ்ம பர்யந்த வாசகங்களாக ஆகலாமாகையால், ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம இத்யாதி ச்ருதிகளும், முக்யார்த்தங்களாகவே நிரூபிக்கப் பட்டனவாகின்றன.

விசிஷ்டாத்வைதம் என்கிற சப்தத்திற்கு த்வயோர்பாவ: த்விதா, த்விதைவ—த்வைதம், ந—த்வைதம், அத்வைதம். விசிஷ்டஸ்ய அத்வைதம், விசிஷ்டாத்வைதம் என்றும் நவித்யதே, த்வைதம், யஸ்மிந், தத் அத்வைதம், விசிஷ்டம்ச தத் அத்வைதம்ச, விசிஷ்டாத்வைதம் என்றும், இருவகைகளான ஸமாஸங்களேயும் கொள்ளலாம். சேதநாசேதநாத்மகமான ஸகல ப்ரபஞ்சத்திற்கும் அந்தர்யாமியானவன் ஒருவனே. ஆத்மாவான ப்ரஹ்மத்திற்கு, சேதநா சேதநங்கள் சரீரங்களாய் விசேஷணங்களாய் கிடக்கின்றன என்பதுதான் விசிஷ்டாத்வைத ஸிந்தாந்திகளின் அடிப்படையான கொள்கை.

ஜகத்திற்கும் ப்ரஹ்மத்திற்கும் சொல்லப்படும் பேதத்தையும் அபேதத்தையும் ''அய: பிண்டே யதா வஹ்நி: பிந்தஸ் திஷ்டதி அபிந்நவத் | ததாவிச்வமிதம் தேவோ ஹ்யாவ்ருத்ய பரிதிஷ்டதி'' ''அங்பச்ச ராஜந், ஸ, பர: ததாங்ய: பஞ்சவிம்சக: | தத்ஸ்தத்வாதநுபச்யந்தி ஹ்யேக ஏவேதி ஸாதவ:'' என்கிற ப்ரமாணங்களேக் காட்டி பரிபூர்ண ப்ரஹ்மாநுபவாதிகாரத்தில் மிகத் தெளிவாக நிர்வஹித்தருளினுர்.

உபநிஷத்துக்களில் ''ஸதேவஸௌம்யேத மக்ர ஆஸீத்'' ''ப்ரஹ்மவா இதமக்ர ஆஸீத்'' சிவ ஏவகேவல:'' ''ஹிரண்யகர்ப: ஸமவர்த்ததாக்ரே, ''ஏகோஹவை நாராயண ஆஸீத்'' என்று ப்ரளய காலத்தின் ஸ்திதி பேசப்படுகிறது. அப்பொழுது ஒருவன்தான் இருந்தான் என்று எல்லா வாக்யங்களும் பேசுகின்றன. ஆனுல் பெயரைச் சொல்லும்போது மாத்திரம் ஸத் என்றும், ப்ரஹ்மம் என்றும், சிவனென்றும் ஹிரண்யகர்பனென்றும், நாராயணனென்றும் பலவாருகச் சொல்லுகின்றன. ப்ரளய காலத்தில் பலர் இருந்தார்களென்ருல் ஒருவன்தான் இருந்தான் என்கிற வாக்கியங்கள் விரோதிக்கும், ஒருவன்தானிருந்தான் என்ருல் பல பெயர்களேச்சொல்வது எப்படி ஸங்கதமாகும்? ஒருவனுக்கே அனேக பெயர்கள் என்ருல் அவன் யார். எல்லாப் பெயர்களும் அவனேச் சொல்லும் விதம்தான் எங்ஙனே என்ற கேள்விகளுக்கு ''ஸாமாந்ய புத்தி ஜநகாச்ச. ஸதாதிசப்தா: தத்வாந்தரப்ரமக்ருதச்ச சிவாதிவாச: | நாராயணே த்வயிகரீச வஹந்த் யநங்ய மங்வர்த்த வ்ருத்தி பரிகல்பித மைககண்ட்யம்'' என்கிற வரதராஜ பஞ்சாழசத் ச்லோகத்தில் மிகத் தெளிவான ஸமாதானத்தை யருளிச் செய்தார். ப்ரளய காலத்திலுள்ளவன் நாராயணனே என்றும், மற்றசப்தங்கள் யாவற்ருலும் அவனே பேசப்படுகிருனென்றும் தெளிவாக்குகிருர். ஒருவனே மனுஷ்யனென்றும், த்ரைவர்ணிகனென்றும், ப்ராஹ்மணனென்றும் ஸாமாந்ய வாசக சப்தத்தாலும் விசேஷவாசக சப்தத்தாலும் சொல்லலாமிறே. ஸத் ப்ரஹ்மாதி சப்தங்கள் ஸாமாந்ய வாசக சப்தங்கள். ஸத் என்ருல் உள்ளது என்று பொருள். இது கால ஸம்பந்திகளானயாவற்றையும் சொல்லும். ப்ரஹ்மம் என்ருல் பெரியதென்று பொருள். இது ஸத்என்று பேசப்பட்ட பொருள் பெரியது என்கிறது. ஆத்ம சப்தமானது,

ப்ரஹ்ம சப்தத்தால் பேசப்பட்டது சேதனன் என்று உணர்த்துகிறது. நாராயண சப்தமானது ஆத்ம சப்தத்தால் காட்டப்பட்டது ஜீவனல்ல; ஸ்ரிய:பதியான புருடோத்தமன் என்று தெரிவிக்கிறது. ஸாமான்ய வாசக சப்தமானது விசேஷத்தில் பர்யவஸிக்கின்றது என்கிற ந்யாயத்தால் ஸத் ப்ரஹ்மாதி சப்தங்கள் விசேஷ வாசகமான நாராயண சப்தத்தின் அர்த்தத்தில் பர்யவஸிக்கக் குறையில்லை. சிவன் என்றால் தானும் மங்களஸ்வரூபியாய் பிறர்க்கும் மங்களத்தை உண்டுபண்ணுகிறவன் என்று பொருள். இந்திரன் என்றால் உயர்ந்த செல்வமுடையவனென்று பொருள். இம்மாதிரியான வகையில் எல்லா சப்தங்களும் ஸாக்ஷாத்தாகவே நாராயணனைச் சொல்லும் முறையை ஸ்ரீபட்டருடைய ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் காணலாம். சேதனனையோ அசேதனத்தையோ சொல்லக்கூடிய முக்ய லிங்கங்கள் உள்ளவிடத்தில் அந்தர்யாமி பரமாகக் கொள்ள வேண்டுமென்கிற விஷயங்களை, ஸ்ரீபாஷ்யாதிகளைச்சேவித்துத் தெளியவேண்டும். விரோத பரிஹாரம் என்கிற ரஹஸ்யத்தில் நமது ஸித்தாந்தத்தில் அங்கிகரிக்கப்பட்ட பல விஷயங்களில் பல விதங்களான விரோதங்கள் உள்ளது போல் தோற்ற அவைகளுக்குப் பரிஹாரம் அருளிச் செய்து ஸமஞ்ஜஸமாக நிர்வஹித்து ஸிந்தாந்தத்தை வளர்த்தருளினார். வேதாந்தங்கள் நாராயணனை ஸர்வ ரக்ஷகன் என்று பறைசாற்றுகின்றன. ரக்ஷகத்வமாவது அநிஷ்டத்தைப் போக்கடித்து இஷ்டத்தைத் தருகையே. அநாதி காலமாக, நம் அநர்த்தத்தைப் பார்த்துக்கொண்டு விலக்காமலிருக்கிற பகவானுக்குக் கீழ்சொன்ன ரக்ஷகத்வம் எவ்விதம் கூடுமென்று சங்கிக்கலாம். இதற்கு ஸ்ரீதேசிகன் "ஈச்வரனுடைய ரக்ஷகத்வமிரண்டுபடியாயிருக்கும். எங்ஙனேயென்னில், ஸர்வருக்கும் ஸத்தாதிகள் குலையாதபடி பண்ணுகிற ரக்ஷகத்வம் நிரபேக்ஷம். ஸம்ஸாரிகள் திறத்தில் அநிஷ்ட நிவாரணாதிரூபமான ரக்ஷகத்வம். இவர்கள் பக்கலிலேசாஸ்த்ரோக்தமாயிருப்பதேதேனுமொரு வ்யாஜத்தை அபேக்ஷித்திருக்குமாகையால் ஸர்வ க்ஷேத்ரஜ்ஞர் விஷயத்திலும் அநிஷ்ட நிவாரணாதிரூபமான ரக்ஷணத்திற்கு யோக்யனாகையாலும், மேல் பெறப்புகுகிற பரம புருஷார்த்தத்திற்கு உறுப்பான ஸத்தாதிகள் குலையாதேநித்யமாக, ரக்ஷிக்கையாலும் ஸர்வ ரக்ஷகன் என்கிறது" என்றருளிச்செய்த பரிஹாரத்தைக் காண்க.

'நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி, என்கிற உபநிஷத்தானது முக்தியில் ஜீவனுக்கு ப்ரஹ்மத்தோடு பரமஸாம்யத்தைப் பேசுகிறது. நமது ஸித்தாந்த ப்ரகாரம் ஜீவனுக்கு முக்தியிலும் ஸ்வாபாவிகமான சேஷத்வம் மாறாதென்றால் சேஷியான பரமாத்மாவோடு சேஷனான ஜீவனுக்கு அத்யந்த ஸாம்யம் எவ்விதம் கூடுமென்கிற ஆக்ஷேபத்திற்கு "துலாத்ருதங்களானஸ்வர்ண, பாஷாணங்களுக்கு ஓர் ஆதாரத்தாலே பரமஸாம்யம் சொல்லுமாப்போலே முக்தனுக்குச் சொன்ன பரம ஸாம்யத்தை "போகமாத்ரஸாம்யலிங்காச்ச" என்று ஜ்ஞாநாநந்தங்களில்வ்யவஸ்திதமாக்குகையாலும், 'ஜகத் வ்யாபாரவர்ஜம், என்றதுவும் மற்றுள்ள லக்ஷணங்களுக்கு நிதர்சனமாகையாலும் முக்த தசையிலுமிவனுக்கு சேஷத்வமனுவர்த்திக்கக் குறைவில்லை" என்கிற ஸ்ரீஸூக்திகளில் பரிஹாரத்தைக் காணலாம்.

"ப்ரக்ருதிச்ச ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந்தாநுபரோதாத்" என்கிற ஸூத்ரத்தில் சூத்திரகாரர் ஜகத்திற்கு ப்ரஹ்மம் உபாதாந காரணமாகவும் நிமித்தகாரணமாகவும் ஆகின்றதென்பதை அருளிச்செய்து, மேல் பல சூத்திரங்களாலும் அதை ஸ்தாபித்தருளுகிறார். பானைக்கு, குயவன் நிமித்தகாரணம், மண் உபாதாந காரணம். எது வேறு விதமாக பரிணமிக்கின்றதோ பரிணமிக்கக்கூடிய அந்தப் பொருளை உபாதாநமென்றும், அதை தன் ஞான சக்திகளால் எவன் வேறு விதமாக ஆக்குகின்றானோ, அவனை நிமித்த காரணமென்றும் வ்யவஹரிக்கின்றோம். ப்ரஹ்மத்தை ஜகத்திற்கு உபாதான காரணமென்றால், மண்பானையாக ஆகிறமாதிரி ப்ரஹ்மம் ஜகத்தாக பரிணமிக்கிறது என்று ஏற்படாதா? அப்பொழுது ப்ரஹ்மத்திற்குவிகாரித்வமென்கிற தோஷம் வாராதா, அது நிர்விகாரித்வத்தைச்சொல்லக்கூடிய பல ச்ருதிகளுக்கு விருத்தமாகாதா என்கிற கேள்விகளுக்கு அச்யுத சதகத்தில் "புருஷப்ரதாநசரீரோபுவநாநாம்பவஸ்யச்யுதோபாதாநம் | நிஜஸங்கல்பஸநாதோவஹஸிநிமித்தத்வமப்யத்புத சக்தி : "என்கிற ச்லோகத்தினால் மிகத்தெளிவான ஸமாதானத்தையருளிச் செய்தார். ப்ரஹ்மம் ஜகத்திற்கு உபாதானமாகும்போது, அசேதந சரீரமாயிருந்து உபாதாநமாகிறது. நிமித்தமாகும்போது தன ஸங்கல்ப விசிஷ்டவேஷத்தாலே நிமித்தமாகிறது. மண்பானையாக ஆகிறமாதிரி ஸூக்ஷ்ம சேதநாசேதநசரீரக ப்ரஹ்மமானது ஸ்தூல சேதநாசேதநசரீரகப்ரஹ்மமாகிறது. ஸௌக்ஷ்ம்யம், ஸ்தௌல்யம் என்கிற விரண்டும் விசேஷணங்களானசேதநாசேதனங்களுக்கே. சேதநனுக்கு ஸௌக்ஷ்ம்யம் அத்யந்த ஞானஸங்கோசம். ஸ்தௌல்யம் ஞான விகாஸம். அசேதனத்திற்கு ஸௌக்ஷ்ம்யம்,

மஹதாதிவிகாரங்களற்று இரும்புண்ட நீர் போல இருகச் சுவறியிருத்தல். ஸ்தௌல்யமாவது மஹதாதிரூபேண பலவாறு பரிணமித்தல். விசேஷணங்களான சேதநாசேதங்களில் விகாரமே யொழிய, விசேஷ்யமான ப்ரஹ்மத்திற்கு நிர்விகாரித்வ ச்ருதிவிருத்தமான எவ்வித விகாரமுமில்லை என்பதைப் 'பரிணாமாத், என்கிற சூத்திர வ்யாக்யானத்தில் எம்பெருமானார் மிகத் தெளிவாக அருளிச் செய்தார். பாலனாவன் யுவாவாகிறானென்றால், பாலத்வாதிகள் சரீரத்திலேயேயொழிய ஆத்மாவில் இல்லை. அவ்விதமே இங்கும் காண்க. ஆண் மயில் ஒரு ஸமயம் தோகையை விரித்துக் கொண்டு ஆடுகிறது. ஒரு ஸமயம் சுருக்கிக் கொள்கிறது. அவ்விதமேபகவானும் ப்ரளய காலத்தில் சேதநாசேதநாத்மகமான தன் தோகையை சுருங்கச்செய்கிறான். ஸ்ருஷ்டி காலத்தில் மலரச்செய்கிறான். ஊர்ணநாபி (சிலந்தி) கூடுகட்டும் விதத்தையும் உதாஹரணமாகக் கொள்ளலாம்.

''ஸதேவஸௌம்யேதமக்ர ஆஸீத்'' என்கிற ச்ருதிக்கு இதம், ஸ்தூல சேதநாசேதநசரீரக ப்ரஹ்மமாகிற ஜகத்தானது, அக்ரே—ஸ்ருஷ்டக்குமுன். ப்ரளயகாலத்திலென்றபடி. ஸதேவ ஆஸீத் ஸூக்ஷ்மசேதநாசேதந சரீரக ப்ரஹ்மமாகவே இருந்தது என்று பொருளைக் கொண்டால், உபாதாநத்வமும், நிமித்தாந்தர ராஹித்யத்தைச் சொல்லுகிற அத்விதீயம் என்ற பதத்தால் நிமித்தகாரணத்வமும் ஸ்பஷ்டமாவதால் அபிந்ந நிமித்தோபாதா நத்வம் ஸித்தம்.

இது பர்யந்தம் தேசிகன் ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தை எவ்விதம் வளர்த்தார் என்பது ஒருவாறு விளக்கப்பட்டதாகவாகிறது. இனி தமிழ் வேதாந்தத்தை எவ்விதம் வளர்த்தாரென்பதை சற்று ஆராய்வோம்.

திருவாய்மொழியின் ஸாரார்த்தங்களை நன்கு விளக்கிக் காட்டக்கூடிய ஒரு க்ரந்தத்திற்குத் ''த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி'' என்று திருநாமம் சாற்றியிருப்பதால் தமிழ் வேதமாகிற திவ்யப்ரபந்தத்திற்கு திருவாய்மொழியானது உபநிஷத் என்று ஏற்படுகிறது. வேதமென்றுரைன்றிருந்தால் உபநிஷத் என்று ஒன்று இருக்கவே செய்யும். வால்மீகி பகவான்கண்ட சரணாகதி வேதமான ராமாயணத்திற்கு அபய ப்ரதாந ப்ரகரணம் உபநிஷத். ஐந்தாவது வேதமாகிற பாரதத்திற்கு, பகவத்கீதை உபநிஷத். அவ்விதமே தமிழ் வேதமான திவ்யப்ரபந்தத்திற்கு திருவாய் மொழிஉபநிஷத். இந்த தமிழ்வேதாந்தமாகிற திருவாய்மொழிக்கு தேசிகன் நிகமபரிமளமென்று மிக, விரிவான வ்யாக்யானம் அருளிச் செய்தாரென்றும், அது லுப்தமாய் விட்டதென்றும் சிலர் சொல்லுகிறார்கள். தேசிகனிடத்தில் ஸ்ரீவைஷ்ணவர்கள் சென்று எல்லா க்ரந்தங்களுக்கும் அத்யத்புதங்களான வ்யாக்யானங்களை இயற்றுகின்ற தேவரீர் திவ்ய ப்ரந்தங்களுக்கும் ஒரு அத்யத்புதமான வ்யாக்யானம் இயற்ற வேண்டுமென்று ப்ரார்த்தித்ததாகவும் அதற்கு தேசிகன், ''சோழியன் யாவற்றையும் சுவைத்துவிட்டான், நமக்கு சக்கையே காணுமுள்ளது'' என்றருளிச் செய்ததாகவும் சிலர் சொல்லுகிறார்கள். இங்கு சோழியனென்பதால் பெரிய வாச்சான் பிள்ளையை குறிப்பிட்டாரென்று கொள்க. பரம காருணிகரான பெரியவாச்சான்பிள்ளை நாலாயிர திவ்யப்ரந்தத்திற்கும் வெகு அழகான மதுரமான கம்பீரமான வ்யாக்யானத்தை அருளிச் செய்திருக்கிறபடியினாலே, நாம் அதற்கு உரை இயற்றவேண்டிய அவசியமில்லை என்று ஸாதித்தார் என்பதே அவ்வாக்யத்தின் கருத்து.

''பொய்கை முனி பூதத்தார்...என்றிவர்கள் மகிழ்ந்து பாடும் செய்ய தமிழ் மறைகள் நாம் தெளியவோதித்தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே'' என்கிற பாசுரத்தில் இதிஹாஸபுராணங்களைக் கொண்டு அறிய முடியாததான வேதபாகங்களையும் ஆழ்வார்களின் அருளிச் செயலைக் கொண்டு நன்கு உணரலாமென்றருளிச்செய்திருப்பதனால், ப்ரபந்தங்களின் தனிச் சிறப்பு உணர்த்தப்பட்டதாகவாகிறது.

ஸ்தோத்ர ரத்நபாஷ்யத்தில், பராசரப்ரபந்தாதபி வேதாந்தரஹஸ்யவைசத்யஹேது பூதை: ஸத்ய:பரமாத்மநி சித்தரஞ்ஜகதமை: ஸர்வோபஜீவ்யை: உபப்ரஹ்மணை:'' என்று திருவாய்மொழியைப் பற்றி அருளிச் செய்ததானது மிகவும் குறிக்கொள்ளத் தக்கது. பராசரர் இயற்றிய புராணரத்நமாகிற விஷ்ணு புராணமானதுவேதாந்த ரஹஸ்யங்களை மிகத் தெளிவாகக் காட்டக்கூடியது. அதைக் காட்டிலும் மிக ஸ்பஷ்டமாக வேதாந்தார்த்தங்களை விளக்கிக் காட்டுவது திருவாய் மொழி. பரம நாஸ்திகனையும் தன்னை ஒரு தரம் ஸேவித்த மாத்திரத்தினாலே பரமாத்மாவினிடத்தில், ஈடுபடுத்தக் கூடியதாயும், எல்லோருக்கும் உபஜீவ்யமாயுமுள்ளது இத்திருவாய் மொழி என்றருளிச் செய்தார் ஸ்ரீமதுரகவியாழ்வார். ''அருள் கொண்டாடு மடியவரின்புற அருளினனவ் வருமறையின் பொருள்'' என்றருளிச்செய்ததும் கீழ்ச் சொன்ன ஸ்ரீதேசிக சூக்தியின்

திருவவதாரத்தை மனதில் கொண்டுதான் போலும். அருள் கொண்டாடு மடியவர் ஸ்ரீதேசிகனே. ஸ்ரீ தேசிகனேயன்றோ தயாசத கததினுல் ஸ்ரீநிவாஸனின் அருளை மிக உயர்ந்த ரீதியில் கொண்டாடினுர். பொலிக பொலிக என்கிற பாசுரத்தில் ஆழ்வார் எம்பெருமானு ருடைய திருவவதாரத்தை ஸூசிப்பித்தமாதிரி, மதுரகவிகளும் அருள் கொண்டாடுமடியவர் என்பதால் ஸ்ரீதேசிகனின் திருவவதாரத்தை யும் அவருக்கு ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளிலிருக் கும் ஈடுபாட்டையும் உணர்த்துகிருரென்பது மிகையாகாது. த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நா வளியில் 'ஸார: ஸாரஸ்வதாநாம் சடரிபுபணிதி: சாந்தி சுத்தாந்தஸீமா, மாயா மாயாமிபீ: ஸ்வ குணவிததிபி: பந்தயத்திம் தயந்தி | பாரம் பாரம் பரீதோ பவஜலதி பவந் மஜ்ஜநாநாம் ஜநா நாம் ப்ரத்யக் ப்ரத்யக்ஷயேத்ந: ப்ரதி நியத ரமாஸங்கிதாநம் நிதாநம், என்கிற ச்லோகத் திஞல் ஆழ்வாரின் திவ்யசூக்தியான திருவாய் மொழியின் அஸிதரஸாதாரணமான பெரு மையை அருளிச் செய்தார்.

ஸ்ரீ சடகோபன் என்கிற ஆழ்வாருடைய திவ்ய ஸூக்தியான திருவாய்மொழியானது ஸரஸ்வதியின் விலஸிதங்களான எல்லா சாஸ்த்ரங்களிலும் ஸாரமானது. ராஜஸ்த்ரீகள் அந்தப் புரத்தை விட்டு வெளியே போகாதது போல் சாந்தி என்கிற ரஸமானது இந்த பரபந் தத்திற்குள்ளேயே மிகவும் நிரம்பியிருக்கிறது. இதை அர்த்தத்தோடு அனுபவிக்கிறவர் களுக்கு சாந்தி பூர்ணமாக உண்டாகும் என்ற படி. பலமுள்ள ஸத்வம், ரஜஸ், தமஸ், என்கிற தன்னுடைய குணங்களாலே ஜீவர்களைக் கட்டுப் படுத்துகிற மாயையை பானம் பண்ணு கிறது இதை யனுஸந்திப்பவர்கள் ப்ரக்ருதி கார்யங்களான தேஹேந்திரியாதிகளுக்கு பரவசமாக மாட்டார்கள் என்றபடி அநாதிகால மாக ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தில் மூழ்கிக் கிடக்கிற ஜனங்களுக்குக் கரையாகிறது. இவ்வளவு மஹிமை பொருந்திய இந்த ஸ்ரீஸூக்தியானது லக்ஷ்மீபதியாகிற நிதியை, ஆழ்வாரிடத்தில் பக்தி படைத்த நமக்கு நன்ருக ப்ரகாசப்படுத்த வேண்டுமென்பது ச்லோகத்தின் கருத்து.

ஸம்ஸ்க்ருதப்பாஷைதவிர பிறபாஷைகள், வைதிகர்களான நமக்கு நிஷித்தங்களன்ரோ. அவ்விதமாகில் தமிழ் பாஷையிலுள்ள ப்ரபந் தங்கள் நமக்கு உப ஜீவ்யங்களாகுமா. பாஷாந் தரத்தில் பாடின கைசிகாதிகளை ஒரு ராஜா, தன் நாட்டினின்றும் வெளியேற்றவில்லையா என்கிற கேள்விகளுக்கு,

"பாஷாகீதி: ப்ரசஸ்தா பகவதிவசநாத், ராஜ வச்சோபசாராத், ஸாசாகஸ்த்யப்ரஸூதா த்விதி பரிஜக்ருஹே, பூமிகாபேதயோக்யா | யத்தத் க்ருத்யம் ச்ருதீநாம் முநிவிஹிதை: ஸேதி ஹாஸை: புராணை: தத்ராஸௌ ஸத்வஸீம்ந: சடமதநமுநே: ஸம்ஹிதா, ஸார்வ பௌமீ" என்கிற ச்லோகத்திஞல் ஆணித்தரமான ஸமா தான மருளிச் செய்தார்.

எம்பெருமான் விஷயத்தில் தமிழ் பாஷை யால் பாடுவது உயர்ந்ததுதான். பாஷாந்தரத் தில் பாடினகைசிகாதிகளை வெளியேற்றின ராஜாவைக் குறித்து யமதர்மராஜா "ஹரி கீர்த்திம் விநைவாந்யத் ப்ராஹ்மணேந, நரோத்தம | பாஷாகாநம் நகாதவ்யம் தஸ்மாத் பாபம் த்வயாக்ருதம்" என்று சொன்னதாக மாத்ஸ்ய புராணத்தில் காண்கிறபடியால் பகவானைத் தவிர வேறு விஷயத்தை வேறுபாஷையினுல் பாடினுல் அதுவே பாபமாகும். பகவானைப் பற்றியதாக இருந்தால் பாஷாந்தரமும் உபஜீவ் யமே என்றேற்படுகிறதன்ரோ, வேறு விஷயத் தைப் பற்றினதாகவிருந்தால் ஸம்ஸ்க்ருத மாக இருந்தாலும் அநாதரணீயமே. ஜைந பௌத்தாதி நாஸ்திக க்ரந்தங்கள் ஸம்ஸக்ருதத் திலன்ரோ எழுதப்பட்டுள்ளன.

ராஜாவைப் போலே எம்பெருமானுக்கு உப சாரம் செய்யவேண்டுமென்று சாஸ்த்ரம் பேசு கிறது. ராஜாவை எல்லாபாஷைகளாலும் பாடி உபசரிக்கிருர்கள். அவ்விதமே ராஜாதி ராஜ ஞன எம்பெருமானையும் எல்லா பாஷைகளி ஞலேயும் பாடி உபசரிக்கலாம். அகஸ்த்யர் என்கிற மஹரிஷியிடமிருந்து தமிழ் பாஷை ஆவிர் பவித்தபடியாலும், ப்ராஹ்மணன் முதலிய எல்லா வர்ணத்தாருக்கும் அது ஏற்கத் தக்கதேயாகும். ரிஷிகளால் செய்யப்பட்ட இதி ஹாஸங்களாலும் புராணங்களாலும் வேதத் திற்கு என்ன உபகாரம் செய்யப்படுகிறதோ அதில் ஸத்வகுணத்தினெல்லையிலிருக்கிற சட கோபனென்கிறயோகியால் அருளப் பட்ட ப்ரபந்தமானது உயர்ந்த ஸ்தானத்தை அடைந் திருக்கிறது. வேதத்தின் அர்த்தத்தைத் தெளி வாகக் காட்டும் விஷயத்தில் இதிஹாஸங்களை யும் புராணங்களையுங் காட்டிலும் மிகவும் உயர்ந்தது திருவாய்மொழி என்று கருத்து. இத்திருவாய் மொழியின் பெருமை பாதுகா ஹஸரத்திலும் "நித்யம் ஜாதா சடரிபுதநோ: நிஷ்பதந்தி முகாத்தே ப்ராசீநாநாம் ச்ருதிபரிஷ தாம் பாதுகே பூர்வகண்யா" என்கிற ச்லோகத் திஞலருளிச்செய்தார். இதில் ஹே பாதுகா தேவி, நம்மாழ்வாரென்று வடிவு படைத்த உன் வாக்கிலிருந்து திருவாய்மொழி பெருகினபடி

யாலேதான், தமிழ் பாஷை வேதங்களைக் காட்டிலும் முதல் முன்னம் எண்ணக்கூடிய பெருமையை அடைந்ததென்று நிருபித்தருளினர்.

ஆழ்வார் ஆணாகப் பிறந்திருந்தும் பெண் பாவத்தை ஏன் அடைந்தார். ஆழ்வார் பாசுரங்களில் ச்ருங்கார ரஸமன்றோ ததும்புகிறது. அப்படிப்பட்ட காமுகரான ஆழ்வாரை பக்தாக்ர கண்யரென்று எவ்விதம் கொண்டாடலாம். பக்ஷிகளைத் தூது விடுகிறாரே அதன் கருத்தென்ன என்கிற கேள்விகளுக்கு.

பாஞ்சாலிகாத்ரசோபாஹ்ருத ஹ்ருதய வதூவர்கபும் பாவநீத்யா பத்யௌ பத்மாஸஹாயே ப்ரணயினி பஜத: ப்ரேயஸீ பாரதந்த்ர்யம் பக்தி: ச்ருங்கார வ்ருத்யா பரிணமதிமுநே: பாவபந்த ப்ரதிம்நா, யோகாத் ப்ராகுத்தராவஸ்திதிரிஹ விரஹோ தேசிகாஸ்த்வத்ர தூதா:" என்கிற ச்லோகத்தினால் தெளிவானவிடையளிக்கிறார்.

பாஞ்சால தேசத்து ராஜாவின் பெண்ணான த்ரௌபதியின் உடம்பின் அழகாலே இழுக்கப்பட்ட மனதை உடையவர்களான பெண்களின் கூட்டங்கள் மானஸிகமாக, ஆணுக்கு ஏற்படும் விகாரத்தை யடைந்தார்களாம். அதுபோலவே ஆழ்வாரும் லக்ஷ்மீபதியும் ஆச்ரிதர்களிடத்திலாசையுள்ளவனும் தமக்கு ஸ்வாமியுமான எம்பெருமானுக்குத்தான் நாயகியாய் உட்பட்டிருக்க ஆசைப்பட்டார். அவருடைய பக்தியானது அனுராகத்தின் மிகுதியினாலே ச்ருங்கார வ்யாபாரமாக மாறுகிறது. யோகத்தில் மனதாலே, அவனை யனுபவித்துக் கொண்டிருந்து அந்த அனுபவம் நின்றபோது அவருக்குப் பிரிவு, அந்த அனுபவமிருந்தபோது சேர்க்கை. பிரிவுகாலத்தில் தூது அனுப்பப் பட்டவர்கள் ஞானம்; கர்மம் என்கிற இரண்டு சிறகுள்ள ஆசார்யர்களே என்றபடி.

சேர்ப்பாரை பக்ஷிகளாக்கி என்கிற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீ ஸூக்தியிலுமிவ்வர்த்தம் காணலாம்.

திருவாய்மொழியின் பரமஸாரார்த்தத்தையும் ஒவ்வொரு சதகத்தால் கிடைக்கக் கூடிய ஒவ்வொரு திருக்கல்யாண குணங்களையும் தேவ: ஸ்ரீமாந் ஸ்வஸித்தே: கரணமிதி வதந் ஏகமர்த்தம் ஸஹஸ்ரே, ஸேவ்யத்வாதீந் தசார்த்தாந் ப்ரதகிஹசதகை: வக்தி தத்ஸ் தாபநார்த்தாந்—ஜககைக ச்யாத் பரத்வாதிஷு தச குணேஷ்வாயதம்தே ததா தே தத்தத் காதா குணாமநுவிததி தத்பங்க்தய: பங்க்தி ஸங்க்யா;'

"ஸேவ்யத்வாத்போக்யபாவாத் சுபதநுவிபவாத், ஸர்வபோக்யாதிகத்வாத், ச்ரேயஸ்தத்தேதுதாநாத், ச்ரித விவசதயா, ஸ்வாச்ரிதாநிஷ்டஹ்ருத்வாத் | பக்தச்சந்தாநுவ்ருத்தே: நிருபாதிகஸுஹ்ருத் பாவத: ஸத்பதவ்யாம் ஸாஹாய்யாச்ச ஸ்வஸித்தே: ஸ்வயமிஹ கரணம் ஸ்ரீதர:ப்ரத்யபாதி'' என்கிற இரண்டு ச்லோகங்களினால் தெளிவாக்கினர். லக்ஷ்மியோடு கூடிய எம்பெருமான் தன்னை அடைவதற்குத் தானே காரணம் என்கிற ஒரே அர்த்தத்தை ஆயிரம் பாட்டுக்களில் சொல்லுகிறவராய் அதை ஸ்தாபிப்பதற்காக ஸேவ்யத்வம் முதலான பத்து குணங்களைத் தனியே பத்து பத்துகளாலே அருளிச் செய்கிறார். அவைகள் ஒவ்வொரு திருவாய் மொழியால் காட்டப்பட்ட பரத்வம் முதலான பத்து குணங்களுக்கு அதீனமாயிருக்கின்றன. அந்தந்த திருவாய் மொழியின் குணங்களும் அதிலடங்கிய பத்துப் பாட்டுக்களின் குணங்களுக்கு அதீனமாயிருக்கின்றன என்பது முதல் ச்லோகத்தின் பொருள்.

ஸேவிக்கத் தகுந்தவனாயிருப்பதாலும், போக்யனாயிருப்பதாலும், பாபத்தைப் போக்குவதையும் அழகாயுமிருக்கும் திருமேனியை உடையவனாயிருக்கும் பெருமையினாலும் எல்லா போக்யமான வஸ்துக்களைக் காட்டிலும் அதிக போக்யனாயிருப்பதாலும், புருஷார்த்தங்களையும் அவைகளுக்குக் காரணமாயிருப்பவைகளையும் கொடுப்பதாலும், ஆச்ரிதபரவசனாயிருப்பதாலும் தன்னை அடைந்தவர்களின் அநிஷ்டங்களைப் போக்கும் தன்மையாலும், பக்தர்கள் அபிப்ராயப்படி நடப்பதாலும், இயற்கையாகவே க்ஷேமத்தை நினைக்கும் ஸ்வபாவத்தாலும் மோக்ஷத்துக்குப் போகும் வழியில் உதவியைச் செய்வதாலும், லக்ஷ்மீபதியானவன் தன்னை அடைவதற்குத் தானே காரணமென்று திருவாய்மொழியில் சொல்லப்படுகிறன் என்று இரண்டாவது ச்லோகத்தின் பொருள்......

கலியனுரைகுடிகொண்ட கருத்துடையோன் என்று தேசிகன் கொண்டாடப்படுகிறார். திருமங்கை மன்னன் திருநெடுந்தாண்டகத்தில் 10 வது பாசுரத்தில் "தென்னானாய், வடவானாய், குடபாலானாய் குணபாலமதயானாய்'' என்று எம்பெருமானை யானையாக வர்ணித்தார். அடுத்த பாசுரத்தில் நாயிகா பாவத்தை ஏறிட்டுக்கொண்டு தாய்ப் பாசுரத்தாலே பாடுகிறார்.

தேசிகனும் தேவநாயக பஞ்சாசத்தில் "ஜயவிபதபதேத்வம்...கருட ஸரிதநூபே கந்தஹஸ்

தீவ தீவ்யம்'' என்கிற ச்லோகத்தில் பகவானை யானையாக வர்ணித்தார். அடுத்த ஸ்தோத்ர மான அச்யுத சதகத்தில் பெண் பாவத்தை யடைந்து ப்ராக்ருத பாஷையில் பாடினர். இம் மாதிரி பல ஒற்றுமைகளைக் காணலாம்.

''பாண்பெருமானருள் செய்த பாடல் பத்தும், பழமறையின் பொருளென்று பரவு கின்றோம்'' என்றும் வேதியர் தாம் விரித்துரைக் கும் விளைவுக்கெல்லாம் விதையாகுமிது வென்று விள்ம்பினேமே'' என்றும் தாமே கொண்டாடிய அமலனுதிப்பிரான் பத்துப் பாட்டுகளுக்கு மாத்திரம் ஸ்வாமி, முநிவாஹந போகம் என்ற அழகியதான ஒரு வ்யாக் யான மருளிச்செய்தார். உபநிஷத்துக் களில் பரமஸாரமான ஈசாவாச்யத்திற்கும், ப்ரபந்தங்களில் பரமஸாரமான அமலனுதி பிரா னுக்கும் வ்யாக்யானமருளிச் செய்தார் என்பது முக்யமாக உணரத் தக்கது.

ப்ரபந்தஸாரம் என்கிற அத்புதமான ப்ரபந்த ரத்நத்தில் ஆழ்வார்கள் அவதரித்த நாள், ஊர், திங்கள், அடைவு, திருநாமங்கள், அவர் தாம் செய்த வாழ்வான திருமொழிகள், அவற்றுள் பாட்டின்வகையான தொகை, இலக்கம், முதலியவைகளை மிகஸ்பஷ்டமாக நிருபித்து ''ஸௌத்ரீஸம்க்யா சுபாசீ என்கிற அதிகரண ஸாராவளி ச்லோகத்தால் ஸூத்திரத்திற்கு வ்ய வஸ்தை செய்ததுபோல் (சக்பந்தி செய்தது போல்) திவ்யப்ரபந்தத்திற்கும் பின் எவ்வித மாற்றமும் ஏற்படாதபடி வ்யவஸ்தை செய்தது பரமோபகாரமாகும்.

தேசிகன் மாதிரி ஆசார்யனுக்கு வேண்டிய எல்லாத் திருக்கல்யாண குணங்களும் ஒருங்கே அமையப் பெற்ற உத்தமரான சாந்த ஸ்வரூபியான ஒரே ஆசார்யன், நம் கார்ப்பங் காடு ஸ்வாமியே என்பதை உலகறியும். ஞாநாநுஷ்டாந வைராக்ய நிதியாகவும், விசத வாக்சிகாமணியாகவும், சரீரகுணங்களும் ஆத்ம குணங்களும் நிரம்பப் பெற்றவராகவு முள்ள அந்த ஸ்வாமியின் ஷஷ்ட்யப்த பூர்த்தி மஹோத்ஸவத்தில் அடியேனுக்கும் இவ்வித மான ஒருகைங்கர்யத்தை அனுக்ரஹித்த கமிட்டியாருக்கு அடியேனுடைய நன்றி. ஸ்வாமி பல்லாண்டு பல்லாண்டாக எழுந்தருளி யிருந்து இவ்விதமே சதாபிஷேகத்தையும் நடத்திக்கொண்டு, உலகத்தை உய்விக்க வேண்டுமென்று கீதாசார்யனை பார்த்தசார தியை அநவரதம் ப்ரார்த்திக்கின்றேன்.

'சுபம்'

---

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம :

# மாமுனி காட்டும் மாண்புடை நெறி

ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு வேங்கடாசாரியர் ஸ்வாமி

நாதமுனிகள் முதலாய், எம்பெருமானுர் நடுவாய், மணவாளமாமுனிகள் ஈருயுள்ள மஹான்களைப் பூருவாசாரியர்கள் என்பர். அப்பூருவாசாரியர்களுள், எம்பெருமானுர் ஏனைய ஆசாரியர்களிலும் மிகப் பெருமை பெற்றிருப்பவர். காரணம் பின் வருமாறு :

(1) அநாதியாய் விளங்கி வருமதான ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தை எம்பெருமானுர் பல படிகளாலும் வளர்த்தருளினுர் என்பது பற்றி, ஸ்ரீரங்கநாதன் இந்த ஸித்தாந்தத்திற்கு "எம்பெருமானுர் தரிசனம்" என்றே பேரிட்டு ஸ்தாபித்து வைத்தான். இந்த உண்மையை மணவாள மாமுனிகள்,

"எம்பெருமானுர் தரிசனமென்றேயிதற்கு
நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார்—
அம்புவியோர்
இந்தத் தரிசனத்தையெம்பெருமானுர் வளர்த்த
அந்தச் செயலறிக்கைக்கா"

என்று அருளிச் செய்திருக்கிருர். உபதேச ரத்தின மாலையில் காண்க.

(2) நாதமுனிகள் நம்மாழ்வார் பரமக்ருபைக்குப் பாத்திரமாயிருப்பவர். "நம்மாழ்வார், எம்பெருமானுர் திருவவதாரம் செய்தருளுவதற்கு முன்னமேயே அவ்எம்பெருமானுரைத் தம் பரம க்ருபையினுல் காட்டிக்கொடுக்க, நாதமுனிகள் கண்டு அனுபவித்தவர்" என்பது பிரஸித்தம். இங்கு "யஸ் ஸ்வாபகாலே கருணாகரஸ்ஸந் பவிஷ்யதாசார்யவரஸ் ஸ்வரூபம் | ஸந்தர்சயாமாஸ மஹாநுபாவஸ் தன் காரிஸூநும் சரணம் ப்ரபத்யே|| என்று ஸ்வப்நத்திலே நாதமுனிகளுக்கு, பவிஷ்யதாசார்யவர ஸ்ரூபத்தை நிர் ஹேதுக காருண்யத்தாலே ஆழ்வார் காட்டிக்கொடுத்தருளினுர்—என்னும் சரமோபாய நிர்ணயத்தைக் காண்க.

(3) எம்பெருமானுர், ஆளவந்தார் விசேஷ கடாக்ஷத்திற்குப் பாத்திரராயும் இருப்பவர். "ஆமுதல்வன் இவன்" என்னும் பாசுர வியாக்கியானத்தில் உள்ள "திருப்புற்றுக்குக் கிழக்கே கரியமாணிக்காழ்வார் திருமுன்பின் ஸோபானத்திலே ஆளவந்தார் எழுந்தருளியிருக்க, உடையவர் திருப்புற்றுக்குக் கிழக்காக எழுந்தருளி நிற்கிறவரைக் கண்டு, "ஆமுதல்வன் இவன்" என்று அருளிச் செய்தாராம்" என்னும் ஈடு இங்கு அனுபவிக்கத்தக்கதாம்.

(4) தேசிகன், 'பத்யு:ஸம்பமிநாம் ப்ரணம்ய சரணௌ தத்பாத கோடீரயோ ஸம்பந்தேந ஸமித்யமாந விபவாந் தந்யாம்ஸ்ததாந்யாந் குரூந்" என்று ந்யாய பரிசுத்தியின் தொடக்கத்திலும், "அமுநா தபநாதிசாயி பூம்நா யதிராஜேந நிபத்த நாயகச்ரீ: | மஹதீ குரு பங்க்திஹாரயஷ்டிர் விபுதாநாம் ஹ்ருதயங்கமா விபாதி" || என்று யதிராஜ ஸப்ததியிலும் அருளிச் செய்திருக்கிருர். மேற்கூறிய இரு சுலோகங்களுள், முன்னது—"எம்பெருமானுர் திருவடிகளையும், எம்பெருமானுர் திருவடிகளை எவர் வணங்குகின்றனரோ, எம்பெருமானுர் எவரை வணங்குகின்றனரோ, அவ் இருவகையிலுள்ளவரும் இவ்வாறு எம்பெருமானுரோடு தொடர்புள்ளவரும். அத்தொடர்பினுலேயே நன்கு விளங்குகின்ற ஞானம் முதலிய சிறப்புள்ளவருமான தந்யர்களான ஏனைய ஆசார்யர்களையும் வணங்கி" என்னும் கருத்தையும், பின்னது, "ஸூரியனிலும் மிக்க ஒளியுடைய எம்பெருமானுராகிற நாயக ரத்தினத்தைக் கொண்டுள்ள பெரிய குருபரம்பரையாகிற முத்தாரமானது வித்துவான்களுக்கு ஹ்ருதயங்கமமாயிருக்கிறது" என்னும் கருத்தையும் கொண்டுள்ளன—இக்கருத்துக்களைக் காண்பவர்க்கும் எம்பெருமானுர் பெருமை மிகத் தெளிவு.

(5) மணவாள மாமுனிகள் திருவாய்மொழிப்பிள்ளை திருவடிகளைப்பற்றி யிருந்தவர். எனினும், அத்திருவாய் மொழிப்பிள்ளை எம்பெருமானுர் திருவடிகளையே பூசித்திரும் என்று, தம் பரமக்ருபையினுலே காட்டிக் கொடுக்க, அவ் எம்பெருமானுர் திருவடிகளில் ஸேவையைச் செய்து கொண்டிருந்தவர்—மணவாள மாமுனிகள், தாம் அருளிச் செய்த யதிராஜவிம்சதியில், "ஸ்ரீமந் யதீந்த்ர பவதீய பதாப்ஜ ஸேவாம் ஸ்ரீசைலநாத கருணா பரிணாம தத்தாம் | தாமந்வஹம் மம விவர்த்தய நாத தஸ்யா: காமம் விருத்த மகிலம் ச நிவர்த்தய த்வம்" என்று அருளிச் செய்திருக்கிருர் இதன் கருத்து :—

பகவத் கைங்கரிய ஸ்ரீயை உடைய யதீந்திரரே ! எந்தை திருவாய் மொழிப் பிள்ளையின் னருளால் உபகரித்தருளினதாய் தேவரீர் திருவடித்தாமரைகளில் எப்போதும் உள்ள அனுபவகைங்கரியமாகிற ஸேவையை நாடோறும் அதில்லாவிடில் செல்லாமையாகிற இயல்பு உடைய அடியேனுக்கு, மேன் மேலும் தழைத்துச்செல்லும்படியான வளர்த்தித் தந்தளருவேணும். ஸ்வாமியே! அந்த ஸேவைக்குத் தடையான விஷய ப்ராவண்யம் என்னும் காமத்தையும் போக்கியருள வேணும்'' என்பது

இதனாலும், எம்பெருமானாருக்குள்ள பெருமை நன்கு விளங்கும்: "இங்ஙனம், நம்பெருமாள், நம்மாழ்வார், நாதமுனிகள், ஆளவந்தார், தேசிகன், திருவாய் மொழிப்பிள்ளை, மணவாள மாமுனிகள் ஆகிய அனைவருமே எம்பெருமானாருக்குள்ள முக்கியத்வத்தைப் பிரகாசப்படுத்தியிருக்கிறார்கள்'' என்பதைச் சுருக்கமாய்க் கண்டோம்—

இவ்வாறு முக்கியத்வம் பெற்றுள்ள எம்பெருமானார் திருவடிகளையே மணவாள மாமுனிகள் தம் ஆத்ம க்ஷேமத்திற்கும் ஏனையோரான நம் ஆத்ம க்ஷேமத்திற்கும் தஞ்சமாகத்தாம் அறுதியிட்டிருந்தவர். இவ் உண்மையைப் பின்வருமாறு நாம் நன்கு அறியலாகும் :—

"வேதங்களும் அவ்வேதப் பொருள்களைத் தெரிவிக்க வந்துள்ள ஸ்ம்ருதி முதலிய நூல்களும் பரமபுருஷனுடைய ஆஜ்ஞைகளாம். அவற்றில், செய்யலாகாது என்று கூறப் பெற்றுள்ளவையை நாம் செய்கிறோம் ; செய்ய வேண்டும் என்று கூறப்பெற்றுள்ளவையைச் செய்யாது விட்டு விடுகிறோம். பரமபுருஷன் திருவுள்ளம் புண்படுமாறு அவன் கைங்கரியத்திற்குள்ள பொருள்களை அக் கைங்கரியத்திற்கு இல்லை செய்து நமக்கும் நம்மைச் சேர்ந்தவர்க்கும் பயன்படும்படி செய்து கொள்கிறோம். அவனடியார் திருவுள்ளம் புண்படும்படி நடக்கிறோம். அவனும் அவனடியார்களும் இருப்பதையே நாம் பொறுப்பதுமில்லை. இங்ஙனமான பாவங்களைத் தொன்று தொட்டு மனம், வாக்கு, காயம் இவற்றால் செய்து கொண்டிருக்கிறோம். இனி, வருங்காலத்தில் செய்யவும் போகிறோம். இவ்வாறான எண்ணற்ற, நம்மால் செய்யப் பெற்றுள்ள நம் பாவங்களே நம் ஆத்ம க்ஷேமத்திற்குத் தடையாம். இத்தடை நீங்குவதற்கு எம்பெருமான் க்ஷமை என்னும் குணத்தைத் தவிர வேறொன்றும் ஏதுவன்று. எம்பெருமான் செய்ய வேண்டிய அந்த க்ஷமையை அவன் ஸந்நிதியில் வேண்டிக்கொண்டிருக்கிறார்—எம்பெருமானார் திருவடிகளில் ஸம்பந்தம் பெற்றவர்களுக்கு அவருக்கு வர்யனான எம்பெருமான் க்ஷமைதான் க்ஷேமத்தைச் செய்கிறது'' என்பதே மணவாள மாமுனிகள் அறுதியிட்ட அவர்தம் பெருமை பொருந்திய கொள்கையாம். இக் கொள்கை "காலத்ரயேபி கரணத்ரய நிர்மிதாதி பாபக்ரியஸ்ய சரணம் பகவத் க்ஷமைவ | ஸா சசவயைவ கமலாரமணேர்த்திதா யத் க்ஷேமஸ்ஸஏவஹி யதீந்த்ர பவச் ச்ரிதாநாம்'' என்னும் அவர்தம் சுலோகத்தில் நன்கு விளங்குகின்றது—

இவ்வாறு மணவாள மாமுனிகள் காட்டியபடி எளிய எம்பெருமானார் திருவடிகளில் ஸம்பந்தமடியாக ஏற்படும் எம்பெருமான் க்ஷமையே நமக்கு க்ஷேமங்கரம் என்பதை நாம் நம்பி, எம்பெருமானார் திருவடிகள் ஸம்பந்தத்தை, அவ் எம்பெருமானார் திருவடிகளில் ஸம்பந்தம் பெற்றவர்களும் அவர் தாம் ஏற்படுத்தியருளின எழுபத்தி நான்கு ஸிம்மாஸனாதிபதிகளுமான நம் பூர்வாசாரியர்களின் ஸந்ததிகள் முகமாகப் பெற்று, ஆத்ம க்ஷேமத்தை அடைந்து வாழ்வோமாக !

———